# விரைவில் வருகிறது!



அவர் இந்தியா
பிலிம்ஸ்

# என் வீடு

டைரக்ஷன்
நாகய்யா

N 44

விபரங்களுக்கு:— அவர் இந்தியா பிலிம்ஸ், மதராஸ்-17.




# பெர்குஸனுடன்

இணைக்கப்பட்ட

## ஹோவார்டு

## ரோடாவேடரினுல்

இந்தியன் பேட்டென்ட் நெ. 145449

- உழுதல்
- பயிரிடுதல்
- நிலம்வெட்டிக் கிளைத்தல்
- கொழுக்களால் குத்தித்தோண்டுதல்

"ரோடா வேடர்", எளிதில் மாற்றி உபயோகிக்கக்கூடியதும், சிக்கனமானதும், திறன்வாய்ந்ததுமான பலவித உழவுத் தொழில் சாதனங்கள் ரோடா வேடரும் ஒன்று. அது வேலி, புதர்களின் ஓரமாகச் செல்லவேண்டிய எல்லாவித வேலைக ளுக்கும் ஒரங்களிலுள்ள சிறு நிலங்களுக்கும் ஏற்ற லட்சிய சாதனம். புதர்களைக்களைந்து, இச்சிறு நிலப்பாகங்களையும், செங்குத்தான திடல்களையும் பயிரிடுவதற்கு ஏற்றவையாகச் செய்கிறது. சுருங்கச்சொல்லில் "ரோடாவேடர்" நீங்கள் பயிரிடும் நிலப்பரப்பை அதிகமாக்குகிறது. இதுவே அதிக விளைச்சலுக்கும், அதிக லாபத்திற்கும் ஆன வழிகாட்டி.

## கமாணி எஞ்சினீயரிங் கார்ப்போரேஷன் லிட்.

கமாணி சேம்பர்ஸ், பலார்டுஎஸ்டேட், பம்பாய்

F. ஐ. ப (ந) T

**டீலர்கள்:**-கமாணி இன்ஜினீயரிங் கார்ப்பரேஷன் லிட்., சாகர்மான்ஷன், ஜோன்ஸ் தெரு, பிராட்வே, மதராஸ்-1, ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (தென் இந்தியா) லிட்., கோயம்பத்தூர்.

வெப்ஸ் பார்ம் மெகானிஸேஷன், 30, மகாத்மா காந்தி ரோடு, பெங்களூர் & மைசூர்.

**ஸ்டாக்கிஸ்ட்கள்:**-காமினேனி பார்மிங் கார்ப்பரேஷன், குடிவாடா. S, பாப் பண்ண செட்டி, ஹோஸ்பேட், சுந்தரம் ஸன்ஸ், 67 பிரிட்ஜ் ஸ்டேஷன் ரோடு தல்லாகுளம் P. O. மதுரை: பார்மிங் மெஷினரி & சர்வீஸஸ், பெஸன்ட் ரோட், பக்கிங்ஹாம்பேட் போஸ்ட், விஜயவாடா: கள்ளிக்கோட்டை, உதகமண்டலம், திருவனந்தபுரம் எலக்டிரிக் டைஸல் எக்குப்மெண்ட் கம்பெனி, அல்லபீ: A. கோபாலகிருஷ்ணன் கோட்டாரம், கல்பட்டா, வெய்ாடு.

காவேரி

# பொருள் அடக்கம்

நந்தன மலர் 12 | மார்கழி இதழ் 5



குறிப்பு:

'காவேரி'யில் வெளியாகும் கட்டுரைகளிலுள்ள பெயர்கள் கற்பனைப் பெயர்கள். அவைகளில் அடங்கிய அபிப்பிராயங்களும் அவற்றை எழுதியவர்களுடையனவே. அவைகளுக்குப் பத்திரிகாசிரியர் பொறுப்பாளியல்ல.

# காவேரி

நந்தன ஸ்ரீ
மலர் 12

''சென்றிடுவீர் எட்டுத்திக்கும்—கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்''—பாரதியார்

மார்கழி
இதழ் 5


# புயல் விளைவித்த விழிப்பு

இந்த ஜில்லாவை ஆட்டி வைத்த பேய்ப் புயல் காரணமாக, **காவேரி** வாசகர்கள் கைக்குத் தாமதமாக வருகிறது.

புயலின் அகோரத் தாண்டவம் சொல்லில் அடங்காது. நூற்றுக்கணக்கான வருஷங்களாக வானளாவி வளர்ந்து சோலைகளிலும் சாலைகளிலும் கவர்ச்சியையும் இனிமையையும் அளித்து வந்த மரங்கள் வேரோடு பிடுங்கித் திருகி எறியப்பட்டுள்ளன. புயலில் அம்மரங்கள் ஆடின ஆட்டம் ஓர் காட்சி. எத்தகைய நாஸ்திகனும் இதைக் கண்ணுற்றால் சிந்தையில் ஆழ்வது நிச்சயம். மனித சக்திக்கு அப்பாற்பட்ட சக்தியுள்ளது, அது மனிதனையும் மற்றப் பிறவிகளையும் ஆட்டி வைக்கிறது என்பதை அவனால் மறுக்க முடியாது. மமதை கொண்டு, எல்லாம் தம் சிற்றறிவுக்குள் அடங்கியவை; தெய்வம் என்பது கற்பனைப் பொருள்; மதம் என்பது மனிதனுடைய அறிவை மயங்க வைக்கும் மது—என்றெல்லாம் பிதற்றி வந்த கக்ஷியினருக்கு இப்புயல் காற்று ஓர் சவால் விடுத்தது போன்றுயிற்று. தெரிந்தோ தெரியாமலோ அக்கக்ஷியில் உழன்ற அறிவிலிகளும் விழிப்படைந்தார்கள்.

ஒரு குடும்பம் வசிக்கும் கூரையின் மேல் மரம் முறிந்து விழுகிறது. சாமான்களை அப்புறப்படுத்தி, குடிசை வாசிகளும் தப்பிவிடுகிறார்கள். ஆனால் கடைசியாய் ஏதோ ஒன்றை மறந்து விட்டோம் என்று அவ்வீட்டுக்காரன் அதனுள் ஓடுகிறான். அந்தோ பரிதாபம்! மற்றோர் மரம் விழுந்து அவனைப் புதைத்து விடுகிறது. எல்லோரும் குடிசையில் தங்கிய பொழுது விழுந்த மரம் யாரையும் மாய்க்கவில்லை. வீட்டுக்காரனும் தான் தப்பினான். ஆனால் அவன் தனித்து வந்த பொழுது அவனுடைய உயிரைப் போக்கிவிட்டது. கிராமவாசிகள் சிந்திக்கிறார்கள். தற்செயல் (accident) என்று இதைத் தள்ளிவிட முடியவில்லை. அவனை மட்டும் குறி பார்த்துக் கொண்டு போவானேன்? எல்லாம் அவன்செயல் என்ற ஒரே முடிவுக்குத் தான் வரமுடிகிறது. கிராமத்து நாஸ்திகன் வாயடைத்து நிற்கிறான். அவன் நேரிலே கண்ட இக்காட்சியை எப்படி எள்ளி நகையாடமுடியும்? கோவிலில் சாமியில்லை என்று சொன்னபொழுது மக்கள் மயங்கினார்கள். பண்டிகைகளும் சடங்குகளும் அர்த்தமற்றவை என்ற கூற்று அனுபவமற்ற இளைஞர்களை அடிமையாக்கிற்று. ஆனால் இதைப்போன்ற பல நிகழ்ச்சிகள் மனதைத் தெளிவு படுத்திவிட்டன.

புயல் எளிய மக்களை மிகவும் வாட்டி விட்டது. சொத்துக்களை நாசமாக்கியது. வாழை, தென்னை, பலா, புளி—எல்லாம் சூறையாயின. உணவுப் பயிர்கள் பிழைத்துக்கொண்டன. புயலோடு கொட்டின மழை அவைகளுக்குச் செழிப்பூட்டியுள்ளது.

வேத காலத்து மனிதன் இயற்கைச் சக்திகளைப் போற்றி வணங்கி வந்தான். நவீன மனிதன் அவைகளை அடக்கி ஆள முயலுகிறான்; வெற்றிகொண்டோம் என்றும் இறுமாப்புறுகிறான். ஆனால் அவ்வப்பொழுது அவனுக்குக் கர்வபங்கம் ஏற்படுகிறது. வெகு சீக்கிரத்தில் இதை மறந்து விடுகிறான். மேலும் பிதற்றல்.

இதை அடக்க, சக்தி தாண்டவமாட வேண்டி வருகிறது. என்றுதான் மனிதன் தன்னடக்கத்தையும், படைப்பின் மகிமையையும் உணர்ந்து இறைவன்பால் அன்புகொண்டு நடக்கிருனே அன்றுதான் விமோசனம்.

நஷ்டம் வந்தால் கஷ்டமும் உடன் பிறக்கிறது. அதோடு மனத்தெளிவும் அகந்தை அகலவும் ஏற்படுகிறது. புயலில் சிக்குண்டு நஷ்டமடைந்தவர்களுக்கு நமது அனுதாபத்தைத் தெரிவிக்கிருேம். கவர்மெண்டாரும் பொதுமக்களும் ஆவன செய்து வருகிருர்கள். நஷ்டமும் கஷ்டமும் காலப்போக்கில் மறைந்து போம். ஆனல் இப்புயல் எழுப்பிவைத்த நல்லுணர்ச்சி மறையாமல் நின்ருல் மனிதன் உய்ய வழிபிறக்கும்.

## ஆந்திர மாகாணம்

58 நாள் பட்டினி கிடந்து உயிர் துறந்திருக்கிருர் பொட்டி ஸ்ரீராமுலு. இத்தியாகத்தின் பெருமையை யாரும் குறைத்துக் கூற முடியாது. பாஷாவாரி மாகாணப் பிரிவினையை எழுப்பியது காங்கிரஸ் கட்சியினர். அதைச் சரி என்று ஒத்துக்கொண்டால் ஆந்திர மாகாணப் பிரிவினைக் கிளர்ச்சியை யாரும் ஆட்சேபிக்க முடியாது. அப்பிரச்னை காலம் கடத்தப்படவே, காந்தியின் தீவிர சீடரான ஸ்ரீராமுலு அவர் காட்டிய வழியைப் பின்பற்றி உண்ணவிரதம் இருந்தார். திடசித்தத்துடன் 58-நாள் பட்டினி கிடந்து உயிர் துறந்தார். ஆந்திர மக்கள் கொந்தளிப்பதில் ஆச்சரியமில்லை.

மத்திய அரசாங்கத்தார் இவ்விஷயத்தில் சற்று கவனம் செலுத்தி இப்பிரச்னையைத் தீர்க்க முயன்றிருந்தார்களானல் இத்தியாகத்தை அனுவசியமாகச் செய்திருக்கலாம். உடனடியாக ஆந்திர மாகாணம் அமைத்துவிடுவதாயும் சென்னையைப்பற்றிப் பின்புதான் விசாரணை நடத்தித் தீர்மானிக்கப்படும் என்றும் கொஞ்சம் பிடியைத் தளர்த்தியிருந்தால் நிலைமை சீர்திருந்திவிடும். இப்பொழுது அதே முடிவுக்குத்தான் கிட்டத்தட்ட மத்திய அரசாங்கம் வந்திருக்கிறது.

இந்தியா சுதந்திரமடைந்த பிறகு, மாகாணப் பிரிவினை அர்த்தமற்றதாய் விட்டது. பாஷாவாரிப் பிரிவினை என்ற கொள்கையை ஏற்றுக் கொண்டால். ஹைதராபாத்திலுள்ள பல பாகங்களை ஆந்திர மாகாணத்தில் சேர்ப்பது மிகவும் நியாயம்' அதைச் செய்ய மறுப்பது நியாயவாதமாகாது, பிடிவாதம் தான்.

அடுத்தபடி பாஷாவாரி மாகாணப் பிரிவினைகள் இன்னும் பல அமைப்பதற்குக் கிளர்ச்சிகள் நிச்சயம் வரும். ஆகவே மத்திய கவர்மெண்டார் இப்பிரச்னையில் தங்கள் கருத்தைத் தீவிரமாகப் புனர் ஆலோசனை செய்து, பாஷாவாரிப் பிரிவினைகள் புதிய அரசியல் அமைப்பில் வேண்டுமா, அதன் காரணமாக இந்திய மக்களிடையே பாகுபாடுகள் அதிகரிக்குமா அல்லது குறைவு படுமா என்பதை எல்லாம் ஆழ்ந்து விசாரிக்க ஓர் உண்மைத் தேச பக்தர்கள் அடங்கிய கமிட்டி அமைக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிருேம். உலகம் மாறிவிட்டது, அதற்கேற்ப நாம் நம் கருத்துக்களையும், கொள்கைகளையும் மாற்றிக் கொள்ள வேண்டும் என்று பறை சாற்றிக் கொண்டிருக்கும் பண்டித நேரு அவர்கள் பாஷாவாரிப் பிரிவினை விஷயத்திலும் நமது பழைய கொள்கைகள் அர்த்தமற்றவைகளாகப் போய்விடவில்லையா என்பதைச் சிந்திக்க வேண்டுகிருேம்.



## லெப்டினன்ட் ஜெனரல்

# ராஜேந்திரஸிங்ஜி

கே. ஸ்ரீ.

வரும் ஜனவரி மாதம் 15-ஆம்தேதி இரண்டாவது இந்தியர் இந்திய ராணுவத்துக்குச் சேனாதிபதி ஆவார். இவர் லெப்டினன்ட் ஜெனரல் ராஜேந்திர ஸிங்ஜி.

இந்தியர்கள் தங்கள் சேனையை நிர்வகிக்க முடியுமா என்ற கேள்விக்குச் சரியான பதில் அளித்தவர் ஜெனரல் கரியப்பா. இந்தியா சுதந்திரம் பெற்ற பிறகும் ஆங்கிலேயர் தான் சேனாதிபதியாக இருந்து வந்தார். எப்படி அவரைப் பதவியைவிட்டு விலகச் செய்தார்கள் என்பது இதுவரை வெளிவராத ரகசியம்.

பாகிஸ்தான் சூழ்ச்சியால் காஷ்மீரத்தின் மீது எல்லைப்புறக் குண்டர்கள் தாக்குதல் ஏற்பட்டதல்லவா? ஆரம்பமுதல் விரோதிகள் நகரை அடையும் வரை பாகிஸ்தான் திட்டம் இந்திய சர்க்காருக்குத் தெரியாத விஷயம். ஆனால் இந்திய சேனையின் அதிபதி

யாக இருந்த வெள்ளையருக்கு எல்லை மாகாணத்து வெள்ளைக் கவர்னர் இதுபற்றிச் சங்கேதமாக ஒரு கடிதத்தில் குறிப்பிட்ருந்தாராம். அந்தக் கடிதம் காஷ்மீரத்தைக் கபளீகரம் செய்த சூழ்ச்சி அஸ்திவார நிலையில் இருக்கும்பொழுதே எழுதப்பட்டது.

வெள்ளைச்சேனாதிபதிக்கு இதுவிஷயமாகத் தகவல் கிடைத்தது என்பது மத்திய மந்திரி சபைக்குத்தெரிந்ததும் அவர்கள் சேனாதிபதியை ஜவாப்புக் கேட்டார்கள். அதற்கு அவர் அளித்த பதில் சர்க்காரைத் திகைக்க வைத்தது. "எனக்குக் கடிதம் வந்தது என்பது வாஸ்தவம். ஆனால் அது என் அந்தரங்கக் கடிதம் அல்லவோ?" என்றார்.

ஸ்ரீ கரியப்பாவுக்கு முதல் இந்தியர் என்ற ஹோதாவில் சேனாதிபதி பதவி கிடைத்த பொழுது தேசத்தின் ராஜீய நிலைமை மோசமாக இருந்ததுடன் இந்திய ராணுவம் அப்பொழுதுதான் இரண்டாக்கப்பட்டு அதற்குத் தனிப்பெரும் இந்திய ராணுவம் என்ற பதவி கிடைத்திருந்தது. இந்திய ராணுவத்துக்கு எப்பொழுதுமே நல்ல பெயர் உண்டு. சுதந்திரத்திற்குப் பிறகு அதைப் பன்மடங்காக்கி, பல மாகாணத்தவர், பல மதத்தினர், பல ஜாதியினர் உள்ள ராணுவத்தில் "ஒரு குடும்பம்" என்ற உணர்ச்சி மட்டுமே நிலவச் செய்தார் ஜெனரல் கரியப்பா.

ஜெனரல் கரியப்பாவுக்கு இன்னும் குறைந்தது இரண்டு ஆண்டுகளாவது பதவி நீடிப்புக் கொடுத்திருக்க வேண்டும் என்று கிட்டத்தட்ட ராணுவத்தைப்பற்றித் தெரிந்த நிபுணர்கள் பலருமே கூறுகிறார்கள். இது விஷயம் சர்க்காருக்கு ஞானோதயம் ஏற்படாதது வருந்தத் தக்கதே. ஆனால் ராணுவத்தில் வேறுபாடு உணர்ச்சிக்கு இடம் இல்லாததால், வரும் சேனாதிபதியை மனமார வரவேற்கிறோம்.

ராஜேந்திர ஸிங்ஜி ஏப்பை சப்பையான குடும்பத்தைச் சேர்ந்தவரல்ல. ரஞ்சியின் பெயரைக் கேள்விப் படாதவர் உண்டா? அன்னிய நாட்டு விளையாட்டான கிரிக்கட்டைக் கற்று அதில் நிபுணர் என்று இங்கிலாந்திலேயே புகழும் வாங்கினவர். அவருடைய சகோதரர் பிள்ளை ராஜேந்திர ஸிங்ஜி. ராஜேந்திரஸிங்ஜிக்கு இதனாலேயே கிரிக்கெட் ஆட்டத்தில் நல்ல ஆர்வம் உண்டு. ராணுவத்திலும் நல்ல கிரிக்கெட்

ஆட்டக்காரர்கள் உண்டானதற்கு முக்கிய காரணஸ்தர் ஜெனரல் ராஜேந்திர ஸிங்ஜி.

ராஜேந்திரர் 1899-ஆம் வருஷம் ஜூன் மாதம் பிறந்தார். தற்சமயம் உள்ள நவ நகர் ஜாம் ஸாகேபின் ஒன்றுவிட்ட சகோதரர். கல்லூரிப் படிப்பிற்குப் பிறகு 1921-ஆம் வருஷம் ஜூலை மாதம் ராணுவத்தில் கமிஷன் பெற்றார். 1930-ஆம் வருஷம் காப்டன் ஆகி, 1941-ல் தம் பகுதிக்குத் தலைவரானார்.

சென்ற யுத்தத்தில் ராஜேந்திரருக்குப் புகழ் கிட்டியது. ஆப்பிரிக்காவில் மூன்றாவது மோட்டார் பகுதி ஜர்மானியர்களால் சூழ்ந்து கொள்ளப்பட்டது. அப்பொழுது அது பின்வாங்குவதற்கு ராஜேந்திரர் பெரிதும் உதவியதுடன், தம் படையின் பலம் சிறிதாக இருந்தபோதிலும் ஜெர்மன் பகைகளுக்குள் புகுந்து ஊடுருவி, ஜெர்மன் வலையை விட்டுத் தப்பினார். அவர் தீரத்திற்காக அவருக்கு டி. எஸ். ஓ. (D. S. O.) என்ற பட்டம் கொடுக்கப்பட்டது.

ராஜேந்திரருக்கு அந்நிய நாட்டு அனுபவமும் உண்டு. 1945-ல் அவர் அமெரிக்க ஸ்தானிகத்தில் பொதுஜனத் தொடர்புத் தலைவராக இருந்து, 1946-ல் பிரிகேடியரானார். இந்தியா சுதந்திரம் எய்தியதும் அவர் டில்லி வட்டாரத்திற்கு அதிபதியானார். 1947-ல் தேசத்தில் அரசாங்கம் நடக்குமா என்ற நிலைமை ஏற்பட்டிருந்தது. காரணம் ஹிந்து மூஸ்லீம் துவந்த யுத்தமும் அகதிகள் அதிகரிப்பும். அதை நன்கு சமாளித்தார் ராஜேந்திரர்.

ராஜேந்திரர் எப்படிப்பட்டவர்? அவரைத் தெரிந்தவர்கள் அவர் பதட்டம் இல்லாமல் எதையும் ஆலோசிக்கவல்லவர் என்கிறார்கள். அதைத் தவிர, சாந்தமும் சுமுகமும் உள்ளவர். இந்திய சுதந்திரத்திற்குப் பிறகு ஹைதராபாத் நிஜாமும் அவருக்கு அபயம் கொடுத்த ரஜாக்கர்களும் குதித்தார்கள் அல்லவா? அதை நிறுத்தி ரஜாக்கர்கள் கால் பூமியில் பாவும்படி செய்தது இந்திய சர்க்கார் போலீஸ் நடவடிக்கை. பல மாதங்கள் யுத்தம் நடக்குமோ என்று எதிர்பார்த்தது நாலு நாள்—நண்டு பிடிப்பில் முடிந்ததற்குக் காரணம் ராஜேந்திரரின் அபார தீரமும் திட்டமிடும் சக்தியுமே.

ராஜேந்திரரிடம் எல்லாவற்றையும் விட உயர்ந்த குணம் அவருடைய கலங்கா உள்ளமும் மிகவும் சிக்கலான நெருக்கடியிலும் நம்பிக்கையைக் கைவிடாத் தன்மையுமே. சுதேச சமஸ்தானங்கள் இந்திய யூனியனில் ஐக்கியமாகும் சமயம் சுதேச ராணுவங்கள் இந்திய ராணுவத்தில் சங்கமம் ஆவது ஒரு பெரிய பிரச்னையாக இருந்தது. அந்தப் பிரச்னையைத் தீர்க்க, சர்தார் படேல் ஜெனரல் ராஜேந்திர ஸிங்கையே நம்பினார். மன்னர்களுடைய பரம்பரையைச் சேர்ந்தவர் என்பதால் மற்றச் சமஸ்தான மன்னர்கள், குறிப்பாக பரோடா, ஸௌராஷ்டிரா, மைசூர், திருவாங்கூர் மன்னர்கள், அவர் ஆலோசனைக்கும் புத்திமதிக்கும் செவி சாய்த்தனர். ராணுவத்தைச் சேர்ந்த ஆபீஸர்களையும் சிப்பாய்களையும் சரிக்கட்டுவது சுலபம், ஏனென்றால் அவர்கள் மிகுந்த தேசபக்தி உள்ளவர்கள் என்பதைத் தெரிந்துகொண்டிருந்த ராஜேந்திரர் மன்னர்களைத் தங்கள் விசேஷ உரிமைகளை விட்டுக்கொடுக்கும் அவசியம்பற்றி வற்புறுத்தி வெற்றியும் கண்டார்.

ராஜேந்திரர் ஹைதராபத்தில் வெற்றி பெற்றார் எனினும் ரஜாக்கர்களும் கம்யூனிஸ்டுகளும் ராணுவத்திற்குச் சதா தலைவலியாகவே இருந்தனர். அந்த நிலையை சாமர்த்தியமாகச் சமாளித்தார் ராஜேந்திரர். கம்யூனிஸ்ட்களைக்கூடத் தேசம் நம்முடையது என்பதை உணர வைக்கலாம் என்று நம்பி, அடக்குமுறைக்குப் பதில் சமாதான முறையைக் கையாண்டார் ராஜேந்திரர்.

தேசம் சுதந்திரம் அடைந்து ஐந்து வருடங்களாகின்றன. ஆனால் அதைச் சூழ்ந்துள்ள தொல்லைகள் நீங்கியபாடில்லை. அகலத்திற்கும் நீளத்திற்கும் குறைவில்லாமல் பரந்து கிடக்கும் தேசத்தைப் பாதுகாப்பவர்கள் ராணுவத்தார். அவர்கள் மேலும் மேலும் பலம் கொண்டு இந்தியாவிற்கு நேர்மை, நடுநிலைமை, தீரம் முதலியவற்றிற்குக் குறிக்கோளாக விளங்க ராஜேந்திர ஸிங்ஜி உதவுவார் என்று நம்புவோமாக.



# டில்லித் தபால்

**கே. ஸ்ரீநிவாஸன்**

"எங்கும் சுற்றிப் பொன்னம்பலம்" என்ற பழமொழிப்படி காங்கிரஸ் அக்கிராசனம் பண்டிதநேருவுக்கே வந்துவிட்டது. காஷ்மீரப் பிரச்னை, கிழக்கு வங்காள அகதிகள், இலங்கைப் பிரச்னை முதலியவைகளைச் சதா ஆலோசிக்க வேண்டியிருப்பதாலும் ஐந்து வருஷத் திட்டம் பண்டிதரின் நேரடிப் பார்வையில் இருப்பதாலும், பிரதமர் காங்கிரஸ் ஸ்தாபனத்துக்கு வேறு அக்கிராசனரைத் தேர்ந்தெடுக்கும்படி சொல்லியிருந்தார்.

உடனடியாக முடியாது என்று சொல்ல யாரும் விரும்பவில்லை. ஆனால் நியமனங்கள் வெகு ருசிகரமாக இருந்தன. காங்கிரஸில் செல்வாக்குள்ள தலைவர்கள் பண்டிதர் பெயரையே பிரேரேபித்திருந்தபோதிலும் மைசூர் சமஸ்தானத்திலிருந்து ஸ்ரீநிஜலிங்கப்பாவின் நியமனம் வந்திருந்தது. ஆனால் யார் ஸ்ரீலால்பகதூர் சாஸ்திரியின் பெயரைப் பிரேரேபித்தார்கள்? அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி இதுபற்றித் தகவல் வெளியிடத் தயங்கியதற்குக் காரணம் என்ன என்பதைக் கண்டுபிடித்துவிட்டேன். ஸ்ரீலால்பகதூர் சாஸ்திரி தனிப்பெரும் ஹிந்தி உலகெல்லாம் முழங்கவேண்டும் என்னும் கக்ஷியைச் சேர்ந்தவர்.

பார்லிமெண்டில்கூட ஹிந்தியில் பேசி, தென்னிந்திய அங்கத்தினர்களின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டவர். அவரை நையாண்டி செய்யவேண்டும் என்றே தமிழ் நாட்டுப் பிரதிநிதிகள் அவர் பெயரை நியமனம் செய்திருந்தார்களாம்.

காங்கிரஸ் ஸ்தாபனத்திற்குப் பொய் மெம்பர்கள் பதிவு செய்தார்கள் என்ற புகார் எழுந்திருக்கிறது என்று சென்ற கடிதத்தில் குறிப்பிட்டிருந்தேன் அல்லவா! அது சம்பந்தமாக நேருஜி மிகவும் ஆத்திரப்படுவதாகத் தெரிந்து பீஹாரில் பொய்க் காங்கிரஸ் அங்கத்தினர் சேர்க்கை தண்ணீர்பட்டபாடாக இருந்திருப்பதால் அங்கு அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு நடந்த தேர்தலை ரத்துச் செய்துவிட்டார்கள். வரும் வாரங்களில் மற்ற வட இந்திய சமஸ்தானங்களில் நடந்த அங்கத்தினர் சேர்க்கை பரிசீலனை செய்யப்படும்போது பலவித கலகங்கள் எதிர்பார்க்கப்படுகின்றன. அதற்காக வெகுமுக்யமாக நேருஜி அக்கிராசனராக இருக்கவேண்டும் என்று காங்கிரஸ் தலைவர்கள் அவரை வற்புறுத்திப் பதவியை ஏற்கச் செய்திருக்கிறார்கள்.

* * *

மத்திய சர்க்காரிலும்கூட ஒரு பெரிய மாறுதல் ஏற்படும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

தற்சமயம் உள்நாட்டு மந்திரியாக இருக்கும் டாக்டர் கட்ஜு தம் பதவியைவிட்டு விலகுவார் என்று எதிர்பார்க்கப்படுகிறது. டாக்டர் கட்ஜு பண்டித நேருவுக்கு மிகவும் ஆப்தர் என்றாலும் நேருவின் முஸ்லிம் கொள்கை அவருக்குப் பிடிக்கவில்லை. முக்கியமாக இன்னமும் இந்தியாவைத் திரிகரண சுத்தியாகத் தாயகம் என்று எண்ணாத சில முஸ்லிம்களைக் கண்காணிப்பதுபற்றி டாக்டர் கட்ஜுவின் மனதில் சந்தேகம் இல்லை. ஆனால் இங்கேகூட பண்டிதர் தம் மதப்பற்றற்ற கொள்கையைக் கடைப்பிடிக்கும்படி வற்புறுத்துகிறார்.

பண்டிதரின் அடுத்த உள்நாட்டுச் சகாயார் என்பதுபற்றி ஹேஷ்யம் ஒன்றும் இல்லை. ஏனென்றால் நேரு கட்ஜு புகைச்சல்கூட வெளியில் அம்பலமாகவில்லை. ஆனால் நேருவின் அந்தரங்கமான ஆப்தர்கள் வார்த்தைகளுக்கு மதிப்புவைப்பதால், அவர் டாக்டர் ஸர். ஸி. பி. ராமசாமி அய்யருக்கு அழைப்பு அனுப்பியிருப்பதாகச் சொல்லப்படுகிறது. இது திகைக்கக்கூடிய விஷயம்தான். திருவாங்கூர் சமஸ்தான திவானாக இருந்து அவர் ஆடிய ஆட்டம் இன்னும் நேரு மனதில் இருப்பதாகச்சொல்லிக்கொள்கிறார்கள். ஜி. எஸ். பாஜ்பாய், ஸர். ஏ. ராமசாமிமுதலியார் முதலிய பிரிட்டிஷ் பக்தர்கள் இப்பொழுது நேருவின் அன்புக்குப் பாத்திரமான பொழுது, டாக்டர் ராமசாமி அய்யர் ஏன் ஆகக்கூடாது என்று கேட்கப்படுகிறது.

கம்யூனிஸ்டு உள்நாட்டுத் தாக்குதல் அதிகரித்து, தேசத்தின் போலீஸ் நிர்வாகம் சரி ஆகவேண்டும் என்று இருக்கும் நிலையில் டாக்டர் ராமசாமி அய்யரைப் பொறுக்குவது மிகவும் அவசியம்.

* * *

காஷ்மீரத்தில் சட்டமறுப்பு மிகவும் நெருக்கடியான நிலைமையை உண்டாக்கியிருக்கிறது. ஜம்மு மாகாணம் ஹிந்துக்கள் அதிகப்படியாக உள்ள பிரதேசம். இதில் உள்ள பிரஜா பரிஷத் என்னும் ஸ்தாபனத்தின் தலைவர் ஸ்ரீபிரேம்நாத் டோக்ரா. அவர் பிதற்றிக்கொண்டு திரியும் அளவுக்கு இந்திய பக்தர் அல்ல. இருந்தாலும் காஷ்மீர அரசியல் நிர்ணய சபையைப் பகிஷ்கரித்ததிலிருந்து காஷ்மீரம் எவ்வித நிபந்தனையும் இன்றி ஐக்கியம் ஆகவேண்டும் என்று சொல்வதுவரை அவரை ஒரு பரம தேச பக்தராகவே தோற்றுவிக்கும்.

உண்மையில் பிரஜா பரிஷத்தை ஆட்டி வைப்பவர்கள் மாஜி ஜமீந்தார்களும் ஹிந்து வகுப்பு வாதிகளுமே. ஜம்மு ஹிந்துப் பிரதேசம், அது இந்தியாவுடன் சேர வேண்டும், காஷ்மீரப் பள்ளத்தாக்கு முஸ்லிம் பெரும் பான்மையுள்ள இடம்; அது எங்கு வேண்டுமானாலும் நாசமாய்போய்ச் சேரட்டும் என்று அப்பட்டமாகச் சொல்பவர்கள். "இந்தியா ஹிந்துக்கள் தாயகம்; அதில் முஸ்லிம்களுக்கு என்ன வேலை?" என்று கேட்கும் இவர்கள் ஸித்தாந்தத்தை ஒப்புக்கொண்டால் சென்ற நான்கைந்து வருஷங்களாக இந்தியா காஷ்மீரத்தில் கொட்டிய பணமும், இந்தியத் துருப்புகள் சிந்திய ரத்தமும் விழலுக்கு இறைத்த நீராகும்.

காஷ்மீரம் எந்த நாட்டிற்கும் ஒரு அணிகலம். முக்கியமாக, காஷ்மீரப் பள்ளத்தாக்கும் ஸ்ரீநகர் போன்ற இடங்களும் பூகைலாஸ் என்று சொல்லப்படுபவை. அதில் பிறந்து வளர்ந்தவர் பண்டிதநேரு. என்றாலும், மக்களின் மனதிற்கு மாறான தீர்மானத்தை நேரு விரும்பமாட்டார். ஆனால் காஷ்மீரத்தின் மக்கள் அல்லவா இந்தியாவின் உறவையும் உதவியையும் நாடினார்கள்.

அப்படி வலுவில் வந்த மக்களைக் கொஞ்சமும் அவர்கள் மனதில் இந்தியாவைப்பற்றிச் சந்தேகம் எழாமல் இந்தியத் தொடர்பு நாளடைவில் முற்றி, காஷ்மீரம் இந்தியாவின் உறுதியான பாகம் ஆகவேண்டும் என்று பாடுபடுபவர் ஸ்ரீஅப்துல்லா. "ஜம்மு ஹிந்துக்கள் பிரதேசம், ஆகவே அது இந்தியாவுடன் சேர வேண்டும்" என்பவர்கள் பழைய ஜின்னாவின் இரு சமுதாயக் கொள்கையைப் புதுப்பிப்பவர்கள். இவர்கள் அண்டையில் இருக்கும்பொழுது ஒரு அப்துல்லா அல்ல, ஆயிரம் அப்துல்லாக்கள்கூட முஸ்லிம்களை அவர்கள் நலன் இந்தியாவின் இணைப்பில் இருக்கிறது என்று திருப்தி செய்யமுடியாது.

ஜம்முவில் பரிஷத் சத்தியாக்கிரகம் மிகவும் பலாத்கார முறையில் நடக்கிறதாம். அங்கிருந்து திரும்பிய சில பிரமுகர்கள் காஷ்மீர் சர்க்காரின் பொறுமையைக் கண்டு வியக்கிறார்கள். பொதுவாகக் காஷ்மீர ஹிந்துக்களுக்கு அப்துல்லாவின் நேர்மையில் பூர்ண நம்பிக்கை இருக்கிறதாம். ஆனால் இதைப் பட்டவர்த்தனமாகச் சொல்ல யாரும் துணியமாட்டார்கள், ஏன்? டில்லியிலிருந்து சென்ற ஒரு பிரபல பத்திரிகை நிருபர் தாம் பார்த்ததையும் கேட்டதையும் கூட்டிக் குறைத்து எழுதாததற்காக அவரைக் கொல்லச் சதி செய்தார்கள் பரிஷத் அனுதாபிகள் என்றால் பரிஷத் எவ்வளவு நேர்மையாயிருக்கிறது என்று யூகியுங்கள்.

கடைசியாக, சென்னை ஐக்கியமுன்னணி கட்டுகட்டத்து உட்கார்ந்துவிட்டது. பிரஜாகக்ஷியாரும் ஸோஷலிஸ்ட்களும் ஐக்யமானபின்பும் சென்னையில்மாத்திரம் எப்படிப் பிரஜா கக்ஷி கம்யூனிஸ்ட்களுடன் குலாவமுடியும் என்று பொதுவாக ஜனங்கள் வியந்ததுடன் ஸோஷலிஸ்ட்களுக்குள்ளேயே இதுபற்றிப் புகைச்சல் ஜாஸ்தியாக இருந்தது. இது வியாஜமாகவே பல ஸோஷலிஸ்ட்கள் பிரஜா—ஸோஷலிஸ்ட் கட்சியைவிட்டு விலகினர்.

ஆனால் உண்மையில் பம்பாயில் பிரஜா—ஸோஷலிஸ்ட் கட்சியின் காரியக் கமிட்டியில் நடந்தென்ன? ஸ்ரீ அசோக்மேத்தா சென்னையில் ஐக்கியமுன்னணி இனிமேலும் தொடரக்கூடாது என்று தம் பகிரங்க அபிப்பிராயத்தைத் தெரிவித்தபோது, ஸ்ரீ பிரகாசம் 'அதைப்பற்றி நீங்கள் உடனடியாகப் பைஸல் செய்ய முயலாதீர்கள். நாங்கள் சந்தர்ப்பம் பார்த்துக் கத்தரித்துக்கொள்கிறோம்' என்று உறுதி கூறினார் என்று இப்பொழுது அறிகிறேன். அந்தச் சந்தர்ப்பம் இப்பொழுது ஸ்ரீ ஆதித்தன் மூலம் கிடைத்தது, பிரஜா கட்சியின் தாக்கீதையும் புறக்கணித்து, சென்னை மாகாணத்து முனிஸிபல் தேர்தல்களில் தமிழ்நாட்டுப் பிரஜாகட்சியார் பங்கெடுத்துக் கொண்டதைச் சாக்காக வைத்துக்கொண்டு

ஸ்ரீ பிரகாசமும் அவர் சிஷ்யர் ஸ்ரீ விச்வநாதனும் பிய்த்துக்கொண்டது சரியான ராஜீய தந்திரமாகும்.

* * *

சென்ற வருஷம் செய்யாததற்கும் பிராயச்சித்தமாக இந்த வருஷம் டில்லியில் உள்ள தென்னிந்திய சங்கங்கள் பாரதி விழாவை நன்ருக நடத்தினர்கள். முதலில் மதராஸி ஸ்கூல் மாணவர்கள் விழாவைக் கொண்டாடினர்கள். பாரதியாரின் பாட்டுக்களைச் சிறுமிகள் பாடினர்கள், பாரதியாரின் பாட்டுக்களை ஆதாரமாகக் கொண்ட கும்மிகள் அடித்தார்கள், ஆனல் தற்கால இளைஞர்கள் பின்னல் கோலாட்டம் என்ருல் என்ன என்று அறியார்கள். அதைத் தெரிந்து கொள்ள இங்குள்ள சங்கீத வித்வான் ஸ்ரீ ராஜாமணி பின்னல் கோலாட்டம் ஒன்று ஏற்பாடு செய்தார். குழந்தைகள் தத்தம் ஆட்ட பாட்டங்களை நன்ருகச் செய்தார்கள் எனினும், விழா நிர்வாஹிகள் நல்ல அரங்கம் தயார் செய்யாத கோளாறினல் மேடையில் நடந்தவைகளை நன்கு கண்டு ரஸிக்க முடியவில்லை.

அடுத்தபடியாக நன்ருக நடைபெற்ற விழா டில்லித் தமிழ்ச் சங்கம், தென்னிந்தியா கிளப், கர்நாடக சங்கீத சபா இம்மூன்று கலாசபைகளாலும் ஏற்பாடு செய்யப்பட்டது. இந்தப் பாரதிவிழாக் கமிட்டியார் பாரதி பாடல்களைப் பாடுபவர்களுக்கும் பாரதியைப்பற்றிப் பேசுபவர்களுக்கும் பரிசு வழங்கஏற்பாடு செய்து இருந்தார்கள். மேடைமீது தோன்றி வெடுக்கு வெடுக்கென்று இரு சிறுமிகள் பாரதியைப்பற்றி உள்ளங்கை நெல்லிக்கனிபோல் பேசி, சபையோரைக் களிக்கச் செய்தார்கள். பாட்டும் மிகவும் ரஞ்சிதமாக இருந்தது.

தற்கால அறிஞர்களில் வயது முதிர்ந்தவர்கள் தமிழ் நன்ருகச் சபையில் பேச இயலுவதில்லை என்பதை உணர்கிருர்கள் என்பதற்கு உதாரணம் அன்று தலைமை தாங்கிய கனம் நீதிபதி சந்திரசேகர அய்யர். அவர் அபார மேதா விலாசத்திற்கும் அடக்கமான தன்மைக்கும் இங்கு சிலரே ஈடு உளர். "வக்கில்கள் எந்தக் கக்ஷிக்கும் சப்பைக்கட்டுக் கட்டுபவர்கள். ஆகவே நான் இன்று பலரகம் வேண்டும் என்று ஆங்கிலத்தில் பேசப் போகிறேன். உண்மையில் எனக்கு இந்தச் சபையில் பேசும் அளவிற்குத் தமிழ் வன்மை இல்லை" என்று சொல்லிவிட்டு, பாரதியார் தென்னிந்திய கவிமட்டும் அல்ல, பாரதத்திற்கே பெருமை தரும் கவி, தாகூர், துளஸிதாஸைப் போன்றவர் என்று சாங்கோபாங்கமாக எடுத்துரைத்தார்.

* * * *

தென்னிந்தியர்கள் ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பால் வந்து வாழ்வதற்கு உத்தியோகம் தேடிக்கொண்டு இருக்கிருர்கள். ஆயினும் தமிழ் நாட்டுக்குப் பெருமை தேடிக்கொடுத்த மகானுபாவர்கள் தான் தமிழனுக்குத் தனி கௌரவம் தேடிக்கொடுத்தார்கள் என்பதை மறப்பதில்லை. இதுவிஷயம்பற்றிடில்லித்தமிழ்ச் சங்கத்தை மிகவும் பாராட்டவேண்டும். சிறியசங்கம் ஆயினும் பாரதி, வள்ளுவர், வ. உ. சி. முதலியோர் தினங்களை அடக்கமான முறையில் கொண்டாடுகிருர்கள். திருவள்ளுவர் தினத்தைக் கொண்டாடிய பொழுது திருக்குறள் ஸ்ரீமுனிசாமி அவர்கள் குறளைப்பற்றிய அற்புத பிரசங்கம் நிகழ்த்தினர். ஸ்ரீமுனிசாமி பார்லிமெண்ட் மெம்பர். அதேபோல் பல பார்லிமெண்ட் மெம்பர்கள் வ. உ. சி. தினத்தில் பங்கு கொண்டார்கள்.

நம் பெரியார்களைப் பற்றி நமக்கு நன்ருகத் தெரியும். நம் கடமை பாரதியார் போன்றவர்களைப்பற்றி வட இந்தியர்கள் தெரிந்து கொள்ளச் சொல்வதே. இதுவிஷயம் கரோல்பாக் ஹிந்தி சங்கம் மிகவும் அக்கரை காட்டுகிறது. பாரதி, வ. உ. சி. கம்பர் முதலியவர்களைப்பற்றி வட இந்தியர்கள் துண்டுப் பிரசுரங்கள் தயாரித்திருக்கிருர்கள். இவர்களுக்குப் பாரதி விழாவையோ அல்லது மற்றப் பெரியார்களின் விழாவையோ பெரிய தோரணையில், வட இந்தியர்கள் புரிந்து கொள்ளும் முறையில் நடத்த வேண்டும் என்பது அவா. இதை மனதில் வைத்துக் கொண்டு தென்னிந்திய சங்கங்கள் ஒன்று சேர்ந்து, பிரபலஸ்தர்களைக் கூட்டிப் பெரிய விழா ஏற்பாடு செய்ய அடுத்த வருஷம் முயலுவார்கள் என்று நம்புவோம்.







# உடன்போக்கு

மூலம்: புஷ்கின்

தமிழாக்கம்: வ.சம்பந்தன்

**1811**-ஆம் ஆண்டின் இறுதி. அப்பொழுது தான் அந்தச் சம்பவம் நடந்தது. நெனராடாவோ என்ற எஸ்டேட்டில் கேவரிலா கேவரிலாவிச் வசித்துக்கொண்டு வந்தான். அவன் மிகவும் நல்லவன். இளகிய மனதுடையவன். ஆகவே சுற்று வட்டாரங்களில் அவனுக்கு நல்ல பெயர். வருவாரும் போவாருமாக எப்பொழுதும் அவனைச் சுற்றி நான்குபேர் இருந்துகொண்டே இருப்பார்கள். அவனுக்கு ஒரே மகள். மேரியா காவி ரிலால்னா என்று பெயர். பதினேழு வயது இருக்கும், இளஞ்சிட்டு. அவ்வளவு அற்புதமான அழகு படைத்தவள் என்று சொல்ல முடியாவிட்டாலும், பதினேழு வயதில் எந்த மங்கைக்குமே ஒரு கவர்ச்சி உண்டாகி விடுகிறதல்லவா? அதுபோல்தான். அத்துடன் பணக்காரன் ஒருவனின் ஒரே மகள். கேட்க வேண்டுமா? எப்படியாவது அவளைக் கொத்திக்கொண்டு போய்விடுவதற்காக நான், நீ என்று போட்டிபோட ஆரம்பித்துவிட்டார்கள் பல பேர்.

பிரெஞ்சு நாவல்களிலே ஊறித் திளைத்தவள் மேரியா. ஆகவே காதல் வேட்கை அவள் இரத்தத்திலே ஊறிப் போயிருந்தது. அவள் காதலித்தாள். சேனையிலிருந்து ஒய்வுபெற்று, கிராமத்திற்கு வந்து தங்கியிருந்த விளாடிமர் நிக்கோலாவிச் என்ற ஒரு சப்-லெப்டினெண்டை. அவள் முழுமனதுடன் ஒரே மூச்சாகக் காதலித்தாள். விளாடிமர் என்ற அந்த இளைஞனும் லேசுப்பட்டவனல்ல. அவனும் அவளை அதே வேகத்துடன் காதலித்தான். இந்தக் காதல் விஷயம் என்றால் தான் எந்தப் பெற்றோர்களுக்கும் பிடிக்காதே! அவர்கள் சும்மா இருப்பார்களா என்ன? மேரியாவின் பெற்றோர்கள் அவளுக்கு இந்த மாதிரி காதலினால் வரும் தீமைகளைப்பற்றி யெல்லாம் எவ்வளவு சொல்லமுடியுமோ அவ்வளவும் சொன்னார்கள். எல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்கு ஆயிற்று.

ம் காதலர்கள் சும்மா இருக்கவில்லை. தினம் ஒரு காதல் கடிதம் பறந்தது. நாள்தோறும் ஊருக்கு அருகில் உள்ள ஒரு சிறு காட்டில் இரகசியமாகச் சந்தித்து, தங்கள் காதலை ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொண்டனர். தங்களுடைய சிரஞ்சீவிக்காதலை முன்னிறுத்தி இருவரும் ஒருவரை ஒருவர் பிரிவதில்லை என்று சத்தியம் செய்துகொள்ளுவார்கள். இரகசியமாகச் சந்திக்க வேண்டியிருக்கிற தங்களுடைய தற்கால நிலையைக்கண்டு பரிதாபப் படுவார்கள். இந்த இரகசிய வாழ்வினின்றும் வெளியேறவேண்டி, பல திட்டங்கள் போட்டார்கள். இப்படிக் கலந்து பேசிப் பேசி, கடைசியாகக் காதலர்கள் இருவரும் ஒரு முடிவுக்கு வந்தார்கள்.

"நம் காதலுக்கு யார் குறுக்கே நின்றாலும் சரிதான்...... மேரியாவின் பெற்றோர்கள் குறுக்கே நின்று எதிர்த்தாலும் சரி, அதையும் மீறி அவர்களுடைய சம்மதத்தைக் கேட்காமலேயே நம் காரியத்தை நடத்திக்கொண்டு போய் விடுவது என்பதுதான் அந்த முடிவு.

இந்தத் திட்டத்திற்கு வித்திட்டவன் விளாடிமர் தான். காதல் வலை விரித்து இன்பக் கற்பனையிலே மூழ்கிக் கிடந்த இளங்குமரி மேரியாவுக்கு இந்தத் திட்டம் மிகவும் பிடித்திருந்தது...... இதன் மத்தியில் மழைக்காலம் வேறு வந்து தொலைந்தது. ஆகவே காதலர்கள் முன்மாதிரி அடிக்கடி சந்திக்க முடியாமல் போய்விட்டது. ஆனாலும் தங்கள் இளமை வெறியை, காதல் வேகத்தை ஒருவருக்கொருவர், நாள் தவறாமல் காதல் கடிதங்கள் எழுதுவதன்மூலம் தீர்த்துக்கொள்ள முயற்சி செய்தனர். தன்னை முழுமனதுடன் மேரியாவினிடம் ஒப்படைப்பதாகவும், அவனுடைய பெற்

றோர்கள் முதலில்தான் கோபமாக இருப்பார்களென்றும், சிலதினங்கள் சென்றால் அவர்களை நைசாகச் சரிப்படுத்திவிடலாம் என்றும் தங்களுடைய தூய காதலையும், அன்புப் பிரவாகத்தையும் கடைசியில் அவர்களே பாராட்டி இரண்டு பேரையும் ஆசீர்வதித்து வாழ்த்துவார்களென்றும் இந்தத் தோரணையில் கடிதத்தின்மேல் கடிதமாக விளாடிமர் எழுதிக்கொண்டே இருந்தான்.

மேரியா முதலில் கொஞ்சம் தயங்கினாள். விளாடிமருடன் இரகசியமாகச் சொல்லிக்கொள்ளாமல் ஓடி, திருமணம் புரிந்து கொள்வது என்ற எண்ணத்தையே முதலில் வெறுத்தாள். ஆனால் கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையுமல்லவா? பெற்றோர்களோ சொல்லிக் கேட்கமாட்டார்கள். ஆகவே கடைசியில் விளாடிமருடன் ஓடிவந்து விடுவதாக ஒத்துக்கொண்டாள். இந்த உடன் போக்குத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவர நாள் குறிப்பிடப்பட்டது. அன்று இரவு மேரியா சாப்பிடாமல், தலைவலி என்று சாக்குக் கூறிவிட்டு, தன் அறைக்கு வந்துவிட வேண்டும். இந்த விஷயத்தில் அவளுடைய அந்தரங்க வேலைக்காரி அவளுக்கு உதவியாக இருக்கவேண்டும். அவர்கள் இரண்டு பேரும் வீட்டின் பின்புறமாயுள்ள தோட்டத்திற்கு வரவேண்டும். தோட்டத்து வெளிக் கேட்டுக்கருகில் ஒரு கோச் வண்டி அவர்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கும். அதில் ஏறிக்கொண்டு ஊருக்கு அருகில் உள்ள சாட்ரினா என்னும் ஊரில் உள்ள மாதா கோவிலுக்கு நேரே வரவேண்டும். இங்கே விளாடிமர், மதகுரு எல்லோரும் அவர்களுக்காகக் காத்துக் கொண்டிருப்பார்கள். அவ்வளவுதான்! அன்று இரவே அங்கே கல்யாணம்!............ இதுதான் விளாடிமர் தயாரித்த உடன்போக்குத் திட்டம்.

திட்டம் நிறைவேறும் நாள் வந்தது. அதற்கு முதல் நாள் இரவு மேரியாவுக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. அவளுக்கு வேண்டிய சாமான்களெல்லாம் அப்பொழுதே சிறு மூட்டையாகக் கட்டி வைத்தாள். பெற்றோர்களுக்கு ஒன்றும் அவளுக்கு மிகவும் வேண்டிய இன்னொரு தோழிக்கு ஒன்றுமாக இரண்டு நீண்ட கடிதங்கள் எழுதினாள். பெற்றோர்களுக்கு எழுதின கடிதத்திலே தான் சொல்லாமல் ஓடிப் போவதைப்பற்றிக் குறிப்பிட்டுவிட்டு, அதற்காக மிகவும் வருந்துவதாகவும், ஆனால் அதைவிட வேறு வழி தற்சமயம் தனக்கில்லையென்றும், இருந்தாலும் தன் அன்பு மிக்க பெற்றோரின் அரவணைப்பிலே என்று முழு மனதுடன் மறுபடியும் தான் வந்து சேருகிறாளோ அன்றே அவளுடைய வாழ்வின் புனித நாளாக அவள் கருதுவதாகவும்,எல்லாவற்றையும் எடுத்து விளக்கி உருக்கமாகத் தீட்டியிருந்தாள். இரண்டு லெட்டர்களுக்கும் சீல் வைத்தாள். கவர்மீது அன்பு இருதயங்கள் இரண்டு ஒன்றுபடுவது போல் படத்தையும் போட்டாள். அப்புறம்தான் படுக்கப் போனாள். தூக்கம் வந்தால்தானே... அப்படியும் இப்படியுமாகப் புரண்டுகொண்டு கிடந்தாள். பலவிதக் கெட்ட கனவுகள் அவளைப் பிடித்து அலக்கழித்தன...' விளாடிமர் அனுப்பிய கோச்சில்தான் கால் வைத்து ஏறும்பொழுது தன் தந்தை அதனின்றும் தன்னை இழுத்து வெளியே வேகமாகத் தள்ளுவது போலவும், தான் உடைந்த உள்ளத்துடன் தரையில் அலங்கோலமாகப் போய் விழுவது போலவும் கனவு கண்டாள். இன்னொரு மனச் சித்திரத்திலே... நல்ல அடிபட்டு விளாடிமருக்கு இரத்தம் கொட்டிக்கொண்டிருக்கிறது. அத்துடனே புல்தரையில் விழுந்து அவன் திணறும் பெரு மூச்சுக்களிடையே மெல்லிய குரலிலே தன்னை உடனே மணம் புரிந்துகொள்ள வேண்டும் என்று அவளை வற்புறுத்துகிறான்......'' இதுபோல் இன்னும் விசித்திரமான கனவுகள் பல தோன்றின அவள் தூக்கத்திலே. பலஹீனமான தோற்றத்துடனும் தாங்கமுடியாத தலைவலியுடனும் காலையில் காட்சி அளித்தாள் மேரியா. பெற்றோர்கள் மகளுக்கு என்னவோ ஏதோ என்று கலங்கிக்கொண்டிருந்தனர். மாலை வந்தது. தான் வீட்டைப் பிரியும் நாள் இது என்பதை நினைக்கும்பொழுதே மேரியாவுக்குப் பகீர் என்றிருந்தது. ஜீவனில்லாதவள்போல் காணப்பட்டாள். தன்னைச் சுற்றியுள்ள ஒவ்வொரு பொருள்களிடத்தும் இரகசியமாகவே விடை பெற்றுக்கொண்டாள்.

...இரவு போஜனத்திற்கு வேலைக்காரி வந்து கூப்பிட்டாள். தன் உடல்நிலை சரியில்லை. ஆகவே சாப்பாடு வேண்டாமென்று கூறித் தன் தாய் தந்தையரிடம் படுக்கைக்குச் செல்ல விடை பெற்றுக்கொண்டாள் மேரியா. தம் அருமை மகளுக்கு என்றைக்கும் செய்வது போல் அன்பு முத்தமிட்டு ஆசீர்வதித்து அனுப்பினார்கள் அவர்கள். மேரியாவுக்கு அழுகையே வந்துவிடும் போலிருந்தது...அடக்கிக்கொண்டாள்:

அறையில் வந்து அமர்ந்ததும் அவள் மனம் ஒரு நிலையில் இல்லை. வேலைக்காரி அவளைத் தேற்றினாள். எல்லாம் தயாராகிவிட்டன. இன்னும் அரைமணி நேரம்தான்... அதன் பிறகு... மேரியா ...தன் பெற்றோர்களின் வீட்டை...தன் அறையைவிட்டுப் பிரிந்து சென்று...இன்னொருவனுடன் சேர்ந்து...தன் அமைதியான கன்னிப்பருவத்தை......

...வெளியே கோரமான புயல்காற்று வீசுவதற்கான அறிகுறிகள் தென்பட்டன. காற்று வெகு வேகமாக வீசிக்கொண்டிருந்தது. ஜன்னல் கதவுகளெல்லாம் ஆடின. மேரியாவுக்கு என்னவோ போலிருந்தது. தான் காதலனுடன் செல்ல முடிவு செய்யும்பொழுதுதானா இந்த அசந்தர்ப்பங்களெல்லாம் வரவேண்டும் என்று அவள் மனம் விம்மியது.

...வீட்டில் நிசப்தம் நிலவியது. எல்லோரும் தூங்கிக்கொண்டிருந்தார்கள். சால்வையால் தன் உடம்பைப் போர்த்திக்கொண்டு கையில் சிறு

பெட்டியுடன் பின் வாசலால் வெளியே வந்தாள் மேரியா. அவளுடைய வேலைக்காரி இரண்டு சிறு மூட்டைகளுடன் வந்து சேர்ந்தாள். இருவரும் தோட்டத்தின் பின் கோடிக்கு வந்தார்கள். பனிப் புயல் தணியவே இல்லை. செய்கின்ற காரியம் தவறு என்று இடித்துக் கூறுவதுபோன்று காற்று, பளீர் பளீரென்று அவர்கள் முகத்தில் அடித்துக் கொண்டிருந்தது.

பின்புறமாயுள்ள ரோட்டில் கோச்வண்டி ஒன்று தயாராகக் காத்துக்கொண்டிருந்தது. குதிரைகள் குளிரால் நடுங்கின. விளாடிமரின் கோச்மேன் அவர்களுக்குத் தைரியம் கூறி வண்டியில் ஏற்றினான். சற்று நேரத்திற்கெல்லாம் சாட்ரினு செல்லும் பாதையில் வண்டி ஓடிக் கொண்டிருந்தது. விளாடிமரின் கோச்மேனின் கண்காணிப்பிலே இருவரையும் ஒப்படைத்து விட்டு, இப்பொழுது இளங்காதலனை விளாடிமரை நாம் பார்க்க வேண்டும்......

## 2

அன்று பூராவும் விளாடிமருக்கு ஒரே அலைச்சல். காலையில் எழுந்ததும் சாட்ரினுவில் உள்ள மதகுருவைப் பார்க்கப் போனான். எல்லாம் அன்று இரவு அவனுக்கும் மேரியாவுக்கும் நடக்கும் திருமண விஷயமாகத்தான். மதகுரு இல்லாமல் திருமணம் எப்படி நடக்கும்? மதகுரு சாமான்ய ஆளாக இல்லை. இலேசில் மசியவில்லை அவன். கடைசியில் என்ன என்னவோ சொல்லி அவனைச் சரிக்கட்டிவிட்டான் விளாடிமர். திருமணத்திற்குச் சாட்சிகள் வேண்டுமல்லவா? ஆகவே தெரிந்தவர்களைச் சாட்சியாகக்கூப்பிடப்புறப் பட்டான் அவன். நாற்பது வயதிற்கு மேற்பட்ட பணக்காரன் ஒருவன் அவனுடைய நண்பன். இந்த நண்பன் இந்தக் காரியத்திற்கு உடனே ஒத்துக்கொண்டான். பால்ய நினைவுகள்...இளமையில் அவன் விளையாடிய காதல் விளையாட்டுகள் நினைப்பு வந்து விட்டனவோ என்னவோ! அது மட்டுமல்ல,விளாடிமருக்கு அன்று பகல் சாப்பாடு அவன் வீட்டில்தான் நடந்தது. சாப்பாட்டுச் சமயத்தில் வந்து சேர்ந்த இன்னும் இரண்டு நண்பர்களையும் சாட்சியாக இழுத்துப் போட்டார்கள் விளாடிமரும் அவன் நண்பனும். உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்க வீடு திரும்பினான் விளாடிமர். இன்னும் எவ்வளவோ காரியங்கள் ஆகவேண்டியிருந்தன, பொழுது போய்விட்டது. மேரியாவை இரகசியமாக அழைத்துவர, கோச் வண்டியை அனுப்பினான். இன்னும் இரண்டு மணி நேரம் தான் இருந்தது. மேரியா சாட்ரினுவில் உள்ள சர்ச்சுக்கு வந்துவிடுவாள். இன்னும் ஆகவேண்டிய சில்லறை வேலைகளையெல்லாம் முடித்துக் கொண்டு கிளம்பினான். படபடத்த மனதுடன் தன் குதிரையின் மீது ஏறிக்கொண்டு சாட்ரினுவை நோக்கித் தட்டிவிட்டான் குதிரையை. அவனுக்குச் சாட்ரினுவிற்குச் செல்லும் பாதை நன்றாகத் தெரியும். இருபது நிமிடத்திற்குள் போய்ச் சேர்ந்துவிடலாம். குதிரை புறப்பட்டதோ இல்லையோ காற்று வேகமாக அடிக்க ஆரம்பித்தது. எங்கும் இருள் சூழ்ந்து கொண்டது. பனிப்புயல் பலமாக வீசத் தொடங்கியது. பாதை ஒன்றுமே புரியவில்லை விளாடிமருக்கு. ஒரு நிமிடத்திற்குள் வழியேகண் பார்வைக்குப் புலப்படாமல் மறைந்துவிட்டது. போலிருந்தது. அவ்வளவு மும்முரமாக அடித்தது காற்று. பனிவிழுந்து பாதை வேறு அடைத்துக் கொண்டது. முன்னால் போகமுடியவில்லை. விளாடிமருக்கும் பாதை தவறியது. விளாடிமர் எவ்வளவோ முயற்சி செய்து பார்த்தான். முடியவில்லை, குதிரை கண்டபடி ஓட ஆரம்பித்தது. எப்படியாவது சாட்ரினுவைப் போய் அடைந்து விடலாம் என்ற தைரியம் மட்டும் விளாடிமருக்கு இருந்தது. ஆனால் அரைமணி நேரம் குதிரை நிற்காமல் ஓடியும் சாட்ரினு தென்படவில்லை. குதிரை ஓடிக் களைத்து விட்டது. நுரை தள்ளத்தொடங்கியது. ஆனால் விளாடிமர் அதை இலேசில் விடவில்லை. எப்படியும். அவன் அங்கே போயாக வேண்டுமே!...... புயல் ஓயவே இல்லை. பனிக்கட்டிகள் விழத் தொடங்கின. கடைசியில் தான் புரிந்தது அவனுக்கு. சரியான பாதையை விட்டு வேறு பாதையில் தான் வந்து விட்டதை உணர்ந்தான். வேறு பாதை அவனை எங்கோ கொண்டுபோய் விட்டது. அதற்குள் நடுநிசியாகிவிட்டது. அவனுக்கு அழுகையே வந்துவிட்டது. மனக்கலக்கத்தினால் அவன் இன்ன வழி தான் போகிறோம். என்று தெரியாமலேயே போய்க்கொண்டிருந்தான். புயல் சற்றே தணிய ஆரம்பித்தது... மேகங்கள் கலையத் தொடங்கின. இருள் சற்று மங்கலாகியது. தூரத்திலே சிறு கிராமம் ஒன்று அவன் கண்களுக்குத் தென் பட்டது. அதை நோக்கிச் சென்றான். முதலில் பார்வைக்குத் தென்பட்ட சிறு வீட்டின் கதவைப் பலமாகத் தட்டினான். கிழவன் ஒருவன் கதவைத் திறந்தான்.

"யார் அது...என்ன வேண்டும்?" சற்று அழுத்தலாகவே இருந்தது அந்தக் கிழவனின் குரல்!

"சாட்ரினு......இங்கிருந்து எவ்வளவு தூரம் இருக்கிறது?"

சரியான பதில் உடனே சொல்லவில்லை கிழவன். நிதானமாக, "நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று இழுத்தான்.

விளாடிமருக்கு எரிச்சலாகத்தான் வந்தது. கிழவனின் கேள்விக்கு அவன் பதில் சொல்லவில்லை. "இங்கே பாரய்யா!...சாட்ரினுவிற்குப் போகத் தற்சமயம் ஏதாவது உடனே வசதிசெய்து தரமுடியுமா?" முரட்டுக்குரலிலே கத்தினான் விளாடிமர்.

"அந்த இழவெல்லாம் எனக்குத் தெரியாது. என் மகனைக் கூப்பிடுகிறேன். அவனுக்குத்தான்

இதெல்லாம் தெரிந்திருக்கும்" என்று விரக்தியுடன் கூறிக்கொண்டே உள்ளேயிருந்த அவன் மகனுக்குக் குரல் கொடுத்தான் கிழவன்.

சற்றுநேரத்திற்கெல்லாம் ஒரு வாலிபன் உள்ளே இருந்து வந்தான். அவனிடம் சமாச்சாரத்தைச் சொல்லி, அவனை இழுத்துக்கொண்டு புறப்பட்டான் விளாடிமர். சற்றுத்தூரம்சென்றதும் அந்த வாலிபனைப் பார்த்து, "இப்பொழுது மணி என்ன இருக்கும்?" என்று கேட்டான் விளாடிமர்.

"இன்னும் சில மணிநேரத்தில் பொழுது விடிந்துவிடும் போலிருக்கிறது" என்று பதில் வந்தது.

விளாடிமர் ஒன்றும் பேசவில்லை. சிலமாதிரி நின்றான். பின்பு மனதைத் திடப்படுத்திக் கொண்டு புறப்பட்டார்கள். தூரத்தில் சேவல் கூவும் சப்தம்கேட்டது. இரண்டுபேரும் சாட்ரினுவைச் சென்று அடையும்பொழுது பல பலவென்று விடிந்துகொண்டிருந்தது. சர்ச் பூட்டிக் கிடந்தது. அவனுடைய கோச்வண்டியை அங்கே காணோம். கூடவந்த பையனுக்குக் கையிலிருந்த சில்லறையைக் கொட்டிக் கொடுத்துவிட்டு மதகுருவைப் பார்க்க ஓடினுன் விளாடிமர். அங்கே அந்த மதகுரு அவனிடம் சொன்ன செய்திதான் எவ்வளவு பயங்கரமானது!......

3

......வாசகர்கள் இந்தச் சமயத்தில் மேரியாவின் வீட்டில் என்ன நடந்தது என்பதைக் கவனிக்க வேண்டும். ஒன்றும் நடைபெறவில்லை!......காலை ஆகாரத்திற்கு மேரியாவைக் கூப்பிட்டு வரச் சொல்லி வேலைக்காரியை அனுப்பினார்கள் அவளுடைய பெற்றோர்கள். உடல்நிலை சரியில்லை என்றும் சீக்கிரம் வருவதாகவும் மேரியா சொல்லச்சொன்னதாக வேலைக்காரி வந்துசொன்னாள், சிறிது நேரத்திற்கெல்லாம் மேரியாவே வந்துசேர்ந்தாள்.

'உன்னுடைய தலைவலி எப்படியிருக்கிறது அம்மா?" என்று தகப்பன் கேட்டான்.

ஏதாவது பதில் சொல்லவேண்டுமே என்று "பரவாயில்லை" என்றாள் மேரியா. பகல்பொழுது எப்படியோ கழிந்துவிட்டது. இரவு மேரியாவுக்கு ஜ்வரம் வந்துவிட்டது. டாக்டருக்கு ஆள் அனுப்பினார்கள். டாக்டர் வருவதற்குள் மேரியாவுக்கு ஜன்னிகண்டுவிட்டது கடுமையான ஜ்வரம் அவளை வாட்டி எடுத்துவிட்டது. இரண்டு வாரங்கள் அவள் தீவிர ஜ்வரத்தினால்திண்டாடிப் போய்விட்டாள். பெற்றோர்களுக்கோ ஒரே கவலை ...ஒரே பெண்ணாயிற்றே!... இருக்காதா என்ன? ...அன்று இரவு மேரியா விளாடிமருடன்ஓடிவிட முடிவு செய்து வீட்டைவிட்டுப் புறப்பட்டுப் போன சமாசாரம் அவளுடைய பெற்றோர்களுக்குத் தெரியவே தெரியாது. அவள் போகும் பொழுது எழுதி வைத்துவிட்டுப் போன இரண்டு கடிதங்களையும் திரும்பி வந்ததுமே தீக்கிரையாக்கிவிட்டாள். கூடச்சென்ற அந்தரங்க வேலைக்காரியும் அதைப்பற்றிப் பயத்தினால் மூச்சுவிடவில்லை. மதகுருவோ— சாட்சியாக வந்திருந்தவர்களோ இந்தப்பக்கமே தலைகாட்டவில்லை, கோச்மேனாவது சொல்ல வேண்டுமே...... உம்... கிடையாது, ஆகவே இந்த இரகசியம் பெரிய திட்டம் போட்டு அடக்கிவிட்டது போல் அப்படியே அடங்கிவிட்டது.

ஆனால் மேரியோ ஜன்னியில் உளறினதை வைத்துக்கொண்டு அவளுடைய தாய் தன் மகள் விளாடிமரின் மீது தீராத காதல் கொண்டிருப்பதையும் அவளுடைய காதல் வேகம் தான் அவளுடைய சீர்கேடான உடல் நிலைக்குக் காரணம் என்றும் தெரிந்து கொண்டாள். கணவன் காதிலும் இந்த விஷயத்தை நைஸாகப் போட்டு வைத்தாள், கொஞ்சம் கொஞ்சமாக மேரியா தேறிக்கொண்டே வந்தாள். விளாடிமர் இந்தப் பக்கமே வருவதை நிறுத்திவிட்டிருந்தான். மகளின் நிலை பெற்றோர்களின் இதயத்தை இளகச் செய்துவிட்டது. தன் மகளை விளாடிமர் திருமணம் செய்து கொள்வதில் தங்களுக்குப் பூரண சம்மதம் என்றும் உடனே வரவேண்டுமென்றும் விளாடிமருக்கே லெட்டர் போட்டான் மேரியாவின் தகப்பன். விளாடிமர் பதிலுக்கு ஒரு பெரிய வெடிகுண்டைத் தூக்கிப்போட்டான். தான் இனிமேல் இந்த ஜன்மத்தில் அவர்களுடைய வீட்டில் காலடி எடுத்து வைக்க முடியாதென்றும், தன்னை மன்னிக்கும்படியாகவும், அவலத்தின் சின்னமாக நடமாடும் தன்னைக்கண்டு தானே வெட்கப்படுவதாகவும் பதில் எழுதியிருந்தான், இது நடந்து சில தினங்களுக்குக்கெல்லாம் விளாடிமர் மறுபடியும் சேனையில் போய்ச் சேர்ந்துவிட்டதாகச் செய்தி வந்தது. இது நடந்தது 1812-ஆம் ஆண்டுத் துவக்கத்தில்......

மேரியாவுக்கு அவன் சேனைக்குப் போய்விட்டது முதலில் தெரியாது. சில மாதங்களுக்கப் புறம் யுத்தத்தில்காயம்பட்டவர்களின் லிஸ்ட்டில் அவனுடைய பெயரைப் பார்த்த பொழுது அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அந்த அதிர்ச்சியில் மறுபடியும் படுத்தபடுக்கையானாள் அவள்; ஆனால் இந்தத்தடவை சீக்கிரமே தேறிவிட்டாள்.

ஆனால் அதைவிடப்பலத்த இடி அந்தத் துர்ப்பாக்கிய குடும்பத்திற்கு நேர்ந்தது. மேரியாவின் தகப்பன் – கேவரிலா – திடீரென்று ஒரு நாள் செத்து வைத்தான். தாயும் மகளும், மூக்கைச் சிந்திப் போட்டுக்கொண்டே, இத்தனை துன்பத்துக்கும் இருப்பிடமாகிய அந்த எஸ்டேட்டை விட்டுப் பல மைல்கள் தாண்டி வேறு ஊருக்குப் போய்விட்டனர்,

மேரியாவிற்குத் திருமணம் என்ற எண்ணமே நாளுக்கு நாள் மறைந்து போய்விட்டது. புது ஊரில் எத்தனையோ வாலிபர்கள் அவளை மணம் புரிந்து கொள்ள முயற்சி செய்தனர். அவளோ எதையும் காதில் போட்டுக்கொள்ளவில்லை. அவளுடைய அன்னைக்கு மட்டும் தன் மகளுக்கு இன்னும் திருமணம் ஆகவில்லையே என்ற ஏக்கம் இருக்கத்தான் செய்தது. ஆனால் இந்த விஷயத்தில்மேரியா திடமாகஇருந்துவிட்டாள். 'மாஸ்கோ நகரிலே போரில் விளாடிமர் இறந்துவிட்டான்' என்ற செய்தி வேறு வந்தது. இந்தச் செய்தி முன் மாதிரி மேரியாவிற்கு எந்தவிதமான பலத்த அதிர்ச்சியை ஏற்படுத்தவில்லையென்றாலும், அவனுடைய நினைப்பை அவ்வளவு சீக்கிரம் அவள் இதயத்திலிருந்து நீக்க முடியவில்லை அவளால். அவனுடைய சாதுர்யமான சம்பாஷணைகள். அவனுடைய குறுவிளையாட்டுக்கள்—சரசஉரைகள்—குறு நகை—அவள்இதய அரங்கத்திலே எப்பொழுதாவது நடமாடத்தான் செய்தன!

ஆண்டுகள் சென்றன. யுத்தம் முடிந்து போர் முனைக்குச் சென்றவர்கள் திரும்பி, தம் தம் ஊருக்கு வரத் தொடங்கினார்கள், போர் முனையிலே வெற்றியடைந்த ருஷ்ய வீரர்களுக்கும் அந்தந்த ஊர்களிலே ராஜவரவேற்பு நடந்தது. நாடே குதூகலத்தில் ஆழ்ந்து கிடந்தது. ருஷியப் பெண்களும் இந்தக் கோலாகலத்தில் முழு மனதுடன் கலந்து கொண்டனர். பெரிய நகரங்களில் நடந்த குதூகல ஆர்ப்பாட்டங்கள் எங்கேயோ ஒரு மூலையில் ஒரு சிறு ஊரில் வசித்துவந்த மேரியாவிற்குத் தெரியவில்லை. ஆனாலும் ஒவ்வொரு ஊரிலும் தங்கள் ஊரைச் சேர்ந்தவர்கள் போர் முனையிலிருந்து திரும்பி வந்தபொழுது அவர்களுக்கு உபசாரமும் வரவேற்பும் பலத்த முறையில் நடைபெற்றன.

போர்முனைக்குச் சென்று மேரியா வசித்து வந்த ஊருக்கு வந்தவர்களில் பர்மினும் ஒருவன். அவன் சேனையில் உயர்ந்த பதவி வகித்தவன். அந்த ஊர்க்காரன். இளைஞன். அவனுக்கு இருபத்தைந்து வயது தான் இருக்கும். முகத்தில் களை சொட்டும். யாரையும் கவரக்கூடிய கவர்ச்சிகரமானதோற்றம் உடையவன். கம்பீரமான உடலமைப்பு. பேச்சில் சமர்த்தன். சிரித்துச் சிரித்துப் பேசியே சொக்க வைத்துவிடுவான். யாரையும் எளிதில் போய்க் கவரும் குளிர்ந்த பார்வை, அத்துடன் பெண்களுடன் உரையாடுவதிலே ஒரு தனி வழியை வகுத்துக் கொண்டவன். மேரியாவிற்குக் கூட அவனைக் கொஞ்சம் கொஞ்சமாகப் பிடிக்க ஆரம்பித்துவிட்டது. அவன் பழகும் பண்புமிக்க தோரணை, மரியாதையான பேச்சு, கம்பீரமான தோற்றம் அத்தனையும் அவள் மன அரங்கத்திலே அவ்வப்பொழுது நடமாட ஆரம்பித்தன. குதூகலமில்லாமல் இருந்த அவளுக்கு இப்பொழுது கொஞ்சம் குறுகுறுப்பு உண்டாகியது. ஒருவர் உள்ளம் ஒருவருக்குத் தெரியாமலேயே பழகினர் இருவரும். ஒருவருக்கொருவர் எதையோ மறைத்து வைத்துக் கொண்டு பழகினர் என்பது தெளிவாகத் தெரிந்தது. அவன் பார்வையிலே காதல் தென்றல் வீசும். ஆனால் அவன் பேச்சிலே அதன் சாயல் கூட இருக்காது. மேரியாவிற்கு ஒரே ஆச்சர்யம். விளங்கமுடியாத புதிராக இருந்தான் அவன். விவரிக்க முடியாத பிணைப்பு அவளை அவனிடத்தில் அக்கறை கொள்ளச் செய்தது, அவளுக்கே அதுபற்றி ஆச்சர்யம்தான். நாட்கள் செல்லச் செல்ல அவர்கள் ஊமைக் காதல் வளர்ந்துகொண்டே வந்தது. அக்கம்பக்கத்தில் உள்ளவர்கள் அவர்கள் திருமணத்தைப் பற்றிப் பகிரங்கமாகவே பேச ஆரம்பித்து விட்டார்கள். மேரியாவின் தாய்க்கு மகிழ்ச்சிதான். கடைசியில் தன் மகள், மனம் திரும்பி, கண்ணியமான ஒருபுருஷனைத் தேர்ந்தெடுத்துக் கொண்டது பற்றி அவளுக்குச் சந்தோஷம்.



.........அன்று மேரியா தோட்டத்திலிருந்தாள். அவளைத் தேடிவந்த பர்மினை முழுமனதுடன் தோட்டத்திற்கு அனுப்பினுள் மேரியாவின் தாய். எப்படியாவது இரண்டுபேரும் மனம்விட்டுப் பேசி, சீக்கிரம் திருமணம் நடந்தால் போதுமென்றிருந்தது அவளுக்கு! தோட்டத்திலிருந்த குளக் கரையிலே அழகுப் பதுமைப் போல் அமர்ந்திருந்தாள் மேரியா. தும்பைப் பூப்போல் வெள்ளை வெளேரென்று உடை. பார்க்க அற்புதமான கவர்ச்சியை ஊட்டிக் கொண்டிருந்தது. மாலை இளங்காற்று காதலர்களிடையே குதூகலிப்பை உண்டாக்கியது. இன்பகரமான சூழ்நிலை அவர்களைச் சொக்கவைத்தது.

அவன் அவளுடைய மலர்க்கரங்களை எடுத்துத் தன் மடியில் வைத்துக்கொண்டு, "மேரியா...... நான் உன்னைக் காதலிக்கிறேன்...... உன்னை எப்படிக் காதலிக்கிறேன் தெரியுமா?" என்று கூறினுன். வார்த்தைகள் பெருமூச்சுடன் திணறிக் கொண்டே வந்தன.

மேரியாவிற்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. தலையைத் தாழ்த்திக் கொண்டாள்......"மேரியா... உன்னைப் பார்த்ததிலிருந்து என்மனம் ஒரு நிலையில் இல்லை...... உன் அழகுத் தோற்றம் என் இதயத்தை ஆட்டி எடுத்துவிட்டது......ஆனாலும் மேரியா...... உனக்கு இந்த விஷயத்தைப்பற்றிச் சொல்ல எனக்குத் தயக்கமாக இருக்கிறது...... உன்னிடம் இதுநாள் வரையில் ஒரு இரகசியத்தைச்சொல்லாமல் மூடிவைத்திருந்தேன்...இன்று சொல்லிவிடுவது என்று முடிவு செய்துவிட்டேன். நான் செய்த காரியம்... நம்மிருவருக்குமிடையே தடையாக இருக்குமோ என்றுதான் மனம் கலங்குகிறேன்......" கலங்கிய கண்களுடன் பேசினுன் அவன்.

விளாடிமருடன் தான் நடத்திய உடன்போக்கு, கோரப் புயல் வீசிய அந்தப் பாழ் இருட்டிலே நடந்த அந்தப் பயங்கர சம்பவம் அவளுக்கு ஞாபகத்திற்கு வந்தது. அவள் உடலெல்லாம் ஆடியது......... நடுங்கும் குரலிலே......... "அந்த மாதிரி தடை எனக்கும் உண்டு......நான் உன் மனைவியாக ஆகமுடியாதே அன்பனே!"...... என்று கூறினுள்.

......" எனக்குத் தெரியும் மேரியா...... நீயும் ஒரு காலத்தில் காதலித்தாய். உள்ளன்புடன் காதலித்த உன் காதலன் இறந்துவிட்டது......... இந்த மூன்று வருடங்கள் முள்மீது படுக்கை போல நீ காலத்தைக் கடத்திவந்தது... எல்லாம் எனக்குத் தெரியும்...... ஆனுலும் கண்ணே! என் கோரிக்கையைப் புறக்கணித்து விடாதே... நீ மட்டும் என்னை மணம்புரிந்து கொள்ள முடியுமென்றுல்...... அதைவிட மகிழ்ச்சி தரக்கூடிய செய்தி........."

"அன்பனே...... ஏதோதோ சொல்லி என்னைச் சித்திரவதை செய்யாதே......"

"தெரியும்...... மேரியா...... நீ மட்டும் என்னுடையவளாக இருந்தால்...... உம்...... மேரியா நான் கல்யாணமானவன்...... இதற்கு முன்பே எனக்கு ஒரு தடவை கல்யாணமாகிவிட்டது!"

மேரியாவிற்குத் தூக்கிவாரிப் போட்டது. ஆச்சர்யத்துடன் அவனை விறைத்துப் பார்த்தாள்.

"ஆம் மேரியா...... எனக்கு இதற்கு முன்பே ஒருதடவை கல்யாணமாகிவிட்டது. அந்தச் சம்பவம் நடந்து நான்கு ஆண்டுகளாகின்றன... ஆனுல் என் மனைவி யார் என்றே, அவள் எங்கிருக்கிருள் என்றே எனக்கு இதுநாள் வரையில் தெரியாது...... அதுமட்டுமல்ல...... அவளை...... என் மனைவியை இனி மற்றொருதடவைகூடப் பார்க்கமுடியுமா என்பதுகூடச் சொல்லமுடியாது என்றுல்........."அவன் குரல் கம்மியது.

"நீ என்னதான் சொல்கிருய்......பர்மின்...... உண்மையாகவா?...... உம்...... அப்புறம்...... தயவுசெய்து பூரா விபரத்தையும் சொல்லேன்..." மேரியா ஆச்சரியமும் வியப்பும் தோன்றக் கூவினுள்.

பர்மின் சில நிமிடங்கள் மௌனமாக இருந்தான். பின்பு விம்மும் குரலிலே சொல்ல ஆரம்பித்தான்...... 1811-ஆம் ஆண்டின் இறுதி......... என்னுடைய படையைப் போய் உடனே சேர வேண்டுமென்று விடுமுறையிலிருந்த எனக்கு மேலிடத்திலிருந்து உத்தரவு வந்தது. என் வேலைக்காரனுடன் படை தங்கியிருந்த வில்னு என்ற ஊரை நோக்கி அவசரமாய்ப் போய்க்கொண்டிருந்தேன்......ஒருநாள் முன்னிருட்டில் மத்தியில் ஒரு சிறு ஊரில் தங்கிப் புறப்பட வேண்டி வந்தது. அந்தச்சமயம் பார்த்துக் கடும் பனிப்புயல் வீசத் தொடங்கியது. உடனே புறப்பட முடியவில்லை. சற்று நேரம் கழித்துப் புயலின் வேகம் சற்றுக் குறைய ஆரம்பித்தது. நாங்கள் புறப்பட்டோம். கொஞ்சதூரம்தான் சென்றிருப்போம். புயல் மறுபடியும் கடுமையாகியது. தங்குவதற்கு வசதியாக இடம் எங்கும் அருகில் கிடைக்கவில்லை. சமீபத்தில் ஓடிக்கொண்டிருந்த ஆற்றின் ஓரமாகவே குதிரைகளை விரட்டிக்கொண்டிருந்தோம். புயல் தணியவில்லை. என்ன செய்வது என்றே புரியவில்லை. இந்த இக்கட்டான நிலையில் திண்டாடிக்கொண்டிருந்த பொழுது தூரத்தில் ஏதோ வெளிச்சம் தெரிந்த மாதிரி இருந்தது. வெளிச்சம் வந்த திசையை நோக்கிச்சென்றேம். பக்கத்துச் சிறு கிராமத்தில் உள்ள மாதாகோவிலில் ஏற்றிவைக்கப்பட்டிருந்த தீபத்தின் மங்கலான ஒளிதான் அது. கோயிலின் கதவுளோ அந்த நேரத்திலும் திறந்திருந்தன. வெளிப்புறத்தில் இரண்டு மூன்று குதிரைகளும் ஒரு கோச் வண்டியும் இருந்தன. சிலபேர் சர்ச்சின் உள் தாழ்வாரத்தில் அங்குமிங்கும் போய்க்கொண்டிருந்தனர்...

நாங்கள் உள்ளே நுழைந்தோம்...எங்கும் மங்கலான ஆள் அடையாளம் புரிந்துகொள்ள முடியாத வெளிச்சம்தான் பரவி இருந்தது.

..."அட ஆண்டவனே...இப்பொழுதுதான் வருகிருயா?...எவ்வளவு நேரம் உனக்காகக் காத்துக்கொண்டிருக்கிறதப்பா!..." என்று கூறிக்கொண்டே என்னை அவசர அவசரமாக யாரோ வரவேற்ருர்கள்.

"அப்பாடி......இப்பொழுதாவது வந்தாயே!... நீ வரவில்லையென்ருல் மணப்பெண் கண்டிப்பாக உயிரை விட்டிருப்பாள்......" இது இன்னொருவர்!

நான் ஒன்றும் பேசவில்லை. சிலைபோல் நின்றுகொண்டிருந்தேன்.

மதகுரு போலிருக்கிறது...என் அருகில் வந்து "உம்......ஆரம்பிக்கலாமா?" என்ருர்.

நான் இருந்த நிலையில் என்ன செய்வதென்றே புரியவில்லை. மனம் குழம்பிக் கிடந்தது. எதையோ நினைத்துக்கொண்டு "சரி" என்றேன்.

மணப்பெண் என் அருகில் கொண்டுவந்து நிறுத்தப்பட்டாள். முகம் என் கண்களுக்குத் தெளிவாகப் புலப்படவில்லை. ஆனல் அந்த மங்கலான ஒளியிலும், அவள் உடலமைப்பிலிருந்து அவள் நல்ல அழகி என்றுமட்டும் என்னுல் ஊகிக்க முடிந்தது. எனக்கு விவரிக்க முடியாத ஒரு வெறி......சொல்ல முடியாத ஒரு முட்டாள் தனமான கொடிய விளையாட்டுப் புத்திதான் என்னை அப்பொழுது பிடித்தாட்டியிருக்க வேண்டும்......மூன்று பேர் சாட்சியாக வந்து நின்ருர்கள். மணப்பெண்ணுடன் அவள் தோழியும் வந்திருந்தாள். சட்புட்டென்று காரியம் முடிந்தது. எங்கள் இருவருக்கும் அந்த இரவிலே திருமணம் நடந்தது.



...சடங்குப் பிரகாரம் என் மனைவியின் முகத்தைத் தூக்கி நிறுத்தி அவள் அதரங்களிலே முத்தமிடப் போனேன்......

"ஐயோ......ஐயோ......அவர் இல்லையே...இது யாரோ வேறு மனிதர்......கடவுளே!' என்று கீச்சென்று கத்திக்கொண்டே கீழே விழுந்தாள் அவள்......

சாட்சிகள் என்னை முழித்துப் பார்த்தனர்...... என் மனம் படபடவென்று அடித்துக்கொண்டது. பட்டென்று வெளியே ஓடிவந்து குதிரையின்மீது ஏறிக்கொண்டு ஓடியே வந்துவிட்டோம்......"

"ஆண்டவனே......அப்படியென்ருல் உங்கள் மனைவிக்கு அதன் பிறகு என்ன ஆயிற்று என்றே உங்களுக்குத் தெரியாதா?" ஆச்சர்யமும் வியப்பும் தோன்ற வினவினுள் மேரியா......

"எனக்குத் தெரியவே தெரியாது, மேரியா... திருமணம் நடந்த அந்தச் சிறு ஊர் பேர்கூட எனக்குத் தெரியாது. அந்தக் கலவரத்தில் என்னுடைய கொடிய விளையாட்டுப் புத்தியினுல் நேர்ந்த அந்தத் துர்ப்பாக்கிய சம்பவம் அவ்வளவு தீவிரமாக என் மூளையில் ஏறவில்லை. அன்று புறப்பட்டவன்தான். பலத்த புயலில் அந்த ஊர் எந்தத் திசையில் உள்ளது என்பதுகூடப் புலப்படவில்லை...என்னுடன் கூடவந்த வேலைக்காரன் போர் முனையில் இறந்துவிட்டான். ஆகவே என் விளையாட்டுப் புத்தியினுலும், அயோக்கியத்தனமான காரியத்தினுலும் பழி வாங்கப்பட்ட அந்தத்துர்ப்பாக்கியப் பெண்என்ன ஆனுள்......எங்கே இருக்கிருள் என்பதைக்கூடக் கண்டுபிடிக்கவே வழியில்லாமல் போய் விட்டது......"

...மேரியாவின் உடலே நடுங்கியது. நடுங்கும் கரங்களால் அவனுடைய கைகளைப் பிடித்துக்கொண்டே...... "ஆண்டவனே நீங்கள்தானு அவர்.........என்னைத் தெரியவில்லையா உங்களுக்கு......!" என்று கத்தினுள்......

பர்மின் விழித்தான். சற்று நேரம்தான்...... பிறகு அப்படியே அவளை இறுக இழுத்து அணைத்துக்கொண்டான்.



## ஹிப்பாலஸ் பருவக்காற்று வீசினால்

பாடலிபுத்திரத்தைத் தலைநகராகக் கொண்டு குப்தர்கள் ஆட்சி புரிந்த கி. பி 4ம் நூற்றாண்டில் இந்தியா கடல் வலிமை பெற்று விளங்கிவந்தது.

அசோகர் ஆட்சி புரிந்த கி. மு. 275ம் ஆண்டு முதற்கொண்டே இந்திய மாலுமிகள் வியாபார சம்பந்தமாக அறுபது எழுபது நாட்கள் சேர்ந்தாற்போல் கடற்பிரயாணம் செய்வதுண்டு அது முதற்கொண்டு பாரசீகம், ஆண்டியாக், அலெக்ஸாண்டிரியா முதலிய தேசங்களின் வியாபார ஸ்தலங்களிலெல்லாம் இந்தியச் சரக்குகள் காணப்பட்டன.

அராபிய, ரோமானிய வியாபாரிகளுக்கெல்லாம் இந்தியாவில் முக்கியத் துறைமுகமாக விளங்கியது கிராங்கனூர். 'ஹிப்பாலஸ்' மாத்திரம் வீசினால், 40 நாட்களில் கிராங்கனூர் சேர்வேன் என்றார் ப்ளினி கி. பி. 45ம் ஆண்டில் ஹிப்பாலஸ் என்பவரால் கண்டுபிடிக்கப்பட்ட இப்பருவக் காற்றுகள் அநேக மேற்கத்திய கப்பல் கூட்டங்களை 'பாரிகாஸா' 'ஸொப்பாரா' மற்றும் இதர இந்தியத் துறைமுகங்களுக்கு இலகுவாகத் தள்ளிக்கொண்டு வந்தன.

கிழக்குத் திக்கிலும்கூட இந்தியக் கப்பல் கூட்டங்கள் கடக்காத கடல்களே கிடையாது. இவ்வித்மாக இந்தியாவின் செல்வாக்கு அதிகரித்ததுடன் அண்டை அயல் நாடுகளில் இந்தியாவின் புராதனப் பண்பாடும், அறிவு மேன்மையும் பரவின.

தற்சமயம் இந்தியக் கப்பல்கள் முன்போல் இந்தியச் சரக்குகளை உலகத்தின் எல்லா வியாபார ஸ்தலங்களுக்கும் ஏற்றிச் செல்கின்றன. இவ்இந்திய மறுமலர்ச்சியில் டாடா எஃகு ஒரு இன்றியமையாத பொருள்.

தி டாடா அயரன் & ஸ்டீல் கம்பனி லிமிடெட்.

TN. 3013

# நியூயார்க்கில் ஒரு நாள்

சி. வி. ராமகிருஷ்ணன்

நியூயார்க் நகரம் சில தீவுகளாலானது. அவற்றுள் நான் தங்கியிருந்த பகுதியாகிய மான்ஹாட்டன் தீவும் ஒன்று. ஆகையால் எந்தத் திசையில் சென்றாலும் கடற்கரையைக் காணலாம். கடற்கரைக்கருகில் விசாலமான வீதிகள் வானளாவிய கட்டடங்களுடன் அமைந்திருப்பது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கிறது. அவற்றின் அழகைப் பருகியவாறே நடந்துகொண்டிருந்தேன். அப்பொழுதுதான் திடீரென்று இன்ஸ்டிடியூட் ஆப் இண்டர்நாஷனல் எஜுகேஷன் (Institute of International Education) க்கு வரச் சொல்லி, காலையில் அம்மையார் அழைத்தது நினைவுக்கு வந்தது. உடனே அங்கே செல்லும் பஸ் ஒன்றில் ஏறிக்கொண்டேன்.

நியூயார்க் போக்கு வரவுக்கு ஏராளமான பஸ்ஸுகள் இருக்கின்றன. தவிர, இங்கே பஸ்ஸுக்குக் கண்டக்டர் கிடையாது—ஒரு ஸ்டாப்பில் பஸ் நின்றவுடன் கதவு தானாகத் திறந்து கொள்கிறது. இதைத் திறப்பதற்கு 'ஸ்விட்ச்' டிரைவருடைய ஸீட்டிற்கருகில் இருக்கிறது. ஏறுபவர் ஒவ்வொருவரும் தாமாகவே ஒரு பெட்டியில் பத்து சென்ட் போட்டுவிட வேண்டும். ஒருவரும் டிக்கட் டிக்கட் என்று ஏலம் போடுவது இல்லை! ஆனால் டிரைவருக்கருகேயுள்ள கதவு வழியாகத்தான் ஒவ்வொருவரும் உள்ளே போகவேண்டுமாகையால் எல்லாரும் பத்து சென்ட் போட்டுவிட்டுப் போகிறார்களா என்பதை டிரைவர் கண்காணிக்க முடியும். நிமிஷத்திற்கு ஒரு பஸ் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ச்சியாக வந்துகொண்டேயிருப்பதால் பஸ்ஸில் கூட்டம் அதிகமாகக் கிடையாது. பஸ்ஸில் 'Air conditioning' உண்டாகையால் குளிர்காலம் கோடைக்காலம் என்ற வித்தியாசமில்லாமல் பஸ்ஸுக்குள் எப்பொழுதும் சுகமான சீதோஷ்ண ஸ்திதியை அனுபவித்துக்கொண்டிருக்கலாம். பஸ்ஸைவிட்டு இறங்கும்பொழுதுதான் வருஷ முழுவதும் வஸந்த காலம் அல்ல என்று தெரியும். பஸ்ஸில் சார்ஜு மிகவும் குறைவு. கூட ஒரு சூட்கேஸ் மாத்திரம் எடுத்துச் செல்லலாம். நிறையச் சாமான்கள் இருந்தால் டாக்ஸியில் தான் செல்லவேண்டும்.

Institute of International Education-க்குப் போய்ச் சேர்ந்தேன். (சர்வதேசக் கல்வி ஸ்தாபனம்) இது உலகில் உள்ள எல்லாத் தேசத்துக் கல்விஸ்தாபனங்களுடன் தொடர்பு வைத்துக்கொண்டிருக்கிறது. மாற்றல் திட்டம் (Exchange Scheme) மூலம் அயல்நாட்டுக் கல்வியாளர்கள் அமெரிக்காவுக்கு வருவதற்கும் அவர்கள் அமெரிக்காவில் கல்வி பயில்வதற்கும் அமெரிக்க நாகரிகத்தை அறிவதற்கும் வசதிகள் செய்யப்படுகின்றன. 'Pacific-Asia Division'க்குச் சென்று அங்கு உள்ளவர்களைப் பார்த்தேன். நான் இன்னாரென்று தெரிந்ததும் எல்லோரும் என்னைச் சந்திக்கப் பிரமாதமான ஆவலை வெளியிட்டார்கள். எனக்கு உடனே உச்சி குளிர்ந்துவிட்டது! பிறகுதான் அவர்களுடைய பேராவலுக்குக் காரணத்தைச் சொன்னார்கள்! காரணம் இதுதான்: எனக்கு இரண்டு மூன்று இடங்களிலிருந்து அழைப்பு வந்ததால் இந்த ஸ்தாபனத்தார் சொன்ன இடத்திற்குப் போக மறுத்துவிட்டு, எனக்குப் பிடித்த இடத்திற்குத்தான் போக முடியும் என்று எழுதிவிட்டேன். ஆனால், எனக்குப் பிடித்த இடத்திற்குச் செல்ல அவர்களிடமிருந்து பிரயாணச் செலவுக்குப் பணம் வாங்கிவிட்டேன்! இது விஷயமாக நான் எழுதிய கடிதங்களடங்கிய ஒரு பெரிய 'பைல்' (file) என்னிடம் காட்டிவிட்டு, இத்தனை விடாக்கண்டரைப் பார்க்க, தாங்கள் ஆவலாக இருந்ததில் என்ன வியப்பு என்று கேட்டார்கள்! இவ் விஷயமான தபாலுக்கே நான் நூறு ரூபாய் செலவு பண்ணியிருப்பேன். என் கடிதங்கள் அவர்களைத் திணற வைத்தன போலும்! "என் நாட்டிலே நான் ஓர் 'அமெச்சூர்' எழுத்தாளன். அமெச்சூர் எழுத்தாளர்களுக்குள்ள குறைகள் என்னிடமும் இருக்கும். நான் எழுத ஆரம்பித்தால் ஓயமாட்டேன்" என்று நான் சொன்னபோது அனைவரும் 'கொல்'லென்று சிரித்தார்கள். அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு வெளியேறினேன்.

Institute-லிருந்து வெளியே வந்தவுடன் அருகில் உள்ள Tube train station-க்குச் சென்றேன். நியூயார்க்கில் போக்கு வரவுக்

காக 'எலிவேட்டர்' (Elevator trains) 'அண்டர்க்ரௌண்ட்' (Underground trains) ரெயில் வண்டிகளும் இருக்கின்றன. முதலில் கூறியவை தெருவுக்கு மேலே போடப்பட்ட இருப்புப் பாதைகள் வழியாகச் செல்கின்றன. ரெயில் மேலே ஓடுகிறது. அடியில் பஸ், கார் முதலியன சகஜமாகச் சென்று கொண்டிருக்கின்றன. அண்டர்க்ரௌண்டு ரெயில் வண்டிகள் (சுரங்கப்பாதை வழியாகச் செல்லும் வண்டிகள்) இங்கு மிகவும் சாதாரணம். தேம்ஸ் நதியின் அடிவழியாக லண்டனில் இருப்புப் பாதை செல்வது போல் இங்கு ஹட்ஸன் நதியடியில் இருப்புப் பாதை செல்கிறது. சுரங்கப்பாதை ரயில் வண்டிகள் வழியாக எந்த இடத்திற்கு வேண்டுமானாலும் போகலாம். நடுவில் ஏதாவது ஒரு ஸ்டேஷனில் 'ஏறி', எலிவேட்டர் வண்டிக்கு மாற்றிக்கொள்ளலாம்.

பார்தாம் (Fordham) யூனிவெர்ஸிடியைச் சேர்ந்த புரொபஸர் நார்டு (Nord) என்பவர் என்னை அழைத்தவர்களில் ஒருவராகையால் அவரைப் பார்க்க விரும்பினேன். அப்படியே யூனிவெர்ஸிடியையும் பார்க்க வேண்டும் என்ற விருப்பம் இருந்தது. யூனிவெர்ஸிடிக்கு டியூப் புகைவண்டியில் செல்லலாம் என்ற எண்ணத்துடன்தான் அண்டர்க்ரௌண்ட் ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றேன். அப்படியே அமெரிக்காவில் ட்யூப் ரெயில் எப்படி இருக்கிறது என்றும் பார்க்கலாம் அல்லவா? ஸ்டேஷனில் நுழையும் இடத்தில் ஒரு விக்கெட் கேட் இருக்கிறது. இது 10 செண்ட் போட்டால் தான் உள்ளே விடும். ஒரு சமயத்தில் ஒரு ஆள் தான் உள்ளே போகமுடியும். 10 செண்ட் போட்டுவிட்டு உள்ளே நுழைந்து பிளாட் பாரத்திற்குச் சென்று வண்டிக்காகக் காத்துக்கொண்டிருந்தேன். எங்கே போவதற்கு வேண்டுமானாலும் 10 செண்ட்தான். கேட்டில் போடுவதைத் தவிர உள்ளே டிக்கெட் கொடுப்பதோ புக்கிங் ஆபீஸோ ஒன்றும் கிடையாது. இந்த ஸ்டேஷனிலிருந்து நான் செல்லவேண்டிய இடமாகிய பர்தாம் யூனிவெர்ஸிடி 10 மைலில் இருந்தது. பிளாட்பாரத்தில் சிகரட், 'சூயிங் கம்' (Chewing gum) முதலியன யந்திரங்களால் விற்கப்படுகின்றன. அதாவது நம் ஊர் ரெயில்வே ஸ்டேஷன்களில் யந்திரத்தில் பணம் போட்டால் எடை எடுத்துக்கொள்ள முடிகிறதல்லவா? அது மாதிரி அங்கே யந்திரத்தில் காசு போட்டால் சிகரட் முதலிய பொருள்கள் வெளியே வரும்! கடைசியாக ரயிலும் வந்தது. ஏறி உட்கார்ந்து கொண்டேன். எல்லாம் ஒரே வகுப்புத்தான். ஆனால் ரயில்கள் லண்டனில் இருப்பதைப்போல் அவ்வளவு சுத்தமாக இல்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

ஸ்டேஷனில் பிரயாணிகள் பெரிய பெட்டிகளைக்கூட முடிந்தவரை தாமே தூக்கிக் கொண்டு போவதைப் பார்த்தேன். கையில் சுமை ஒன்றும் இல்லாமல் ஊரைச் சுற்றிக் கொண்டிருந்த எனக்கு இது வியப்பாக இருந்தது. ஆனால் ஒரு சாமான் தூக்கப் போர்ட்டர் கூலி 30 செண்ட். (சுமார் ஒன்றரை ரூபாய்) என்று தெரிந்ததும் என் ஆச்சரியம் மறைந்துவிட்டது. அமெரிக்கர்கள் வெளியே போனால் ஒரு சூட் கேஸ் மாத்திரந் தான், அதுவும் கையில் தூக்கிக்கொண்டு போகக்கூடிய அளவுள்ளதாக எடுத்துக் கொள்கிறார்கள். நம்மவர்கள் மாதிரி ஏகப்பட்ட மூட்டை முடிச்சுகளுடன் செல்வதில்லை. நம் ஊரில் இலைக்கட்டு, கீரைக்கட்டு முதற்கொண்டு எடுத்துச்செல்லும் அன்பர்களின் நினைவுடன் அவர்கள் சாமான்களை ரயில் முழுவதும் நிரப்பி விடுவதால் பிரயாணிகளுக்கு ஏற்படும் 'சௌகரியமும்' அதன் விளைவுகளும் நினைவுக்கு வந்தன. போர்ட்டர் கூலி அதிகமாக இருப்பதும் ஒரு நன்மைதான் என்று நினைத்தேன்.

இங்கே ஒரு 'செண்ட்' தான் குறைந்த மதிப்புள்ள நாணயம். 100 செண்ட் ஒரு டாலர். ஒரு செண்டின் மதிப்பு சுமார் ஓர் அணா என்று சொல்லலாம். ஒரு டாலர் நாலரை ரூபாய் மதிப்புள்ளது. 1 செண்டுக்குக் குறைந்து ஒன்றுமே வாங்க முடியாது. கையில் பணமேயில்லை என்பதற்குக் கையில் ஒரு செண்டுகூட இல்லை என்றுதான் சொல்வது வழக்கம். விலைவாசிகளைக் கவனிக்கும்போது நம்முடைய தேசத்தில் ஒரு ரூபாயும் ஒன்றுதான், இங்கு ஒரு டாலரும் ஒன்றுதான் என்று தோன்றுகிறது. ரூபாய் நோட்டுகளைப் போல இங்கு டாலர் நோட்டுகள் இருக்கின்றன. ஒரு டாலருக்குக் குறைந்த பணம் நாணயமாக இருக்கிறது. ½ ரூ. ¼ ரூ. 2 அணா 1 அணா ½ அணா ¼ அணா நாணயங்களைப் போல் 50 செண்ட் 25 செண்ட் 10 செண்ட் 5 செண்ட் 1 செண்ட் நாணயங்கள் இருக்கின்றன. 1 செண்டின் மதிப்பு சுமார் 1 அணா என்றாலும் 1 தம்பிடியாக நினைத்துக் கொண்டு செலவு செய்ய வேண்டும். நிலைமை இப்படி இருக்கும்பொழுது போர்ட்டருக்கு 30-செண்ட் கொடுக்க அமெரிக்கர்கள் தயங்குவதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

பார்தாம் ரோடை அடைந்தவுடன் ஸ்டேஷனில் இறங்கி வெளியே வந்தேன். அங்கிருந்து ஒரு பர்லாங்கில் உள்ள யூனிவெர்ஸிடியை நோக்கி நடந்தேன். இங்கு யூனிவெர்ஸிடிகள் சிறு நகரங்களைப் போல் இருக்கின்றன. யூனிவெர்ஸிடிகளில் படிக்கும் மாணவர்கள் வேலைபார்ப்பவர்கள் எல்லாரும் ஒரு 'காலனி' மாதிரி அமைத்துக் கொண்டு வசிக்கிறார்கள். இங்கேயே கடைகள், ஆஸ்பத்திரிகள், ஹோட்டல்கள் முதலிய எல்லா வாழ்க்கை வசதிகளும் இருக்கின்றன. மாணவர்களுள் பலர் மணமானவர்கள். இவர்கள் குடும்பத்துடன் வசிக்கிறார்கள். கணவன் படிப்பதற்காக மனைவி ஏதாவது தற்காலிக உத்தியோகம் பார்ப்பது மிகவும் சாதாரணம்.

யூனிவெர்ஸிடியில் நேராகப் புரொபஸர் நார்டின் இலாகாவுக்குச் சென்றேன். இவர் உயிர் இரசாயன ஆராய்ச்சி இலாகாவின் (Bio-chemistry) தலைவராக இருக்கிறார். இந்தியாவிலிருக்கும் பொழுதே என் ஆராய்ச்சி விஷயமாக அவரைச் சந்திக்க வேண்டும் என்ற அவா எனக்கு இருந்தது. மேலும் அவர் தம்முடன் ஆராய்ச்சி செய்ய என்னை அழைத்திருந்தார். ஆனால் டாக்டர் க்ரீன் அதிகச் சம்பளம் கொடுக்கிறேனென்று சொன்னதால் வெளிநாட்டில் நமக்கும் செலவு கட்டுப்படியாக வேண்டுமேயென்ற எண்ணத்துடன் அவரிடம் வேலை செய்வதாக ஒபபுக்கொணடேன். புரொபஸர் நார்டிடம் உண்மையைச் சொல்லிவிட்டு, "டாக்டர் க்ரீனிடம் கொஞ்ச காலம் அனுபவம் பெற்ற பின் உங்களிடம் வருகிறேன்" என்று சொன்னேன். அவர் சற்றும் ஆத்திரம் அடையாமல் அமைதியாகத் தம்முடைய ஆராய்ச்சிகளையும் சாதனைகளையும் எனக்கு விவரித்துவிட்டு நான் எப்பொழுது வேண்டுமானாலும் அவரிடம் வேலைசெய்ய வரலாம் என்று கூறினார். ஆராய்ச்சித்துறையில் அவரும் டாக்டர் க்ரீனும் பரம விரோதிகள் என்று நான் பின்னால் அறிந்தபொழுது அப்படியிருந்தும் அவர் அவ்வளவு முகமலர்ச்சியுடனும் சிநேக மனப்பான்மையுடனும் என்னிடம் நடந்துகொண்டதை நினைத்துப் பார்த்து வியந்தேன். நம்நாட்டில் பெரிய கல்விமான்களிடம்கூட இந்த மனப்பான்மை இல்லாதது வருந்தத்தக்கது.

புரொபஸர் நார்டிடம் விடைபெற்றுக் கொண்டு திரும்பவும் டியூப் ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சென்று அண்டர்க்ரௌண்ட் ரயில் மூலம் ஐந்தாவது அவென்யூவுக்கு (Fifth Avenue) வந்து சேர்ந்தேன். இது உலகின் பெரிய கடைவீதிகளுள் ஒன்று. இங்கேதான் நியூயார்க்கின் பிரசித்திபெற்ற வானளாவும் மாளிகைகள் (sky scrapers) இருக்கின்றன. இங்குதான் உலகத்திலேயே மிக உயர்ந்த கட்டடமாகிய Empire Building இருக்கிறது. 1250 அடி உயரமுள்ள இக்கட்டிடத்தில் 102 அடுக்குகள் இருக்கின்றன. இந்தக் கட்டிடத்தில் மாத்திரமே 25000 ஜனங்கள் வசிக்கிறார்கள்! அதாவது ஒருபட்டணமே இதில் அடங்கியுள்ளது. நியூயார்க்கில் இம்மாதிரி பெரிய கட்டடங்களுக்குள்ளேயே கடைகள், ஹோட்டல்கள், கம்பெனிகள், ஆபீஸுகள், ஆஸ்பத்திரிகள் முதலிய எல்லாம் இருக்கின்றன. மேல் மாடியில் வசிக்கும் ஒருவருக்குக் கட்டடத்தை விட்டுக் கீழே வரவேண்டும் என்ற கட்டாயமே இல்லை. H. G. Wells என்ற பிரசித்தி பெற்ற ஆங்கில ஆசிரியர் 'இனி உருவாகும் விஷயங்கள்' (In the shape of things to come) என்ற தமது நூலில் "நவீன நாகரிகம் வளர வளர வருங்காலத்தில் பூமியையே பார்க்காமல்

விண்ணவரை ஏவல்கொள்ளலாம் நியூயார்க்கிற்குப் புகழ்தேடித்தரும்
மாடமாளிகைகளும் கூடகோபுரங்களும்



குழந்தைகள் வளரும். ஒரு மாடியை விட்டு இன்னொரு மாடிக்கு ப்ளேனிலேயே செல்லும் காலம் வரும். நடப்பது என்பது அபூர்வமான காரியமாகிவிடும்'' என்று எழுதியிருப்பது நினைவுக்கு வந்தது. Empire Building கில் 75 லிப்டுகள் (Lifts) இருக்கின்றன. இதன் மேல்மாடியில் ஒரு observation tower இருக்கிறது. சென்னை லைட் ஹௌஸில் ஏறிப்பார்த்தால் நகரம் முழுவதும் தெரிவது போல இதிலிருந்து நியூயார்க் முழுவதையும் பார்க்க முடிகிறது. காலை 9-மணியிலிருந்து நள்ளிரவு 12 மணி வரை இது திறந்திருக்கிறது. இதற்குள் செல்வதற்குத் தலைக்கு 1¼ டாலர் (6 ரூ.) கொடுக்க வேண்டும். குழந்தைகளுக்கு 1½ ரூபாதான். இந்தக் கோபுரத்திலிருந்து Flatiron building-ஐப் பார்க்க முடிகிறது. இதன் விசேஷம் என்னவென்றால் இது முழுவதும் இரும்பாலேயே கட்டப்பட்டுள்ளது.

எம்பயர் பில்டிங்கின் கடைசி மாடிக்குச் செல்லும் வழியில் 1 ஸெகண்டில் போட்டோ எடுத்துக் கொடுக்கும் மெஷினும், நம்முடைய குரலைப் பதிவு செய்து கொடுக்கும் மெஷினும் வைக்கப்பட்டிருக்கின்றன. பணம் போட்டால் இவை வேலை செய்யும் — கூலியில்லாத வேலை கிடையாது! அங்கேயே இன்னோரிடத்தில் பணம் போட்டால் அங்குள்ள தூரதரிசினி மூலம் பட்டணத்தின் நாலா பக்கங்களையும் நன்கு பார்க்கலாம். சுற்றிலும் நீரால் சூழப்பட்ட நியூயார்க் நகரம் முழுவதும் குறுக்கும் நெடுக்குமாகத் தெருக்கள் அமைந்திருக்கும் அழகை நன்கு அனுபவிக்கலாம், என் கவனத்தை முக்கியமாகக் கவர்ந்தது சூழ்ந்திருந்த மூடுபனியிலும் கம்பீரமாகக் காட்சியளித்த சுதந்திர தேவியின் சிலைதான். இது நியூயார்க் கடற்கரையினின்றும் தூரத்தில் உள்ள பெட்லோ தீவில் (Bedloe's island) இருக்கிறது. கப்பலில் அமெரிக்காவுக்கு வருகிறவர்கள் இந்தச் சிலையையும், நியூயார்க்கின் வானளாவிய கட்டடங்களையும் பார்த்து, மயங்காமல் இருக்கமுடியாது. பிரான்ஸில் உள்ள மக்கள் அமெரிக்கர்களுடன் கொண்டுள்ள அன்பைக் காண்பிப்பதற்காகத் தங்களுடைய தேசத்திலிருந்து $ 2,50,000 வசூல் செய்து (10 லட்சம் ரூபாய்) Bartholdi என்ற தேர்ந்த சிற்பியைக் கொண்டு சுதந்திரத் தாயின் சிலையைச் செய்வித்திருக்கிறார்கள். சுதந்திர தேவியின் தலைமுடி 40 பேர்களைத் தாங்கும். அவள் கையிலுள்ள சுதந்திர தீபம் 301 அடி நீளமுள்ளது என்றால் சுதந்திர தேவியின் சிலை எவ்வளவு பெரியது என்று நீங்களே ஊகித்துக்கொள்ளுங்கள்.

எம்பயர் பில்டிங்கிலிருந்து ராக்பெல்லர் ஸெண்டருக்குச் சென்றேன் (Rockefeller centre). நியூயார்க்கில் களியாட்டங்களுக்குப் பெயர்போன இடம் இதுதான். 12 ஏக்கர் விஸ்தீரணமுள்ள நிலத்தில் 14 கட்டடங்கள் கட்டியிருக்கிறார்கள். இந்த இடத்தைக் கட்டுவதற்கு நூறு கோடி ரூபாய் செலவாகியிருக்கிறது. இதிலுள்ள நிலத்திற்கு மாத்திரமே ஒன்றரைக் கோடி ரூபாய் வாடகை வருகிறது. இதில் ஆர்ட் ம்யூஸியம் ஒன்று வைக்கப்பட்டிருக்கிறது. Radio Corporation of America (அமெரிக்காவின் ஒலிபரப்பு நிலயம்) இங்கேதான் இருக்கிறது. இதில் 70 அடுக்குகள் இருக்கின்றன. ரேடியோ ஹால் என்று ஒன்று கட்டியிருக்கிறார்கள். உலகத்திலேயே மிகப் பெரிய தியேட்டர் இதுதான். இங்கு டெலிவிஷன் செட்டுகள் வைக்கப்பட்டிருக்கின்றன, டெலிவிஷன் என்றால் என்ன என்று பெரும்பாலான நேயர்களுக்குத் தெரிந்திருக்கும். அதாவது தூரத்தில் நிகழும் சம்பவங்களை டெலிவிஷன் மூலம் நாம் வீட்டிலிருந்தபடி பார்க்கலாம்—தூரத்தில் நிகழும் கச்சேரிகளைக் கேட்பதுபோல. மேல் நாடுகளில் இப்பொழுது டெலிவிஷன் சர்வ சாதாரணமாகி விட்டது. கிரிக்கெட் பித்தர்கள் டெஸ்டு மாட்ச்சுக்களை ஈஸிசேரில் அமர்ந்தபடி பார்க்கலாம். ரேடியோ நாடகங்களைக் கேட்

''வீர சுதந்திரம் வேண்டும் மக்கள் இங்கு வணக்கம்செய்ய வந்திடுவீர்'' அமெரிக்கர் பெருமையை அள்ளி வீசும் சுதந்திரச்சிலை.



பதுடன் பார்க்கலாம். ராக்கிபெல்லர் ஸெண்டரில் உள்ள காட்சி (View) மனத்திற்கு மிகவும் ரம்மியமாக இருக்கிறது. தாழ்ந்து உள்ள அழகிய மைதானம் கோடையில் Lining terrace ஆகவும் குளிர் காலத்தில் பனி உறைந்து கிடப்பதால் Ice skating-க் (பனிக்கட்டியில் சறுக்கி விளையாடல்) காகவும் உபயோகப்படுகிறது. இதன் நடுவே ஓர் அழகிய 'பௌன்டன்' (Fountain) இருக்கிறது. ரேடியோ கார்ப்பரேஷன் பில்டிங்கிலும் லிட்டிஹௌஸிலுள்ளதுபோல் ஒரு கோபுரம் இருக்கிறது. இதற்கு உலகிலேயே மிக வேகமாகச் செல்லும் எலிவேட்டர் (Elevator) மூலம் போகலாம். தவிர, இங்கிருந்து இதர ராக்கிபெல்லர் கட்டடங்களுக்குச் செல்லச் சுரங்க வழிகள் இருக்கின்றன.

ராக்கிபெல்லர் ஸெண்டரைச் சுற்றிப் பார்த்தபின் நாடக உலகத்திலும் சினிமா உலகத்திலும் மிகப் பிரசித்தி பெற்ற Times square-ஐ நோக்கி நடந்தேன். இங்கு ஒரு பகுதியில் செய்திகள் அவ்வப்போது உடனுக்குடனே மின்சார ஒளியின் உதவியால் அறிவிக்கப்படுகின்றது. இங்கு Madison square என்ற பெரிய விளையாட்டு மைதானம் இருக்கிறது. இதைப் பார்த்தால் நம் ஊர் "ஆட்டக்காரர்கள்" (Sports ground) இந்தியாவிலும் இதுமாதிரி இல்லையே என்று நிச்சயமாக வருந்துவார்கள். 18000 பேர் வசதியாக உட்கார்ந்து விளையாட்டுகளைப் பார்க்க இதில் இடம் இருக்கிறது. இங்குள்ள டௌன்ஹாலில் பிரசங்கங்கள், நாடகங்கள் முதலியன நிகழ்கின்றன. இவற்றில் சில நிகழ்ச்சிகள் ரேடியோ நிலயத்தாரால் "America's Town meeting of the Air" என்ற தலைப்பின் கீழ் ஒலிபரப்பப்படுகின்றன. அதேமாதிரி இங்குள்ள ஆபரா ஹௌஸின் (Opera House) நிகழ்ச்சிகள் ஒவ்வொரு சனிக்கிழமையும் மாலையில் ஒலிபரப்பப்படுகின்றன. Times square-ஐச் சுற்றிப் பார்க்கும்பொழுது டெல்லியில் Connaught Circus போல ஆகும். மாலைவேளைகளில் மனிதர்கள் ஒருவரோடொருவர் மோதிக்கொண்டு மந்தை மந்தையாகச் சுற்றித் திரியும் இடம். இதற்கு நடுவிலுள்ள டைம்ஸ் பில்டிங் நியூயார்க் டைம்ஸ் பத்திரிகைக்குச் சொந்தமானது.

Times square-ஐச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தபொழுது என்னுடன் பேசிக்கொண்டிருந்த ஒருவர் நியூயார்க்கில் வாஷிங்டன் பிரிட்ஜ் (Washington bridge) பார்க்க வேண்டிய விஷயம் என்றார். உடனே Washington bridge-க்குச் சென்றேன். இது உலகிலேயே மிகப்பெரிய தொங்கும் பாலங்களுள் இரண்டாவதாகும். இரண்டு மைல் நீளமுள்ள (Suspension bridge). இந்தப் பாலம் 1931-ல் 30 கோடி ரூபாய் செலவில் கட்டப்பட்டிருக்கிறது.

Washington bridge-லிருந்து உலகமெல்லாம் உற்று நோக்கிக் கொண்டிருக்கும் ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தைப் பார்க்கச் சென்றேன். சுமார் 18 ஏக்கர் நிலத்தில் 4 கோடி ரூபாய் செலவில் இது கட்டப்பட்டுள்ளது. இங்கு ஜெனரல் அசெம்பிளியிலோ பாதுகாப்புச் சபையிலோ நடக்கும் விவாதங்களைக் கேட்க வேண்டுமானால் ஒரு நாள் முன்னதாகவே டிக்கட் 'ரிசர்வ்' செய்து கொள்ளவேண்டும். ஒரு டிக்கட் 34 சென்ட் ($1\frac{1}{2}$ரூபாய்). இதில் ஜன்னல்களெல்லாம் கண்ணாடியால் ஆனவை. சுவர் முழுவதும் பெரிய பெரிய ஜன்னல்கள் நிரம்பியுள்ளன. இரு ஜன்னல்களுக்கு நடுவில் இடைவெளி மிகவும் குறைவு. ஆகையால் கட்டடம் கண்ணாடியால் கட்டப்பட்டிருப்பது போல் தோற்றம் அளிக்கிறது. இது கட்டாயம் பார்க்க வேண்டிய இடந்தான். பிரமிக்கத் தகுந்த முறையில் அமைந்துள்ளது. பாதுகாப்புச் சபையின் கட்டடத்தைச் சுற்றிப் பார்க்கும்பொழுது இங்கு நடக்கும் காரசாரமான சொல் யுத்தங்கள் நினைவுக்கு வந்தன. இவ்வளவு அழகான கட்டிடத்தில் சண்டைகளை போடுவது, பேசாமல் நல்ல பாட்டுக் கச்சேரிகளை வைத்தால் நன்றாயிருக்குமே என்று தோன்றியது! தமிழர்களைப்போல எல்லாருக்குமே ரஸிகத் தன்மை இருந்தால் ஒருக்

உலகத்து விஞ்ஞானிகளை வரவேற்க ஓங்கி நிற்கும் ராக்பெல்லர் கட்டிடங்கள்



கால் உலகில் யுத்தங்களே நிகழாமல் போனாலும் போய்விடும்! நான் போன சமயத்தில் பாதுகாப்புச்சபை விவாதம் ஒன்றும் நடக்கவில்லை. ஆகையால் எனக்கு உலகின் தலையெழுத்தை நிர்ணயிக்கும் சொல்வீரர்கள் யுத்தம் செய்வதை நேரில் பார்க்க முடியவில்லை. இந்தப் பெரிய மனக்குறைவுடனேயே நியூயார்க்கைவிட்டுக் கிளம்ப வேண்டியதாயிற்று.

கையில் ஒவ்வொன்றாகச் சேர்ந்த புத்தகங்கள் (guide-books and souvenirs) படங்கள் முதலியனவற்றின் பளு அதிகரித்து விட்டது. இரவு மேடிஸானுக்குக் கிளம்பவேண்டும் இவற்றை அங்கே எடுத்துச் செல்வானேன் என்ற கேள்வி உதித்தது. அதைவிட அவற்றைத் தபாலில் ராஜிக்கு அனுப்பிவிட்டால் பளுவும் குறையும், அவளும் நான் அவளிடம் மிகவும் அக்கரை காட்டுவதாக நினைத்துச் சந்தோஷப்படுவாள் என்ற யோசனை தோன்றியது. நேரே ஜெனரல்போஸ்ட் ஆபீஸுக்குச் சென்றேன். உலகிலேயே மிகப்பெரிய தபாலாபீஸாகிய இது பென்ஸில்வேனியா ஸ்டேஷனுக்கு மேலே அமைந்துள்ளது. கீழே மெயில் வண்டிகள் செல்கின்றன. அவ்வப்பொழுது மெயில் பைகள் (Mail bags) மெயில் வண்டிகளில் அப்படியே மேலிருந்து கீழே இறக்கப்படுகின்றன. இங்கு இரு புது வசதிகளைப் பார்த்தேன். பணம் கொடுத்தால் ஸ்டாம்பு தரும் மெஷின் இருக்கிறது. இன்னொரு மெஷின் பணத்தையும் கொடுத்துவிட்டு, கவரை உள்ளே வைத்து அமுக்கினால் 'stamp seel' வைக்கிறது (ஸ்டாம்பு கவரிலேயே அச்சாகி வருகிறது). எல்லாச் சிப்பந்திகளும் மிகவும் மரியாதையாகவும் சிரித்த முகத்துடனும் இருக்கிறார்கள். என்ன விசாரித்தாலும் பொறுமையாகப் பதில் சொல்கிறார்கள். கையிலிருந்தவற்றை sea-mail-ல் அனுப்பிவிட்டேன். இதற்குத் தபால் செலவு மிகவும் குறைவு. ஆனால் போய்ச்சேர 2-மாதமாகும்! நம்நாட்டுத் தபாலாபீஸுகளில் சிப்பந்திகள், என்னதான் மரியாதை வாரங்கள் ( courtesy week) அனுஷ்டிக்கப்பட்டாலும் வேட்டை நாய் மாதிரி சீறுவது சகஜமாகிவிட்டது. அவர்களையும் சொல்லிப் பயன் இல்லை. பெண்டாட்டி குழந்தைகளைக் காப்பாற்றுவது எப்படி, ரேஷன் அரிசி வாங்குவதெப்படி என்ற கவலைகளுடன் மேஜை நிறைய வேலை குவிந்து கிடப்பதைப் பார்க்கும்பொழுது சாந்தமூர்த்தியாகவா இருக்கமுடியும்? அமெரிக்காவில் எல்லாருக்கும் வயிறார உணவு கிடைப்பதில் ஒரு கஷ்டமுமில்லை. சுற்றிப் பார்த்தேன்—நாழிகை ஏகப்பட்டது ஆகிவிட்டது. பசிவேறு வயிற்றைக் கிள்ள ஆரம்பித்தது. இரவு பிரயாணம் செய்யவேண்டும் என்ற ஞாபகமும் வந்தது. என்னை மறந்து அதுவரையில் ஊர் சுற்றிக் கொண்டிருந்தேன். இப்பொழுது உடம்பு வேறு ஓய்வை நாடியது. பேசாமல் ஹோட்டலை நோக்கி நடையைக் கட்டினேன்.

ஜலம் மேல் நடக்கலாம் (வாஷிங்டன் பாலம்)



# மலேரியா 15 வயதிற்குட்பட்ட குழந்தைகளைத் தீவிரமாகத் தாக்குகிறது

இவ்வாறுதான் மலேரியா நம் நாட்டிற்குக் கொடூரமான சேதத்தை நிரந்தரமாக விளைவித்துக் கொண்டிருக்கிறது.

குழந்தைகளின் வருங்கால ஆரோக்கியத்திற்கும் அறிவிற்கும் உறுதியான அஸ்திவாரம் அமைக்கப்படவேண்டிய இளம் பிராயத்தில் மலேரியா அவர்களுடைய ஆரோக்கியத்திற்கும் அறிவிற்கும் தீங்கிழைக்கிறது.

மலேரியாவிலிருந்து குழந்தைகளுக்கு வேண்டிய பாதுகாப்பை அளிக்காமலிருப்பது அவர்களுடைய வருங்கால க்ஷேமத்தையும், குடும்பத்தின் சுகத்தையும் தேசத்தின் நலனையும் புறக்கணிக்கும் பெரிய குற்றமாகும்.

உங்களுடைய குழந்தைகளை மலேரியாவிலிருந்து காப்பாற்ற அவர்களுக்கு 'பாலுட்ரின்' கொடுக்கும்படி வற்புறுத்துகிறோம்—நீங்களும் அப்பாதுகாப்பை அடையும்படி கேட்டுக் கொள்ளுகிறோம். 'பாலுட்ரினை' சிறு குழந்தைகளும் கர்பவதியான ஸ்திரீகளும் யாதொரு தீங்குமின்றி ஒழுங்காக உட்கொள்ளலாம். அளவு முறைகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**அபாயத்தின் சின்னங்களைக் கவனியுங்கள்:**

முதலில் குளிரால் நடுக்கம் உண்டாகும். ஜுரம் ஆரம்பமாகும். இதனால் உடம்பு முழுவதும் வியர்க்கும். தேகம் முழுவதும் வலி உண்டாகும். இந்த அறிகுறிகளை ஒரு பொழுதும் அலட்சியம் செய்யாதீர்கள்—உடனேயே டாக்டரின் ஆலோசனையைக் கேளுங்கள். மலேரியா கண்டிருந்தால், 'பாலுட்ரின்' எப்படி உங்களுடைய ஜுரத்தை சில நாட்களில் நீக்குகிறது என்பதையும் எதிர்காலத்தில் மலேரியா உங்களை அணுகாமல் எப்படி பாதுகாப்பை அளிக்கிறது என்பதையும் அவர் சொல்லுவார்.

நம்பிக்கைக்குகந்த 'பாலுட்ரின்' மாத்திரைகள் சுத்தமான, தெளிவாகத் தெரியும் காகித உறைகளில் சுற்றப்பட்டு வருகின்றன. ஒரு மாத்திரை விலை ஒரே அணு தான்.



# 'பாலுட்ரின்'

**மலேரியாவை வீழ்த்துகிறது**

## அளவுமுறை

**சிகிச்சைக்கு:** வயதானவர்களுக்கும் 12 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கும் ஒரு மாத்திரை. 6லிருந்து 12 வயது வரையுள்ள குழந்தைகளுக்கு அரை மாத்திரை. 6 வயதிற்கு கீழ்ப்பட்ட குழந்தைகளுக்கு கால் மாத்திரை விதம் தினந்தோறும் ஜுரம் குணமடையும் வரை கொடுக்கவும்.

**பாதுகாப்பிற்கு:** மேலே குறிக்கப்பட்ட அளவுகளை அனுசரிக்கவும். ஆனால் வாரம் ஒருமுறை அதே தினத்தில் சாப்பிட வேண்டியது.




எப்பொழுதும் 'பாலுட்ரின்' சாப்பாட்டிற்குப் பிறகு அதிக அளவு தண்ணீருடனோ அல்லது பாலுடனோ உட்கொள்ள வேண்டும் என்பதை ஞாபகத்தில் வைத்திருங்கள்.

இம்பீரியல் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்.

ICP 77


LUX
LUX TOILET SOAP

# லக்ஷ்ய புருஷன்

கே. சுந்தரம்மாள்

"ஹிமகிரிதனயே ஹேமலதே" என்ற கீதத்தில் மனதை லயிக்கவிட்டு, குழந்தையைத் தோளின்மீது சாத்திய வண்ணம் ரேடியோவின் அருகில் நின்றுகொண்டிருந்த ஹேமா, "ஈச்வரதனயே ஹேமலதே!" அந்தப் பாட்டில் என்ன அப்படி லயித்துபோய்விட்டாய்;நான் கூப்பிடுவதுகூடக் காதில் விழாமல்" என்ற ராஜாவின் குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினாள்.

"கூப்பிட்டீர்களா? காதில் விழவில்லை. பாட்டு என்ன பொருளானாலும் சுகபாவமான சாரீரத்துடன் இனிமையாகப் பாடினால் மனம் ஒன்றிவிடுவதில் வியப்பென்ன? மன்னித்துவிடுங்கள். கூப்பிட்ட விஷயம்?"

"உன் புகழ் மேல் நாடுகளுக்கெல்லாம் பரவும் காலம் வந்துவிட்டது. என் லக்ஷ்யம் ஒவ்வொன்றும் கைகூடியே வருகிறது, ஸ்ரீநாதசர்மாவின் பரிசு பெற்றாய் விட்டது. இப்பொழுது உலகச் சுற்றுப் பிரயாணம்; பிரதிபா உலகம் சுற்றப் போகிற அதிர்ஷ்டம் குழந்தைப் பருவத்திலேயே வந்துவிட்டதடி" என்று அவள் தோள்மீதிருந்த குழந்தையை எடுக்கப்போனான்.



இரண்டடி பின்னால் தள்ளி நின்றுகொண்டு, "இப்பொழுதுதான் தூங்க ஆரம்பித்திருக்கிறது; தயவுசெய்து தொடாதீர்கள்" என்றாள்.

"உத்தரவு. அதுசரி நான்கேட்ட விஷயம்? உனக்குச் சம்மதம்தானே?"

"எனக்கென்று தனியாக என்ன அபிப்பராயம் இருக்கப்போகிறது? உங்கள் விருப்பமே என் விருப்பம்" என்று அஸ்வாரஸ்யமாகப் பதிலளித்தாள்.

"உன் பதிலுக்கும் முகபாவத்திற்கும் பொருத்தமாக இல்லையே?"

"இது ஆடரங்கல்லவே?" என்றாள் தலையைக் குனித்தவாறு.

"எதுவானாலும் சரி. கொஞ்ச நாட்களாக உனது நடத்தையும், சோகமும் என்னவென்று புரிந்து கொள்ள முடியவில்லை. அதுபோகட்டும், அம்மா எங்கே?" என்றான்.

"பூஜை அறையில் ஜபம் செய்கிறார்" என்று சொல்லும்பொழுதே குரல் கம்மிற்று. இரண்டு பொட்டுக் கண்ணீர் தரையில் விழுந்ததைக் கவனித்தவன் இரண்டடி முன்வந்து இப்பொழுது அழும்படியாக நான் என்ன சொல்லிவிட்டேன்" என்றான்.

சற்றுக்குரலில் கடுமை கலந்திருந்ததைக் கண்ட ஹேமா,

"நீங்கள் நினைப்பது தவறு. மாமி இறந்த தினம் இன்று. பிரதிபா என்போல் தாய்முகம் காணாத சேயாக இருக்கும்படி நேர்ந்ததைப் பற்றி ஏனோ என்னையறியாமல் வருத்தம் தோன்றியது. அதன் காரணம்தான் தாங்கள் கூப்பிட்டது கூட என் காதில் விழாமலிருந்தேன்."

"உன்னைவிட அதிக பாக்கியம் செய்தவள் பிரதிபா. உன்னைத் தாயாக அடைந்திருக்கும் அவளுக்கு என்ன குறை? குழந்தையின் நிமித்தம் ஆசையுடன் சேர்ந்த காலேஜைக் கூட விட்டுவிட்டாய். அவளைவிடப் பாக்யசாலி யார்?" என்றான்.

"என்ன? நான் தாயா? அவ்வளவிற்கு நான் ........." என்று சொல்ல வந்தவள் நிமிர்ந்து ஒரு முறை பார்த்துவிட்டு விர்ரெனப் பக்கத்திலிருந்த அறைக்குள் சென்றுவிட்டாள்.

"அவள் என்ன சொல்ல வந்தாள். ஏன் முடிக்காமல் அங்கு நிற்காமல் சென்றுவிட்டாள்?" என்று சற்றுநேரம் சிந்தனை செய்தவண்ணம் நின்றான். பிரேமாவின் மறைவிற்குப் பின் இவள் ஒருமாதிரியாக இருக்கிறாள். ஒருசமயம் பிரேமா இவளிடமும் சொல்லியிருப்பாளோ, சொல்லப் போவதாகச் சொன்னாளே தவிர, சொன்னதாகச் சொல்லவில்லையே. சொல்லியிருந்தால் ஹேமா நம்மிடம் இதுவரை சொல்லாமலிருப்பாளா? நம்மிடம் சொல்லக் கூச்சமாக இருந்தாலும் விஜயமாலினியிடம் சொல்லியிருக்கலாமல்லவா? ஏன் வேறு யாரையாவது மனதில்.........சே, அப்படி ஒருநாளும் நடக்காது. எதற்கும் சுற்றுப் பிரயாணம் முடியட்டும். பிறகு பார்ப்போம்" என்ற சிந்தனையின் முடிவில் பூஜை அறைக்குச் சென்றான். மைந்தன் வருகைகண்டு, ருத்ராக்ஷ மாலையைக் கண்ணில் ஒற்றிக்கொண்டு பூஜையில் வைத்துவிட்டு, "வா ராஜா, என்ன விஷயம்? இந்த வேளையில் என்னைத் தேடி வந்தது?" என்றாள்.

"முக்யமான விஷயமாதலால்தான் வந்தேன்" என்று தாயின் எதிரில் உட்கார்ந்து கொண்டான்.

தாயின் மனம் படபடத்தது. ஹேமாவைக் கல்யாணம் செய்துகொள்கிறேனென்று சொல்ல வந்திருந்தால்? ஆஹா எவ்வளவு ஆனந்தமாக இருக்கும் பகவானே என எண்ணமிட்டவளாக மகனை உற்று நோக்கினாள்.

"பிரேமா போனபிறகு இந்த வீட்டில் இருக்கவே பிடிக்கவில்லை. எங்குச் சென்றாலும் அவள் நினைவு வந்துவிடுகிறது. எங்குப் போவது என்று தெரியாமல் சங்கடப்பட்டுக்கொண்டிருந்தேன். பகவான் வழிகாட்டி விட்டார். பார்க்கவி நடன கோஷ்டியார் நமது கலையின் சிறப்பை எடுத்துக் காட்ட மேல்நாடு செல்கிறார்களாம். அதற்கு முக்யத்வ நடனமாகப் பரதநாட்டியமாட ஹேமாவைக் கூட வரும்படி கேட்டார்கள். சரியென ஒத்துக்கொண்டாலும் நிச்சயமான பதில் நாளை தெரிவித்து ஒப்பந்தத்தில் கையெழுத்திடுகிறேன் என்று சொல்லிவந்தேன். குழந்தை அவளை விடமாட்டாள். குழந்தை சற்று விட்டாலும் அவள் அரை நிமிஷம்கூட விட்டுப்பிரியமாட்டாள் போலிருக்கிறது. எனக்கும் குழந்தையை விட்டுப்போக மனமில்லை. அதனால் நீயும் கூட வந்துவிட்டால் கவலையில்லாமல் சென்று வரலாம்."

"நான் எப்படி அவ்விடமெல்லாம் வரமுடியும்?"

"ஏன் வரமுடியாது. உன்னுடைய ஆசார விவகாரங்களுக்குக் குறைவில்லாமல் நான் கவனித்துக் கொள்கிறேன். அவர்களுடன் நடனம் ஒன்றுதான் ஒப்பந்தம். மற்ற விஷயங்கள் நாம் தனியாக நடத்திக்கொள்ளலாம். அவர்கள் முதலில் கப்பலில் செல்லுவார்கள். பிறகு நாம் விமானத்தில் செல்லலாம். குழந்தைக்கும், ஹேமாவிற்கும் பாதுகாப்பாக நீ வந்துதானாக வேண்டும்" என்றான்.

"நான் வருவது இருக்கட்டும். ஒரு விஷயம் நான் சொல்வதை நீ கேட்க வேண்டும்."

"என்ன விஷயம், சொல்லு. உன் சொல்லைத் தட்டுவேனா காரணமின்றி?"

"புறப்படுமுன் அந்தப் பெண் கழுத்தில் ஒரு மஞ்சள் கயிற்றைக் கட்டிவிட்டுப் புறப்படு. அதுதான் யாவற்றிற்கும் நன்மை."

"எந்தப் பெண் கழுத்தில் கட்ட வேண்டும்" என்று சிரித்தவண்ணம் கேட்டான்.

"எந்தப் பெண் கழுத்திலாவது கட்ட முடியுமா? விளையாட்டல்ல ராஜா. ஹேமாவை உன் மனைவியாக்கிக்கொள்ளு."

"என்னம்மா நீயும் இப்படிச் சொல்லுகிறாய்?" குழந்தை முதல் சகோதரி போல் நடத்திவிட்டு, எப்படியம்மா மனைவியாக்கிக்கொள்ள மனம் இடம் தரும்?"

"ராஜா! பரநாரி சகோதரனாக இருப்பது என்பது நன்மையான விஷயம். அத்துடன் தாய் பெற்றாலன்றிச் சகோதரனாக முடியாது என்பதும் ஒரு வாக்யம். மனைவியாக ஏற்க முடியாதபடி சகோதரமல்ல. உன்னுடைய சகல சௌகரியங்களையும் அவள்தானே கவனித்து வருகிறாள். பிரேமா படுத்தது முதல் வண்ணானுக்குத் துணி போடுவது முதல் வீட்டு வரவு செலவு, சமயங்களில் உனக்குப் படுக்கை போடுவதும், கோர்ட்டுக்குப் போக உடுப்பு எடுத்துக் கொடுப்பது முதல் சகலத்தையும் பொறுப்பாகத் திறமையுடன் அவள்தானே செய்து வருகிறாள். ஏன் எனக்கு வேண்டிய காரியங்களில்தான் என்ன குறை வைக்கிறாள்? என்னுடைய தள்ளாத காலத்தில்,

அந்தச்ரமம் தெரியாதவாறு எப்படி நடந்து கொள்ளுகிருள்? நீயும் அடிக்கொரு ஹேமா கூப்பிட்டு ஏவுகிருய், குழந்தையைப்பற்றியோ சொல்லவேண்டாம், அம்மாவென்று கூப்பிடும் தன்மைக்கு அன்பு காட்டுகிருள். இவ்வளவிருந் தும், உரிமைக்குரிய ஸ்தானத்தைக் கொடுக்காம லிருந்தால் எப்படி?"

"உரிமை என்று தனியாக என்ன இருக்கிறது? இப்படியே இருந்துவந்தால் போச்சு."

"என்ன பேச்சென்று சொல்லுகிருய் ராஜா! இப்படியே இருந்தால், அந்தப் பெண்ணையும் ஒருவரும் கல்யாணம் செய்துகொள்ள முன்வரமாட்டார்கள். உனக்கும் பெண்ணைக் கொடுக்கப் பின் வாங்குவார்கள்."

"இரண்டும் நடக்கவேண்டுமென்று சொப்பனத்தில்கூட நான் விரும்பவில்லை."

"நீ விரும்புவதுதான் என்ன?"

"அவள் நாட்டியமாடிக்கொண்டிருக்கக் கல்யாணம் நன்மைதரும் விஷயமாகாது. வம்சம் விளங்கப் பிரதிபா. எனக்குக் கல்யாணம் பண்ணிக்கொள்ள வேண்டுமென்ற எண்ணமே தோன்றவில்லை. நடனமும் பிரதிபாவின் முன்னேற்றமுமே எங்கள் லக்ஷ்யமாக வாழ்க்கை நடத்திவிடுவோம்."

"நீ சொல்லுவது உனக்குத்தான் சரியாகப் படும். இரவு உன் படுக்கையறையில் நீ படுத்த பின் பால் கொண்டுவந்து கொடுப்பது முதல் உன்னுடைய சகல தேவைகளையும் ஊழியக்காரி போல் செய்துவரும் பெண்ணிற்கு மனைவி ஸ்தானம் இல்லையென்ருல் என்ன அர்த்தம்?"

"அம்மா! எங்கள் நடத்தையில் உங்களுக்கு நம்பிக்கையில்லையா?" என்ருன் பதட்டத்துடன்.

சிவசிவா! வென இருகாதுகளையும் பொத்திய வண்ணம் "நான் அப்படி அர்த்தம் கொண்டா சொன்னேன்? குலதெய்வமான ஸ்ரீராமச்சந்திரன் பெயரை உனக்கு வைத்ததற்கு, அப்பிரபுவைப் போலவே சத்புத்ரனுக நீ அமைந்தது பற்றி என் மனம் எவ்வளவு பெருமிதம் கொள்கிறது? ஒன்றரை வருஷ காலம், சிக்காளி மனைவியுடன் முகஞ் சுளிக்காது பாடுபட்டு வந்ததில் அலுப்பே காட்டாது இருந்த உன் குணத்தையும் அப்ஸரஸைப் போன்ற அழகிய பருவகாலப் பெண் உன் கைக்குள்ளிருந்தும் மாசற்ற மனத்துடன் நடந்த உன் நடத்தையைக் கண்டும் என் மனம் என்ன பூரிப்படையும் தெரியுமா? உன் மாமனுரே இதுவிஷயம்பற்றி ஆச்சரியப்பட்டுப் பேசினுர்." என்று முடிக்குமுன்,

"ஓஹோ? அதுதான் பெண்ணின் கிருஹ எக்ஞத்தன்றே எனக்குக் கல்யாணம் பேசவந்தார் போலிருக்கிறது?"

"யாரைக் கல்யாணம் செய்துகொள்ளச் சொன்னுர்?"

"யாரைச் சொல்லுவார்? ராஜா மனைவி இறப்பதும் மறுமணம் செய்துகொள்வதும் சர்வசகஜம். ஆனுல் குழந்தையின் நன்மையைக் கோரி, செய்துகொள்ளுவதுதான் அபூர்வமான விஷயம். குழந்தைக்காக அடுத்தமாதமே ஹேமாவை மணந்துகொண்டுவிடு" என்ருர்.

"நான் ஸ்தம்பித்து விட்டேன். பிரேமாவின் தந்தையா பேசுவது? என்ன சமூகம்! என்ன பழக்கம். தனது மகள் இறந்து போனதைப் பற்றிய வருத்தமா, நான் மறுமணம் செய்துகொள்ளாததுபற்றி வருத்தமா? என்று சிந்தனையோடிற்று. அந்த மனப்பான்மையில் "இது என்ன? நீங்களே இப்படிப் பேசுகிறீர்கள்? நான்மறுமணம் செய்துகொள்ளப் போவதில்லை. ஹேமா குழந்தையைக் கவனித்துக் கொள்ளுவாள்" என்றேன்.

"அதெப்படியப்பா முடியும்? கல்யாணம் செய்துகொண்டால்தான் நன்ருக இருக்கும்" என்ருர்.

"அதென்ன சட்டம், நான் இறந்துபோய் பிரேமா இருந்திருந்தால் இந்தவிதம் கல்யாணம் செய்துகொள்ளும்படி வற்புறுத்துவீர்களா?" என்றேன்.

"என்னப்பா தாறுமாருக உளறுகிருய். சமூகத்தின் பழக்க வழக்கங்களின்படி நடப்பதுதான் எங்கள் பழக்கம். உன் குதர்க்க வாதத்திற்குப் பதில் சொல்லமுடியாது. பாரதப் பெண்மணிகள் பெண்மையின் மதிப்பைப் போற்றி வருவது என்பது இன்று நேற்று விஷயமல்ல. அதனுல் சமூகம் இடமளித்தால்கூட அவர்கள் வரவேற்பது அவ்வளவு எளிதான விஷயமல்ல."

"அப்படியானுலும் ஆண்கள் மாத்திரம் ஒழுக்கம் கெடலாமா? அவர்களுக்குரிய சட்டம் இவர்களுக்கும் உண்டு. நான் அதன்படிதான் நடத்தப் போகிறேன். என் லக்ஷ்யப்பாதையில் யாரும் குறுக்கிட முடியாது" என்றேன்.

"இந்த லக்ஷ்யப் பைத்யம் பிடித்தவர்களுடன் பேசிப் பயனில்லை. அனுபவித்துப் பார்த்துத் தான் தெரிந்துகொள்ளவேண்டும், என்று முற்றுப்புள்ளி வைத்தார். நீயே யோசித்துப் பார். நான் சொல்வது தவரு? ஒழுக்கம் இருபாலாருக்கும் பொதுத் தானே?"

"ராஜா! ஒழுக்கம் வேறு. கல்யாணம் என்பது வேறு. உன் கொள்கைப்படி, இரண்டு குழந்தைகளுடைய ஒரு பெண்ணை ஒருவன் மணந்துகொண்டால், தனது குழந்தை, முதல் மனைவியின் குழந்தை, தனக்கும் இவளுக்கும் பிறக்கும் குழந்தை ஆக மூன்று பிரிவுகளாகி, இவர்களின் சம்ரக்ஷணை, மனபேதம் இவ்வளவையும் சமா

ளிக்க நேரும் பொழுது வாழ்க்கையில் என்ன இன்பத்தைக் காணமுடியும்? ஆண்பிள்ளை சம்பாதிக்கிறுன், அதனுல் வேற்றுமையின்றி ஒரே உரிமையுடன் இருக்கும்பொழுதே சிக்கல்கள் அதிகம் வந்துவிடுகின்றன. இவையெல்லாம் சிந்தனை செய்தே பெரியோர்கள் இவ்விதிகளை ஏற்படுத்தியிருக்கிறுர்கள். வெளி விவகாரங்களில் ஈடுபடும் ஆண்களுக்கு வீட்டில் ஆதரவிருந்துதான் ஆகவேண்டுமென்பதினுலும் இயற்கையின் சக்தியை வெற்றிகொள்ளும் சக்திக் குறைவாதலினுலுமே மறுமணம் ஏற்படுத்தியிருக்கிறுர்களே தவிர, உறுதியாக இருப்பவரைத் தடுப்பவரில்லை. ஆனுல் 'உறுதி' என்பது அவ்வளவு எளிதான விஷயமல்ல. தகுந்த சூழ்நிலை வேண்டும்.''

''சூழ்நிலையை நாம் ஏற்படுத்திக்கொண்டுவிட்டால் போகிறது. நான் உறுதியாகவே இருக்கப் போகிறேன். இந்த விஷயத்தில் என் மனப்படி நடக்கவிடு. என் லக்ஷியம் நிறைவேறியே தீரும்.''

''சரி. உன் லக்ஷியம் இருக்கட்டும். அந்தப் பெண்ணிற்கு ஓர் ஏற்பாடு செய்ய வேண்டுமே.''

''பிரதிபா பெரியவளாகும் வரை இப்படியே இருக்கட்டும். பிறகு ஸ்ரீநாத சர்மாவினிடம் அழைத்துச் சென்று அவர் இஷ்டப்படி செய்கிறேன்.''

''லக்ஷியம் லக்ஷியம் என்று கதறுகிருயே தவிர, அந்தப் பெண்ணின் முகம் எப்பொழுதும் சோகத்திலேயே காணப்படுகிறதே, அதைப்பற்றிச் சிந்தனை செய்தாயா? என்னவோ பேசுகிருயே தவிர, பெண்களின் மனதைப் புரிந்துகொள்ளும் சக்தி உன்னிடமில்லை'' என்ருள்.

இச்சொல் முதலாவதாக, பிரேமாவினுல் தனக்குக் கொடுக்கப்பட்ட பட்டம். இப்பொழுது இரண்டாவது தடவையாகத் தாயார். மூன்ருவது தடவையாக, ''ஹேமாவோ'' என்று அவனையுமறியாமல் மனதில் சிந்தனை ரதம் ஓடத் தொடங்கினது. ஹேமாவின் வருத்தம் தோய்ந்த முகத்தைச்சற்றுமுன்புதானே கண்டான்.தாயின் சொற்களுக்குப்பின்தான் ஹேமா முன்போலில்லை என்ற உண்மை நிலை அவன் மனதில் பட்டது. காரணம்? ஒருவேளை பிரேமா அவளிடமும் வாக்குறுதி வாங்கியிருப்பாளா? அப்படியிருந்தால் தன்னிடம் ஏன் கேட்கவில்லை? சங்கோசமாக இருக்க முடியாது. என்னிடம் ஸ்வாதீனமாகத்தானே நடந்துகொள்கிருள். ஆனுல் மாறுதலுக்குக் காரணம்? சரி. நாமே கேட்டுவிட்டால் போகிறது என்ற முடிவுக்கு வரும் சமயம்,

''பார்த்தாயா, உனக்கே என்ன சொல்வதென்று புரியவில்லை. அப்பெண்ணிற்காகவேனும் இரக்கம் காட்டு.''

''அம்மா! என் மனநிலை சரியாக இல்லை. சுற்றுப் பிரயாணம் முடியட்டும். அதுவரை கொஞ்சம் கவனம் செலுத்தி அவள் மனநிலையை அறிய முயற்சிக்கிறேன்'' என்று எழுந்து சென்ருன்.

தாயும் சேயும் பேசிக்கொண்ட விஷய முழுவதும் மறைவில் நின்று கேட்ட ஹேமா, ''லக்ஷியம், லக்ஷியம், என்று புலம்புகிருரே தவிர மனைவியின் கடைசிக்கால லக்ஷயத்தைப் பூர்த்திசெய்யத் துணிவில்லையே'' என்ற சிந்தனையுடன் இரவு சாப்பாட்டிற்கு வேண்டிய வசதிகளைக் கவனிக்கச் சமையலறையினுள் நுழைந்தாள். என்ருலும் வேலையில் மனஞ் செல்லாமல் சிந்தனையில் சென்றது. பழக்கத்தின் காரணமாக வேலைகள் தாமே இயங்கின. ''லக்ஷியத்தை நிறைவேற்றவில்லையென்ற நமது குற்றச்சாட்டு நியாயமானதுதானு? அவரிடம் சொல்லாமலிருந்திருந்தால்?'' இந்த விபரமறிய வேண்டுமென்று பிரேமா இறந்தது முதல் முயற்சிசெய்து வந்தாள். இன்று இவர்கள் சம்பாஷணையினுல் பிரேமா ஒன்றும் சொல்லவில்லை யென்று தோன்றுகிறது. நாமாக எப்படிச் சொல்லுவது? இறந்தவளின் லக்ஷியம் குழந்தையை வளர்க்க வேண்டுமென்பதைத் தவிர எனது வாழ்க்கையைப் பற்றிய கவலையாக இருக்க வேண்டுமென்பது அவசியமில்லையல்லவா? அதனுல் இந்த விஷயம் பற்றி முயற்சியொன்றும் எடுக்கவே வேண்டாம். அவர் சொன்னபடி இப்படியே வாழ்க்கைச் சக்கரம் உருண்டு கொண்டே இருக்கட்டுமே. நடுவில் தடங்கலேற்பட்டால்? பிரேமாவிற்கு வாக்குக் கொடுத்த பின்பு, பக்தி அன்பாக மாறியதை அவள் மனம் மறுக்கவில்லை. அதனுலென்ன? அவளைப் பிரிந்து வாழும்படி அவள் சொல்லவில்லையே, என்று எதிர்காலத்தில் நடப்பவைகளைக் கற்பனையுலகில் கண்டவண்ணம், (அன்று சமையல்காரன் வெளியில் சென்றிருந்தபடியினுல்) ராஜாவிற்குச் சாப்பாடு போட்டாள். அவன் சாப்பிட வந்ததும் அம்மாவைச் சாப்பாடுபோடச் சொல்லிவிட்டுக் குழந்தையுடன் சென்றுவிடலாமென்று நினைத்தாள். ஆனுல்,

''ஹேமா! எனக்குத் தள்ளாமையாக இருக்கிறது. குழந்தையை நான் பார்த்துக்கொள்கிறேன். அவனுக்குப் போட்டுவிட்டு நீயும் சாப்பிட்டுவிட்டு வா'' என்று சொல்லிவிட்டு, குழந்தையுடன் ஹால் பக்கம் சென்றுவிட்டாள். இது சர்வசாதாரணமாக எப்பொழுதும் நடக்கும் விஷயமாதலால் மறு பேச்சின்றிச் சாப்பாடுப் பரிமாறினுள். இருவர் மனமும் ஆழ்ந்த சிந்தனையிலிருந்ததினுல் வழக்கப்படி கேள்வி பதிலில்லாமல் சாப்பாடு நடந்தது. மோர் விடுவதற்குப் பதில் ரசத்தை விட்டுவிட்டாள். மனதிலுள்ள குழப்ப நிலையில்.எங்கோ கவனமாகக் கையை நீட்டினுன். சுடுவது போலத் தோன்றவே, கவனம் திரும்பிற்று.

''என்ன இது மோர் இல்லையா? அல்லது எனக்குப் பத்தியமா?'' என்ருன் கேலியாக.

தன் தவறுதலுக்குத் திடுக்கிட்டு, "ஏதோ சிந்தனையில் மறதி வந்துவிட்டது; மன்னித்து விடுங்கள். அதை அப்படியே ஒதுக்கி வைத்து விடுங்கள்; வேறு சாதம் போட்டு மோர் விடுகிறேன்" என்றாள்.

ஊறுகாயைப் போட்டுவிட்டு நிமிர்ந்தவளை "ஹேமா" என்று அழைத்தான் அன்பு ததும்ப.

திரும்பி ஓர் அடி எடுத்து வைத்தவள் "என்ன?" என்று அவன் பக்கம் திரும்பினாள்.

"என்னை எப்படி நினைத்துக்கொண்டிருக்கிறாய்."

கேள்வியின் அர்த்தம் இருவிதமாகத் தோன்றினது குழப்பமுற்ற மனதிற்கு. அதனால் என்ன நடந்துவிடுமோ என்பது போல் அவள் ஹ்ருதயம் படபடவென்று அடித்துக் கொண்டது. இரக்கத்துடன் அவளையே பார்த்தவாறு நின்றவளை,

"கேள்விக்குப் பதில் தயார் பண்ணுகிறாயா? அப்படி வேண்டாம். மனதிலுள்ள உண்மையான எண்ணத்தை வெளியிடு."

"அப்படியென்றால்?"

"என்னை உனக்கு வேண்டியவனாக நினைக்கிறாயா? வேண்டாதவனாக நினைக்கிறாயா?"

"இதென்ன இப்படிக் கேட்கிறீர்கள். வேண்டாதவராக நினைத்தால் நான் போகும் கதி."

"வேண்டியவனாக நினைத்தால் மனதிலிருப்பதைச் சொல்லாமலிருப்பாயா?"

"என்மனதில் சொல்லும்படியாக என்ன விஷயமிருக்கிறது? ஏன் இவ்விதம் கேட்கிறீர்கள்?"

"முன்னால் பிரேமா உன்னை மிகவும் குரோதமாக, உன்மனம் நோகும்படி பேசியபொழுது உன் முகம் வாட்டம் கண்டது காரணம் தெரியாது திகைக்கும் சமயம் பிரேமாவே காரணத்தை விளக்கினாள். 'உன் கஷ்டம் தீர உன் தந்தையினிடம் அனுப்பிவிடலாமா, பொருளைச் செலவழித்தால் எங்கிருந்தாலும் கலையை அபிவிருத்தி செய்யலாம்' என்று நினைத்ததுண்டு. ஏன், அம்மாவினிடம்கூடச் சொல்லியிருக்கிறேன். அம்மா 'அது தவறு; நான் பார்த்துக்கொள்கிறேன். பிரேமா சொல்வதை யார் நம்புவார்கள்? 'ஹேமா என்னைவிட்டுப் பிரியக்கூடாது' என்று சொல்லி விட்டாள், விதியின் விசித்திர விளையாட்டினால் பிரேமா உன்னை உயிரினுமினியவளாக நேசிக்க ஆரம்பித்தாள். கடைசி சமயத்தில்கூடக் குழந்தையை நீ வைத்துக்கொண்டிருப்பதையே விரும்பினாள். அவள் அன்பிற்குப் பாத்திரமான பிறகு உன் வதனம் பிரகாசமடைந்தது.



"என் மன நிம்மதி ஈசனுக்குப் பொறுக்கவில்லை போலும் அவளைப் பிரித்தார். மறுபடி அதே சோக முகம். உன் கலையில் தான் என் மனம் ஆறுதல் கொள்கிறது. அதிலும் ஓர் சஞ்சலம். உன் முக வாட்டற்குக் காரணம் அறிய ஒரு மாதமாக முயற்சிக்கிறேன், முடியவில்லை. கொஞ்ச நாள் உன் தகப்பனாரிடமோ, விஜயாவினிடமோ இருந்து விட்டு வரவேண்டுமென்றால் மனம்விட்டுச் சொல்லு. வேண்டிய வசதிகளுடன் அனுப்பிவைக்கிறேன். பிரதிபாவையும் எடுத்துச் செல்வதைப்பற்றி ஆக்ஷேபணையில்லை. என்ன சொல்கிறாய்?"

"நான் அப்படியொன்றும் விரும்பவில்லை. அம்மாவையும் உங்களையும் விட்டுப்பிரிந்திருக்க என்னால் முடியாது. மனச்சாந்திக்கு இடவேற்றுமை உதவுமா?"

"அப்படியானால் வேறு காரணம்?"

"வேறு காரணம் எதுவுமில்லை. கை உலர்ந்து போகிறது சாப்பிடுங்கள்."

"இன்று நீ சரியான பதில் சொன்னாலன்றி நான் இலையைவிட்டு எழுந்திருக்கப் போவதில்லை."

"ஐயோ! இதென்ன சபதம்? விஷயம் ஒன்றுமேயில்லை."

"நெஞ்சைத் தொட்டுப்பார்த்துச் சொல்லு. மனதில் யாரையாவது வரித்துக்கொண்டிருக்கிறாயா? சங்கோஜமில்லாமல் சொல்லிவிடு. சொல்ல முடியவில்லையென்றால் கடிதத்தில் எழுதிக்கொடுத்துவிடு. அம்மா, பிரேமாவின் தந்தை எல்லோரும் உனக்குக் கல்யாணம் பண்ணியாக வேண்டும், அதுதான் உன் முகவாட்டத்திற்குக் காரணம் என்று என்னைத் தொளைக்கிறார்கள்."

"கல்யாணமா? அதைப்பற்றித்தான் என் கவலை, அப்பேச்சு என் காதில் விழுந்ததினால்தான் சஞ்சலமுண்டாய்விட்டது. இந்த விஷயத்தில் பெரியவர்களுக்குக் கட்டுப்பட்டுத்தான் ஆகவேண்டும். உங்களைவிட்டுப் பிரிவதென்றால், அது என் வாழ்வில் நினைத்துப் பார்க்கக்கூட முடியாத விஷயம்." என்று நிறுத்தினாள், சமயத்தைக் கைவிடக்கூடாது, தனது விருப்பத்தை ஜாடையாகத் தெரிவித்துவிட்டால் சாந்தி பெறலாம் என்று நினைத்தவளாக, அவன் பதிலை ஆவலுடன் எதிர்பார்த்தாள், தனது வாழ்வின் இன்ப நிலையை எண்ணிப் பூரித்தவளாக.

"என்னைவிட்டுப் பிரியாமலும் இருக்கலாம் கல்யாணமும் செய்துகொள்ளலாம். பிரதிபா நாட்டியம் இரண்டும் லக்ஷ்யமாக வாழலாம். அதற்கு வழி சொல்லட்டுமா? பிரேமா சொன்னபடி அவள் ஸ்தானத்தை நீ ஏற்றுக்கொள்ள ஆக்ஷேபனையில்லையே?" என்று கேட்பான் என எதிர்பார்த்தாள். ஆனால் அவன் பதில்? அவளின் இன்பக் கோட்டையைத் தவிடுபொடியாகச் செய்யும்படி இருந்தது.

"ஹேமா! நீதான் என் லக்ஷ்யத் துணைவி. உன் இஷ்ட விரோதமாக ஒருவரும் நடக்கமுடியாது என்பதற்கு நான் உத்தரவாதி. இப்படியே நமது காலத்தைக் கலைப்பணியிலே செலவிட்டு லக்ஷ்ய வாழ்க்கை நடத்துவோம். உன் மனதில் கல்யாணத்தைப் பற்றிய நினைப்பிருக்காது என்பது என் மனதிற்குப் புரியாதா? இருந்தாலும் ஒருசமயம் நீ என்ன நினைக்கிறாயோ? என்று இருந்த சிறு சந்தேகமும் இன்று விலகிவிட்டது. நான் வேறு யாரையாகிலும் கல்யாணம் செய்துகொண்டு விடுவேனோவென்று நினைக்காதே. என் மனதில் அதைப்பற்றிய சிந்தனையே கிடையாது. இக்குடும்பப் பொறுப்பு, பிரதிபாவின் வளர்ப்பு, கலையின் சிறப்பு எல்லாம் உன் கையில். யார் என்ன சொன்னாலும் லக்ஷ்யம் செய்யாதே. நாம் இப்படியே இருந்து வருவோம். அம்மா முதலியவர்களிடம் ஹேமா மனதில் ஒன்றுமிருக்காது என்று சொன்னேன். அவர்தான் கல்யாணம் செய்யாததினால்தான் சோபையிழந்து காணப்படுகிறாள் என்று சாதித்தார்கள். இல்லையென்று மறுத்த எனக்குப் பெண்ணின் மனதைப் புரிந்து கொள்ளாத மூடன் என்று பட்டம் கொடுத்துவிட்டார்கள். முதலில் பிரேமா, பிறகு அம்மா. மூன்றாவது யார் கொடுக்கப்போகிறார்களோ?" என்று நிறுத்தினான்.

மூன்றாவதாக நான் கொடுக்கிறேன் என்றாள் மனதிற்குள். வெளியில் "உங்கள் இஷ்டப்படி நடப்பதில்தான் எனக்கு மிகவும் விருப்பம்" என்றாள். தன் சொல்லினால் அவள் மனம் என்ன நிலையிலிருக்கிறது என்று அறிய அவள் முகத்தையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தவனின் பார்வையைத் தாங்கச் சக்தியற்றவளாகத் தலைகுனிந்துகொண்டாள்.

"ஹேமா! என்னைப் பார்" என்றான்.

நிமிர்ந்து நோக்கினாள். "கல்யாணம் செய்துகொள்வதும் குடித்தனம் செய்து குழந்தைகளைப் பெற்று வளர்த்துச் சீராட்டுவதும் சர்வ சகஜமாக யாவராலும் செய்யக்கூடிய விஷயம். உன்னைப் போன்ற ஒரு பெண்ணும் என்னைப் போன்ற ஓர் ஆண்பிள்ளையும் சேர்ந்து ஓரிடத்தில் இருந்தால் சகோதரபாவமாக இருக்கமுடியாது, கணவன் மனைவியாகத்தான் வாழமுடியும் என்றே உலகம் தீர்மானித்திருக்கிறது. நான் அக்கொள்கையை எதிர்த்து வெற்றிகொள்ளப் போகிறேன். அதற்கு உன் உதவி மிக அவசியம். நீயும் நானும் இரு நண்பர்களாக இருந்தால் எப்படியிருப்போமோ அப்படியே நடந்துகொள்ள வேண்டும். கலை குன்றாது. வாழ்க்கை நடத்த இதுதான் சரியான மார்க்கம். சம்மதந்தானே?"

"உங்கள் லக்ஷ்யப் பாதையிலே நானும் நடந்து வருவேன் சரிதானே?" என்றாள் மனதிலெழுந்த துக்கத்தை அடக்கியவளாக.

"சபாஷ்! ஹேமா, இரட்டை சபாஷ்!! இனி உன் முகம் சலனமற்றிருக்குமல்லவா?"

"இருக்கப் பிரயத்தனப்படுகிறேன். எல்லா விஷயமும் திருப்தியாகிவிட்டதல்லவா? கை உலர்ந்து போகிறது. சாப்பிட்டுவிட்டுப் பிறகு பாக்கி விஷயங்களைப் பேசிக்கொள்ளலாமல்லவா?"

"ஓ அப்படியே. உன் வேலைகளை முடித்துக்கொண்டு கடைசியில் பாலை எடுத்துக்கொண்டு வா. மற்றத் திட்டங்களைப் பேசலாம்" என்று சொல்லிவிட்டு இலையிலுள்ள சாதத்தை இரண்டே வாயில் போட்டுக்கொண்டு எழுந்தான். கையலம்ப ஜலத்தைக் கொடுத்துவிட்டுத் திரும்பச் சொம்பை வாங்கும்பொழுது, "இரவு அகாலத்தில் தனிமையில் பேசிக்கொண்டிருந்தால் பிறர் என்ன நினைப்பார்கள்?" என்றாள், அவனை நிமிர்ந்து பார்த்தவண்ணம்.

"விடியவிடியக் கதை கேட்டுச் சீதைக்கு ராமன் சித்தப்பாவா என்கிறாயே. நாம் இருவரும் ஆண் பிள்ளைகள். பிறர் சொல்வதைப்பற்றி அக்கறை யில்லை. அம்மா ஒன்றும் சொல்லமாட்டாள்" என்றான்.

"சரி" என்றாள்.

"அவர்களிடம் வருவதாக ஒத்துக்கொண்டேனே தவிர உறுதி கொடுக்கவில்லை. ஒப்பந்தம் எழுதிக் கையெழுத்திட்டுவிட்டு அவர்கள் கொடுத்த புரோ கிராமைப் பார்த்து, நமது புரோகிராமைத் தீர் மானிக்க வேண்டும். அதனால் நீ அவசியம் வர வேண்டும்."

"உத்தரவு" என்றாள்.

சாப்பிட உட்கார்ந்தாள். சாப்பாடு பிடிக்க வில்லை. அவளையறியாமலேயே கண்களில் நீர் நிரம்பிக்கொண்டேயிருந்தது. மனதில் சிந்தனை சமுத்திரத்தில் எண்ண அலைகள் எழும்பலாயின. "இவர் போக்கு இந்தவித லக்ஷ்யத்திலிருக்கும் பொழுது, என்னை மனைவியாக ஏற்றுக்கொள் ளுங்கள்" என்று வேசையைப் போல் எப்படிச் சொல்லுவது? ஆனால் அவளுக்கு அளித்த வாக்கு? நான் என்ன செய்யட்டும்? அவரை ஏற்க என் மனம் துடிக்கிறது. வாக்குத் தவறியவளாக மாட்டேன். பிரதிபாவே நமது லக்ஷ்யம். அவரது லக்ஷ்யமோ விசித்திரமாக இருக்கிறது? அம்மா வோ நம்மைத் துளைக்கிறாள். இவ்விடம் வராமல் தகப்பனாரிடமேயிருந்திருந்தால்? ராமச்சந்திரன் சந்நிதானத்தில் முதலாகப் பாடினதும், மறு நாளே எதிர்பாராதவிதம் உத்தமமான கணவனை அடைந்தாள் விஜயா. ஹே! ராமச்சந்திரா! என் நிலைமை, பார்ப்பவர்களுக்கு மிக்க பாக்யசாலியாக வும், அந்தரங்கத்தில் நரக வேதனையாகவும் அமைந்துவிட்டதே? பிரேமா இருந்தபொழுது எனது பருவகால ஆரம்பத்திலிருந்து அவளின் கடுஞ்சொல் கேட்டுக் கேட்டு நொந்தேன். பிறகு இந்த ஒருவருஷ காலம் மனச்சாந்தியுடன் கழித் தேன் என்று சொல்லலாம். அவள் இறந்தபின்பு ஏற்பட்டிருக்கும் வேதனை? தீரவே தீராதா? உன் சந்நிதிக்கு வந்ததில் எனக்கேற்பட்ட பலன் இதுதானா?" என்றெல்லாம் சிந்தனையோட, சாப்பிட மனமில்லாமல் உட்கார்ந்திருந்தவளை "ஹேமா! இது என்ன?" என்ற அம்மாவின் குரல் திடுக்கிட்டுத் திரும்பச் செய்தது.

"அவன் முகம் சந்தோஷத்தில் பிரகாசிக்கிறது. ஆனந்தமாகப் பாடிக்கொண்டு குழந்தையை எடுத் துப் போகிறதைப் பார்த்ததும் நல்ல விஷயம் காதில் படப்போகிறது? மனதைத் திருப்பிவிட் டாய், என்று சந்தோஷத்துடன் வந்தால் உன் நிலைமை என் ஹ்ருதயத்தைப் பிளக்கிறது? என்ன நடந்தது? என்ன சொன்னான்?"

"ஒன்றும் சொல்லவில்லை. எப்பொழுதும் போன்ற லக்ஷ்யப் பல்லவிதானம்மா, சுற்றுப் பிரயாணப் புரோகிராம் தயாரிக்க வேலையை முடித்துக்கொண்டு மாடிக்கு வரவேண்டுமென்று சொல்லிவிட்டுப் போயிருக்கிறார். பிறர் நினைப் பதைப்பற்றி அக்கறையில்லையாம். இதைப்பற் றித்தான் சிந்தனை?" என்றாள்.

"உன் தகப்பன் கூடவே இருந்திருந்தால் ஏதோ ஒரு சாதாரண குடும்பத்தில் உன்னைக் கல்யாணம் செய்து கொடுத்திருப்பார். நீ இதற்குள் இரண்டு குழந்தைகளுக்குத் தாயாகி இருப்பாய். உனது முன்னேற்றத்திற்காக அழைத்து வந்ததென்று பேர். இப்பொழுது மெல்லவும் மாட்டாமல் விழுங்கவும் மாட்டாமல் நாம் இரண்டுபேரும் தத்தளிக்கிறோம். வாழைப்பழம் வேண்டாமென் கிற குரங்குண்டா? என்பார்கள். ஆனால் உண்டு, உண்டு என்றமாதிரி விசித்திரமான பிள்ளையைப் பெற்றிருக்கிறேன் நான். ஜன்மாந்தரத் தொடர்பு நீ வந்து அகப்பட்டுக் கொண்டிருக்கிறாய்? வருத் தப்படாதே! உன் கண்ணீர் சிந்தினால் குடும்பமே நசித்துவிடும். கொஞ்ச நாளைக்கு அவன் போக்கி லேயே விட்டுவிட்டுத் திருப்பிவிடலாம். இரவில் அவனுடன் தனிமையிலிருப்பதுபற்றி என் மனம் உன்னைப்பற்றித் தவறாக ஒருநாளும் எண்ணாது. அந்நியர் நம் வீட்டிற்கு வந்திருக்கும் சமயங்கூட நான் தக்கபடி நடத்திக்கொண்டு விடுகிறேன். அவன் எது சொன்னாலும் செய்துவா. அவன் போக்குப்படி நடக்கும்பொழுதே உனது வசம் அவன் மனம் திரும்பும்படியும் நடந்துகொள்ள வேண்டும். 'நானென்ன வேசியா?' என்று கேட் காதே. உனதும், அவனதுமான வாழ்வு சீர்பெற நீ செய்யும் ஒரு தியாகமாக நினை. பெண்மையைப் பந்தயம் வை. அவ்வளவுதான் நான் சொல்லிக் கொடுக்க முடியும். பிறகு உன் சாமர்த்தியம். நான் என்ன சொல்லுவேனோவென்ற சிந்தனையே வேண்டாம். இப்பொழுது வேலையொன்றும் செய்யவேண்டாம். சினிமாவிற்குப் போன சமை யற்காரன் வந்து எல்லாவற்றையும் செய்துகொள் வான். முகத்தை நன்றாக அலம்பி அழுத முகத் தைச் சீர்படுத்திப் பொட்டு வைத்துக்கொண்டு பாலையும் எடுத்துக்கொண்டு போ. பெண்கள் முயற்சித்தால் உலகில் வெற்றியடையாத விஷ யம் ஏது?"

எழிலே உருவானவள்—மலர்ந்த முகத்துடன் தன்னை நோக்கி வரும் மங்கையைக் காணும் பொழுது "நமது லக்ஷ்யத்தைவிட்டு இறந்தவளின் வாக்குறுதிக்காக, என்னைக் கணவனாக ஏற்றுக் கொள்" என்று கேட்டிருந்தால், கடமைக்காக ஏற்றுக் கொண்டிருப்பாளேயன்றி முழுமனது டன் நேசிக்க முடியாது. இந்த மலர்ந்த வதனத் தையும் காணமுடியாது. நல்ல காலமாய்ச் சம யத்தில் சமாளித்துக் கொண்டோம்" என்று எண் ணியபடி கண்கொட்டாமல் அவளைப் பார்த்தான் அந்த லக்ஷ்ய புருஷன்.

(தொடரும்)

# குறவஞ்சி

(வளையற் சிந்து)

**வெ. செ. குருசாமி**

இமயமுதல் குமரிவரை
எங்கள் சொந்த தேசம்
தேவ— இமயவர்கள் வாசம்
புவி— எங்கும் மந்த காசம்
நாளும்— இனியதமிழ் மலர்பிரிந்து
எங்கும் வீசும் வாசம்,

ஆழிக் கடலில் மூழ்கிக் குளித்து
ஆணி முத்தை எடுப்போம்
பெரும்— வாணிபத்தைத் தொடுப்போம்
நல்ல— தோணிகளை அமைப்போம்
வந்த— அந்நிய நாட் டரசருக்கு
அன்பளிப் பாய்க் கொடுப்போம். 2

பண்ணிய கை ராட்டினத்தால்
நூற்ற நூலைப் பண்டு
விசைக்— காற்றைப் போலே முண்டு
பலர்— போற்றும் வாலைத் துண்டு
கையாற்— பஞ்சடித்து நூல் கொழிப்போம்
பலர் மகிழக் கண்டு. 3

தெள்ளு தமிழ் வள்ளுவனார்
பிறந்த தெங்கள் நாடு
வேறு— தேச மிதற் கீடு
எங்கும்— இல்லை தள்ளிப் போடு
எங்கள்— தென் பொதிகை அகத்தியனார்
தமிழ் வளர்த்த நாடு 4

நாட்டிலுள்ள பிணிக ளெல்லாம்
நாங்கள் வந்து தீர்ப்போம்
காட்டுப்— பச்சிலையைக் கொடுப்போம்
நல்ல— பாம்பு விஷ மெடுப்போம்
மேலே— நமனுலகம் சென்றவுயிரை
நாங்களிங்கே யழைப்போம். 5

கேட்டிலையே எங்கள் தமிழ்
நாட்டிலுள்ள சேதி
கற்பு— நிலை தவறுச் சாதி
மேல்— நாட்டவர்க்கும் கியாதி
வந்து— கேட்பவர்க்குக் கொடுப்பதெங்கள்
பண்டை யோரின் நீதி. 6

குறம் பாடிக் குறி யுரைப் போம்
வெற்றிலையில் கோதி
பழங்— குடிகள் நாங்கள் ஆதி
பலர்— அறிவா ரெங்கள் சேதி
அந்தக்— குமரேசர் மனையாள் வள்ளி
எங்கள் குலச் சாதி. 7

அன்னியர்கள் மொழியி லாசை
வைத்திடாதே மண்ணி
அலங்— காரப் பேச்சை யெண்ணி
அருங்— காவிரியே பொன்னி
பல—அறிஞ ரெல்லாம் பெற்றெடுத்த
தென் குமரிக் கன்னி. 8

நாடறியும் எங்கள் குறம்
பாடி · யெங்குந் திரிவோம்
தமிழ்— நாடு சுற்றி வருவோம்
பெரும்— பீடுரிமை பெறுவோம்
நம்— நற்றமிழை வளர்ப்பதற்கு
நாலு திக்கும் செல்வோம். 9

வானளாவும் கோபுரங்கள்
வளர்ந்த பத்து மாடம்
மீனாள்— வரமிருந்த பீடம்
சங்கப்— புலவர் வாழ்ந்த கூடம்
சுற்றி— வைகை சூழச் சொக்கலிங்கம்
வளர்ந்த பத்ம பீடம் 10

நாட்டறியும் ஊரறியும்
நாங்கள் பழந் தமிழர்
யார்க்கும்— நல்ல குல மறவர்
எங்கள்— வர்க்க மெல்லாம் உழவர்
தமிழ்— நாட்டை யாளும் நலவுரிமை
நம்மதென்று மகிழ்வர். 11

பாட்டிசைப்போம் பண்ணிசைப்போம்
நாட்டியங்கள் நடிப்போம்
புலிக்—கூட்டினிலே பிடிப்போம்
பெரும்— ஈட்டியினு விடிப்போம்
ஆதி— பழங்காலத் தமிழ்நாடு
தலைமை நாங்கள் பெறுவோம். 12

விண்ணுலக வீதியிலே
விமான மூர்ந்து செல்வோம்
கடல்— தண்ணியிலே நடப்போம்
இடி— மின் ெனளியைப் பிடிப்போம்
அதை— விரும்பி வந்து கேட்பவர்க்கு
வித்தை கற்றுக் கொடுப்போம். 13

பொய்யுரையோம் மெய்யுரைப்போம்
போர்த் தொழிலும் புரிவோம்
பெரும்— வாட் படையும் அறிவோம்
விண்— கார்ப் பருவம் தெரிவோம்
போரடித்து— நெல் குவிப்போம்
பொங்கு தமிழ் நாட்டில். 14

அகில மெலாம் போற்றுகின்ற
அண்ணல் மகான் காந்தி
இந்த— அவனியில் வேதாந்தி
அவர்— சொல்வதுவே சாந்தி
அவர்— அடிமலரைத் தினந்தொழுவோம்
இரு கரமும் ஏந்தி. 15

குல முறையே எங்கள் தமிழ்
பேச்சுரிமை யம்மே
தமிழ்— நாட்டுரிமை யம்மே
பலர்— கூட்டுரிமை யப்பே
கோணல் மொழியில்லை குற-
வஞ்சி சிந்து சொன்னேன். 16

# பட்டணம் பார்!

ஆர். பி. அய்யங்கார்

பிரஸிடென்ஸி காலேஜின் வெளிவாசல், பொழுது சாயும் வேளை, பலாச்சுளையைச் சுற்றி ஈக்கள் வட்டமிடுவதுபோல் முப்பது, நாற்பது பேர்கள் மொய்த்துக் கொண்டிருந் தனர். புதிதாகப் பட்டணம் பார்க்கப் புகுந் திருப்பவர்களுக்கு இது புதிராகப் படும். விசேஷமா ஒன்றையும் காணோமே என்று மயங்கி நிற்பார்கள். யாரையாவது அண்டி விசாரித்தால் சுய கௌரவம் போய்விடுமே! ஊருக்குப் புதுசு என்பதையும் காட்டிக்கொள் ளக்கூடாது. கேட்க வேறு கூச்சம். ஆகவே கும்பலோடு கும்பலாய்ப் பிசிரிக்கொண்டு நின்று அவர்கள் பேந்தப் பேந்த விழிப்பது ஓர் வேடிக்கையே.

'டாண்'னு 6–30 மணி ஆகவேண்டியது தான் தாமதம். உடனே கூட்டத்தில் சல சலப்பு அலை பாயும். 'ஸார், அதோ வரது' என்று ஒருவர் குரல் கொடுப்பார். 'எங்கு வரதப்பா?' என்ற தோரணையில் எல்லோ ருடைய கண்களும் அப்பக்கம் இழுபடும். மரீஞ பாதரஸ மின்ஸார விளக்குகளின் ஒளியில் மோட்டார் வானின் சிகப்பு வர்ணம் 'டால்' அடிக்க, கம்பீரமாக 'மொபைல் போஸ்டாபீஸ்' ஓடிவரும் அழகே அழகு. ஒருவேளை கோட்டையில் 4-30 மணிக்குக் கால அறிவிப்புக் குண்டு போடு வது முன்னே பின்னே இருக்கலாம். ஆனால் நடமாடித் திரியும் இத் தபால் ஆபீஸ் தினம் தவறாது, கன கச்சிதமாக மாலையில் ஆறு அடித்து முப்பது நிமிஷத்துக்கு மரீஞவந்து நிற்பது ஆச்சரிய மூட்டும்.

வழக்கமாக நிற்கும் இடத்தில் நிலைகொண் டதும் கார்டு, கவர்கள் வாங்க, 'க்யூ' வரிசை உருவாகி அரைமணி நேரம் நீளுவதும், சுருங்குவதுமாக இருந்துகொண்டிருக்கும். 7 மணிக்கெல்லாம் மயிலாப்பூர் புறப்பாடு, ஆகவே தரிசிக்க வந்த திருக்கூட்டம் அதன் சன்னிதானத்தில் சேர்க்கவேண்டியவற்றை மளமளவென்று செய்து முடிக்கும்.

அங்கேயே ஒற்றைக் காலில் தவம் கிடந்து எழுதுவர் சிலர். அவசர அடியில் மனதில் எழும் எண்ணங்களை அள்ளிக் கொட்டி, கை போன போக்கில் கிறுக்குவது சர்வ சகஜம். வானுக்கு வெளியே தொங்க விடப்பட்டிருக்கும் விரிப்புப் பலகைகளில் நான்கைந்து பேர்கள் முட்டி மோதிக் கொண்டு, வேர்க்க விறுவிறுக்கக் கடிதங்கள் வரையும் விதரணை யிருக்கே, அதை, பல கோணங்களில் படம் பிடித்து, ஏதாவது எக்ஸிபிஷனுக்கு அனுப்பலாமே யென்று கூடத் தோன்றும்.

கவரை வாங்கி, தம்முடன் கொண்டுவந்த கடிதத்தை அதில் திணித்துவிட்டு விலாஸ மெழுதப் பேனாவுக்கு அலைவார் ஒருவர். யாரி டமாவது கை யேந்துவதற்குள் இவர் முகம் கோணல்மாணலாக நெளிவதைக் காணச்சகி யாது. இவரோ விலாஸமெழுதுவதோடு நிற்பார். இன்னும் சிலரோ கடிதங்கள் எழு தவே முனைந்து விடுவர். பேனாவோ இரவல்; புது ஆளைக்கண்டால் அது மிரளும்! நாலு வரி எழுதுவதற்குள் அது கோணங்கி நர்த் தனம் புரியும். என்ன தான் லாவகமாகப் பிடித் துக்கொண்டாலும் இழுத்த இழுப்புக்கு வரா மல், 'இடக்' பண்ணும். அலுப்புத் தட்ட அள் ளித் தெளித்து எதையோ மெழுகிவிட்டு 'தாங்ஸ்' என்ற நன்றிச் சொல் வாயில் நடம் புரிய, பேனாக் கொடுத்த புண்ணியவானிடம் அதைத் திருப்பிவிடுவார். இந்தமாதிரி பேனாவைக் கடன் கொடுத்துவிட்டு மன வேதனைபடும் மனுஷர்கள் எத்தனையோபேர். ஒருவழியாக 'முடியாது' என்று நிர்த்தாக்ஷிண் யமாகக் கூற நா எழும்பாது. அமெரிக்காவா ஆளுக்கொரு பவுண்டன் பேனா, 'ப்யூக்' கார் வைத்துக்கொள்ள; ஏதோ ஏழை நாடு. தனக்கு மிஞ்சியதைத் தர்மம் செய்வது தமி ழன் பண்பல்லவா? ஆனால் இந்தப் பேனா இர வல் கொடுக்கும் பிழைப்போ தர்ம சங்கடம். தானமாகத் தந்துவிடுவதற்குப் பணத் தெம் பில்லை. தட்டிக் கழிப்பதற்கோ மனசு வராது. தேய்ந்தா போய்விடுவோமென்று உள் விசாரணை செய்து தேற்றிக்கொண்டு, கைக்குப் பேனா திரும்பும்வரை திகில்பட வேண்டியது வழக்கமாகிவிட்டது.

இரவலுக்கு அடுத்தபடியாகக் கௌரவப் பிச்சை வாங்குவதென்பது ஓர் அலாதி கலை. 'மொபைல் போஸ்டாபீஸ்' நிற்கும் நேரத் துக்குள் 'காற்றுள்ளபோதே தூற்றிக்

கொள்' என்ற நியதிப்படி உடம்பை அலட்டிக்கொள்ளாமல் நாலு காசு சேர்க்கும் பேர்வழியையும் கண்டேன். 'டிப்டாப்'பாக 'புல் ஸூட்' போட்டுக்கொண்டிருந்தான் ஓர் இளைஞன். அரைகுறையாக யாருடனோ ஆங்கிலம் பேசினான். இரண்டே நிமிஷம்தான். இரண்டணா அவன் கையில் வந்து விழுந்தது. அதெப்படி என்கிறீர்களா? எனக்கே அவன் கையாளும் 'டெக்னிக்' புரிய, சற்று நின்று கவனிக்கும் படியாயிற்று. 'ஸார், ஒரே ஒரு கவர் வாங்கணும், சில்லறை எடுத்துவர மறந்துட்டேன், முடிந்தால் 'டு அணாஸ்' கொடுங்கோ' என்றான் வேறு ஒரு நடுத்தர வயதுள்ள ஆஸாமியை அணுகி. அவர் ஆளை ஏற இறங்க நோட்டம் பார்த்தார். 'கண்ணியமுள்ளவன்' என்று மனதிற்குப் படவே மணிபர்ஸை பிரித்து 2 அணா நீட்டினார். 'உங்கள்' 'அட்ரஸை,' சொன்னால் நாளைக்குக் காலம்பர வீட்டுக்கு கொண்டுவந்து தரேன்' என்று அப் பேர்வழி விடாது பேச்சை இழுத்தது எனக்கு விந்தையாக இருந்தது 'அதுக்கென்ன தம்பி, பரவாயில்லை. மனுஷனுக்கு மறதி இயல்பு' என்று சொல்லிக்கொண்டே அவர் இடத்திலிருந்து நகர்ந்தார். ஆளும் என் பார்வையிலிருந்து நழுவினான். இவ்வளவு உன்னிப்பாகக் கவனித்தால் யாருக்குத்தான் உறுத்தாது. 'ஆள் பாதி ஆடை பாதி' என்பார்கள். அதற்கு அவன் ஒரு 'ஸாம்பிள்'. பட்டணத்தில் பிழைக்கத் தெரியாதவன் பயித்தியக்காரன் என்ற ஞானோதயம் எனக்கு அப்போதுதான் ஏற்பட்டது.

பின்பு ஆளைத் துரத்திக்கொண்டு நடந்தேன். அவன் தயங்கி நின்றான். 'இந்தமாதிரி ஒரு நாளைக்கு எத்தனைபேரை ஏமாத்தறே?' என்றேன் சற்றுக் கடுமையாக. அவனுக்கு வெலவெலத்துவிட்டது. இருந்தாலும் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, "என் வயிற்றிலே ஏன் மண்ணைப்போட பாக்கறீங்க?' என்றான். அச்சொல் சுரீரென்று என் நெஞ்சில் தைத்தது. 'பிச்சை யென்று கேட்டால் பணம் புரளாது. எதையாவது அப்படி இப்படி சொல்லித்தான் தாஜா பண்ண வேண்டியிருக்கு. உழைத்துச் சம்பாதிக்கத் தயார். ஆனால் யார் வேலைகொடுக்கக் காத்திருக்கிறார்கள்? முயன்று பார்த்துவிட்டு முட்டிக்கொண்டதற்குப் பின் தான் இவ்வழியில் திரும்பினேன். இன்னிக்கு இங்கே, நாளைக்கு மயிலாப்பூர், அதற்கடுத்தநாள் மாம்பலம் என்று வழக்கமாக நான் 'மொபைல் போஸ்டாபீஸ்' நிறுத்தப்படும் இடங்களுக்குச் சென்று என் வயிற்றுப் பாட்டைப் பார்க்கிறேன்' என்று அவன் சொல்லி முடிப்பதற்கும் ஊர் சுற்றும் தபாலாபீஸ்' 'ஹார்ன்' சப்தத்தைக் கிளப்பிக் கொண்டு நகருவதற்கும் சரியாயிருந்தது. ●

# கடவுள் இருக்கிறார்!

கீழையூர் தி. சேஷாத்திரி

பகீரதன் கோட் ஸ்டாண்டை ஒருமுறை பார்த்தான்; ஆறுத புண்ணைப் புண்ணுக்கு உடையவன் பார்ப்பதுபோல. பிறகு கொடியைப் பார்த்தான்; வளர்ந்து மணமாகாமல் நிற்கும் பெண்ணைப் பெற்ற தாய் பார்ப்பதுபோல. பிறகு பகீரதன் பெட்டியைத் திறந்தான். அதில் கொஞ்சம் கிழிந்ததாக ஒரு ஜுப்பாவும், கிழியாத ஒரு ஜுப்பாவும், போட லாயக்கில்லாத ஒரு முழுக்கைச் சட்டையும் இருந்தன. பிறகு வேஷ்டிகளைப் பார்த்தான்; அந்த ரகத்தில் அதே விதமாக மூன்று உருப்படிகள் இருந்தன. அவன் ஒரு வேஷ்டியை எடுத்து இடுப்பிலே கட்டிக்கொண்டு அரை வேஷ்டியை உருவி எடுத்தான். பிறகு கோட்ஸ்டாண்டில் அதிகம் அழுக்காகாமல் இருந்த ஒரு ஜுப்பாவை எடுத்துப் போட்டுக் கொண்டான். கோட்ஸ்டாண்டிலிருந்த ஜுப்பாக்கள் மூன்று, கொடியிலிருந்த வேஷ்டிகள் மூன்று ஒரு பனியன், இரண்டு அங்கவஸ்திரங்கள் ஆக ஒன்பது உருப்படிகளை ஒரு துண்டில் கட்டி எடுத்தான். 'என்ன லாண்டரிக்கா?' என்றாள் பசவம்மாள்! 'ஆமாம் சனி,' இந்த வண்ணானை நம்பினால் தெருவில் போக லாயக்கில்லாது போய்விடும்' என்று சொல்லிவிட்டு அவன் மூட்டையுடன் 'சந்திரா' லாண்டிரிக்குக் கிளம்பினான்.

* * *

வண்ணான் வயிரன் மூட்டைகளைப் பிரிக்க ஆரம்பித்தான். பக்கத்திலே முத்து வந்து கொஞ்சினாள். என்னடீ முத்து!" என்று வயிரன் இளித்தான். "முத்து அழுக்கு எடுத்தாந்தீங்களே, பணம் கேட்டு வாங்கியாந்தீங்களா?" என்றாள். "நீ என்ன சும்மா பேசிக்கிட்டே இருக்கியே! அதுதான் இதுவரையிலே கடையிலே நாற்பது ரூபாய் வாங்கியாந்திருக்கேன்! என்றேனே; இனி அவர் கிட்ட ஒரு பைசா கேட்கலாமா? 'அழகா?'

"அழகோ, அழகில்லையோ அது எனக்குத் தெரியாது: தீவாவளிக்கு இன்னம் பதினைந்து நாள்தான் இருக்கு; காலாகாலத்திலே பணம் அனுப்பிச்சாத்தானே குழந்தைக்கு ஒரு சட்டை தச்சுவைச்சிக்கும்......!"

சம்பாஷணை முழுவதும் கேட்டால்தான் விஷயம் விளங்கும். பொறுமையைச் சோதிப்பானேன்? முத்து தன் தங்கைக்கு மூன்று ரூபாய் அனுப்ப ஆசைப்பட்டாள். தங்கைக்குப் பத்து வருஷங்களுக்குப் பிறகு ஒரு பெண் குழந்தை பிறந்திருந்தது. அதற்குத்தான் ஒரு சட்டை வாங்கிக் கொடுக்க விரும்பினாள். அவள் தம்பி அன்று சாயந்திரம் வருவான்; அவன் தங்கை வீட்டுக்குப் போகத்தான் வருகிறான். அவனிடம் பணம் கொடுத்தனுப்பவேண்டும். அதற்காகத்தான் முத்து வயிரனிடம் பணம் கேட்டு வாங்கிக் கொண்டுவரச் சொல்லியிருந்தாள் அவனும் வாங்கி வரலாம் என்றுதான் எண்ணினான். ஆனால் செப்டம்பர் 1௳ முதல் 28௳க்குள் ரூ. 40ம் வாங்கிவிட்டிருந்தான். மறுபடி கேட்பது சரியில்லை. ஆகவே 'பார்க்கலாம்' என்று சொல்லி விட்டு, 'உவர் மண்ணைத் தயார் செய்!' என்று ஆர்டர் கொடுத்தான். அவன் கைகள் வழக்கப்படி சட்டைகளையும் வேஷ்டிகளையும் எடுத்துக் கொசுவி இரண்டிரண்டாய்க் கட்டிக்கொண்டிருந்தன. மனம் மட்டும் எங்கோ இருட்டுப் பாதையில் உல்லாசப் பிரயாணம் சென்று கொண்டிருந்தது.

திடீர் என்று ஒரு சட்டையை எடுத்தவுடன் சலசல என்ற சத்தம் கேட்டது. அவன் மனம் நின்று திரும்பிற்று. கை சட்டையின் பக்கத்துப் பாக்கெட்டைக் குடைந்தது. என்ன இது? ஏதோ கடுதாசு! இல்லை இல்லை ஒரு ரூபாய் நோட்டு... ஒன்று இரண்டு மூன்று! மூன்று நோட்டுக்கள்! வயிரன் எடுத்து மடியில் சொருகிக் கொண்டான். முத்து அப்பொழுது அங்கே இல்லை. உள்ளே மூட்டையிலிருந்து உவர் மண்ணைச் சட்டியில் கொட்டிக் கொண்டிருந்தாள்.

வயிரவன் ஒவ்வொரு சட்டையையும் குடைந்து குடைந்து பார்த்தே கட்டினான் என்று சொல்லத் தேவையில்லை.

* * * *

மாலை 4 மணி இருக்கும்; பகீரதன் கடைத் தெருப்பக்கம் கிளம்பினான். பசவம்மாள் ஒரு பவுடர் டப்பா வாங்கிவாருங்கள் என்று என்று உத்தரவு கொடுத்தாள். 'பணம்!' என்றான் பகீரதன் சிரித்துக்கொண்டே. "எல்லாம் உங்கள் சட்டைப்பையில் ரூ. 3/- இருக்கிறது!" என்றாள். "அதை எப்பொழுது பார்த்தாய்?"

'நேற்று ராத்திரியே பார்த்துவிட்டேன்!'

"சரி. போ. வாங்கி வருகிறேன்!" என்று கிளம்பினான் பகீரதன். கை ஜுப்பாவின் பக்கத்தைத் தட்டிப் பார்த்தது. சல சல என்று கடிதங்கள் சத்தமிட்டன.

பகீரதன் கடைத்தெரு வழியே போனவன் திரும்பிப் பார்த்தான். 'டாம் டூம் மல் பம்பாய்

கபே அவன் கண்களில் தட்டுப்பட்டது. அவன் உள்ளே நுழைந்தான். 'சப்பாத்தி, குருமா!' என்று ஆர்டர் கொடுத்துவிட்டு விசிறியின் கீழே நாற்காலியில் உட்கார்ந்தான். கை பாக்கெட்டுக்குள் சென்றது. கடிதங்கள் சல சல என்றன. வெளியே எடுத்தான். ஒரு கதர்க்கடை பில், காலையில் ஒரு நண்பனுக்காக வாங்கியது. லாண்டிரிச் சீட்டு பத்து உருப்படிக்காக; "நாகரீக உடை வீடு." ஜவுளிக்கடையின் பிட் நோட்டீஸ் பிறகு—பிறகு? பணம்? பாக்கெட்டின் நாக்கை நன்ருக வெளியே இழுத்துப் பார்த்தான். ஆற்றங்கரை மணல் தான் வந்தது.

ஓகோ! பணம் லாண்டரியில் போட்ட சட்டையில் அல்லவா வைத்திருந்தான் நேற்று இரவு!

"அம்பி, சப்பாத்தி போடச் சொல்லாதே!" என்று ஆர்டரை ரத்து செய்துவிட்டு, பகீரதன் எழுந்து ஓடிஞன். எல்லோரும் ஒன்றும் புரியாமல் பார்த்துக் கொண்டே நின்றனர்.

* * * *

முத்து தம்பி முத்தப்பன் நான்கு மணிக்குக் கிளம்ப வேண்டும். அவன் பதினொரு மணிக்கு வந்தான். வந்தவுடனேயே முத்து வயிரனுக்கு நோட்டீசு கொடுத்துவிட்டான். வயிரன் அசைகிற வழியாக இல்லை. வேலை செய்துகொண்டேயிருந்தான். கடைசியில் நான்கு மணிக்கு முத்தப்பன் கிளம்பிஞன். முத்து கண்கள் நீர் கக்க நின்ருன். "அடி அசடே! மூன்று ரூபாய் தானே வேண்டும்" என்று சொல்லி எடுத்துக் கொடுத்தான் வயிரவன். முத்து உடம்பெல்லாம் ஆனந்தமும் பூரிப்பும் குடி கொண்டன. முத்தப்பன் போய்விட்டான்.

முத்து 'என்ன மச்சான் இப்படி என்னை ஏமாத்திப் புட்டியே!' என்ருள். வயிரன் உளறிஞன்.

அவன் மனத்துக்குள் போராட்டம் நடந்து கொண்டிருந்தது. கடைசியில் சமாளித்துக் கொண்டு, 'அது எப்படியாஞல் என்ன, இப்ப சந்தோஷம்தானே என் முத்துக்கு?' என்ருன்.

அவள் வெளியே கிளம்பிஞள்.

* * *

லாண்டரி சொந்தக்காரன் கோபாலகிருஷ்ணன் R.M.D.U.C. கலெக்டரும்கூட அங்கே வந்து சேர்ந்தான். பகீரதன் நான்குமணி நாலரை மணியிருக்கும். கோபாலகிருஷ்ணன் யாரிடமோ வாங்கின இரண்டணுவுக்கு ரசீது கொடுத்துக் கொண்டே "வாங்க" என்று பகீரதனை வரவேற்ருன்.

"ஒன்றுமில்லை. இன்று காலை 8 மணிக்கு சட்டை போட்டேன். 3, 3, 1, 3, பத்து போட்டீர்கள்" என்ருன்.

"ஆமாம். அவனுக்கு R M D U நம் பழக்கம்.

"அதிலே மூன்று ரூபாய் நோட்டுகள் இருந்தன"

"அப்படியா, ஐயையோ! அதை அப்படியே இன்று காலையில்தானே அனுப்பினேன். இவ்வளவு நாழி அது எவ்வளவோ கைக்கு மாறியிருக்குமே!"

"என்னமோ விசாரித்துப் பாருங்கள்?"

"யாரிடம் விசாரிப்பது? சங்கடம் அல்லவா? எடுத்துப்போகிறவன் ஒருவன்; பிறகு அவன் நான்கைந்து பேரிடம் பிரித்துக் கொடுக்கிருன். எவன் கையில் பட்டதோ தெரியவில்லையே! எதற்கும் பையனை அனுப்பி விசாரித்துப் பார்க்கிறேன். உங்க வீடுதான் கிட்ட இருக்கிறதே, காலையில் வாருங்கள்."

"ஆமாம், திரும்பியவுடன் நாலாம்வீடுதானே, வருகிறேன்."

முத்து இதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தாள்.

* * *

"ஏ மச்சான்! உண்மையைச் சொல்லிவிடு"

"என்னடீ சொல்றது?"

"அந்தப் பணம் ஏது உங்களுக்கு?"

"கடையிலே வாங்கியாந்தேன்!"

"சுத்தப் பொய்!"

"என்னடீ உளர்றே?"

இருவருக்கும் வாக்குவாதம் வளர்ந்தது. வயிரன் ஒப்புக்கொள்ளவேயில்லை. முத்துக்குச் சந்தேகமே இல்லை.

பிறர் பணம் நமக்குச் சேரிக்காது. அதுவும் முதல் முதல் தங்கை குழந்தைக்குக் கொடுத்தனுப்பியிருக்கிருன். என்ன ஆகுமோ?

அன்று இரவு முழுவதும் முத்து தூங்கவேயில்லை. தங்கை குழந்தையைப்பற்றியே கனவு கண்டாள். ரூபாயிலிருந்த புலி உருவம் உயிருடன் சென்று குழந்தையைத் தின்றுவிடுகிறது. தங்கை புலியை நீதான் ஏவிவிட்டாய்? என்று கத்துகிருன். முத்து விழித்துக்கொண்டாள். ஒரு வாய் தண்ணீரைக் குடித்துவிட்டு மறுபடியும் படுத்துக்கொண்டாள்.

தீபாவளிக்குத் தங்கை குழந்தையைக் குளிப்பாட்டிவிட்டுச் சட்டையைப் போடுகிருள். அதற்குள்ளிருந்து ஒரு பாம்பு கிளம்பிவந்து குழந்தை

யைக் கடிக்கிறது!...... அலறிப்புடைத்து எழுந்தாள். வயிரனும் விழித்துக்கொண்டான்.

'மச்சான், சொல்லிவிடு மச்சான்......' என்று அழுதாள்.

'வயிரன் வேண்டா வெறுப்பாகச் சட்டைப் பையில் இருந்து எடுத்ததை ஒப்புக்கொண்டான்.

'நாளைக்கே போய் கொடுத்து வந்துடு?' என்ருன் முத்து.

'பணம்?' எங்கே இருக்கிறது.

"கடையிலேயே கேள்...... இல்லாட்டி!"

"சரி தூங்கு. கடையிலேயே வாங்கித் தருகிறேன் போ..." பிறகுதான் இருவரும் தூங்கினர்.

* * *

காலையில் குடிசைக் கதவு படபட என அதிர்ந்தது. முத்து திறந்தான்; முத்தப்பன் நிற்கிருன் முகம் எல்லாம் வெளுத்து, பேயறை பட்டவன்போல்!

'அக்கா! எல்லாம் போயிடிச்சு அக்கா?'

முத்தம்மாள் பதற்றத்தில் தங்கையே போய் விட்டாளோ! என்று நடுங்கிவிட்டாள்.

தங்கை கிராமத்துக்கும் இந்தக் கிராமத்துக்கும் இருபத்தைந்து மைல். முத்தப்பன் நடந்தே போனுன். பாதிதூரம் போனவுடன் இருட்டிவிட்டது. மழையும் சேரவே அவன் சத்திரத்தில் தங்கினுன். காலையில் எழுந்திருந்தால் மூட்டையைக் காணும். முத்து கொடுத்த பணத்துக்கு அவள் வாங்கிய சட்டை, அவன் தானே வாங்கிய சட்டை புடவை எல்லாம் போய்விட்டன.

"எல்லாம் உழைக்கிற ஏழைக்குத் தானே வரும்!"என்ருன் வயிரன்!

'சும்மா இரு உளருதே. இதெல்லாம் கையாலாகாதவங்க பேசற பேச்சு. உழைக்கிறவுங்க நம்ப நாட்டிலே நல்லா இல்லாம இருந்தாங்களாக்கும்? காலம் கெட்டுப் போச்சு. உழைக்கிறவுங்க, பணக்காரவுங்க எல்லோருமே தவிக்கிருங்க. திருட்டுச் சொத்து திருட்டுப் போகாமே வாழுமாக்கும்............ போ தம்பி. இத்துடன் போச்சே. உன்னையும் அடிச்சிருந்தா என்ன பண்ணுவே! போ......' என்ருன். அவள் பேசியதை அவர்கள் இருவரும் வாய் பேசாமல் கேட்டுக் கொண்டிருந்தனர்.

* * * *

பசவம்மாள் எழுந்திருந்தவுடனேயே பவுடர் டப்பா கேட்டேன், பணமே போய்விட்டது என்ருள். எழுந்திருந்தவுடன் பவுடர் டப்பா ஞாபகம் வந்ததில் வியப்பில்லையே!

பகீரதன் "என்னமோ போ. யாராவது எடுத்து உபயோகித்தால் சரி. தண்ணீரில் போகாமல்;"

"ஆமாம் தண்ணீரில் போகிறது! சின்னப் புத்திப் பாளையங்கள் எடுக்காமல் விடுமாக்கும். என்ன இழவோ...... கஷ்டப்பட்டுச் சம்பாதிச்ச பணம். எடுக்கிறது உருப்படாது...... நாசம்... ......"

'சே அசடு. காலை வேளையில் திட்டாதே. எடுக்கிறவன் நம்மைவிடப் பணக்காரனுக இருக்கப் போகிறதில்லை, எடுத்துச் செலவழித்தால் சரி..."

அதே சமயம் வாசலில் யாரோ ஒரு ஸ்திரீ, அம்மா! என்றழைத்த சப்தம் கேட்கவே பசவம்மாள் கதவைத் திறந்தாள், அங்கே முத்துவும் வயிரனும் நின்று கொண்டிருந்தனர்,

"யாரப்பா நீங்கள், ஐயா தூங்குகிருர்கள்!"

"இல்லை அம்மா. ஐயா லாண்டரிலே போட்ட சட்டையிலிருந்த பணத்தெ கொண்டாந்தோம்,"

பகீரதன் துள்ளி எழுந்து வாசலில் சென்ருன்.

பசவம்மாள் கையை நீட்டிஞள்.

முத்து தன் மடியிலிருந்து இரண்டு காது ஓலைகளையும் கையில் கொடுத்துவிட்டு, 'அம்மா இதை வைச்சுக்குங்க. பனிரெண்டு ரூபாய்க்கு வாங்கியது. இப்பொழுது அது நிச்சயம் மூன்று ரூபாய் பொறும்...' என்ருரம்பித்து' கதை முழுவதும் சொன்னுள். "இன்று லாண்டிரி அடைப்பு. நாளை அவர் வருகிற வரையில் மெனக்கட மனம் சம்மதிக்க இல்லை அம்மா. உங்க மன்னிப்புக் கிடைச்சாத்தான் அம்மா மனசு நிம்மதியாகும். பிள்ளை குட்டி நல்லாருக்க வேண்டாமா அம்மா!' என்ருள் முத்து தழுதழுத்த குரலில்.

பகீரதன் ஏதோ யோசித்தான். வயிரனை விறைக்க விறைக்கப் பார்த்தான்.

'ஏண்டா. நீதான் பாங்கு மானேஜர் ஐயாவுக்கும் வெளுக்கிறயோ!'

வயிரன் பதறிவிட்டான். "ஆமாம் எசமான், லாண்டிரி, மானேஜர் எசமான் வீடு இரண்டு இடமும் நான்தான் காண்டிராக்டு...... எசமான் பொழைப்பைக் கெடுத்துடாதீங்க......" அவன் அப்படியே காலில் விழுந்துவிட்டான்.

"அட அசடே, பாங்கு மானேஜர் உன்னைப்பற்றிச்சொல்லியிருக்கிருர். பயப்படாதே. ஏதோ காலம். நீ போ. ஓலையையும் எடுத்துக்கொண்டு போ......பணம் கிடைத்தபோது கொண்டு வந்து கொடு......" என்று சொல்லிவிட்டுத் திரும்பினுன் பகீரதன்.

'நீங்க நல்லாயிருக்கணும்!' என்ருன் வயிரன்.

"இந்தமாதிரி ஒன்றிரண்டு பேர் இருப்பதனுல் தான் மழை பெய்கிறது!" என்று சொல்லிவிட்டு முத்து திரும்பினுள்.

"கடவுளும் இருக்கார்! என்ருள் பசவம்மாள் உள்ளே வந்து கொண்டே.

"ஏழைகளுக்குத் தான் அது முதலில் தெரிகிறது!"என்று சொல்லி முடித்தான் பகீரதன்.

# சீனத்துச் சைவர்கள்

நா. கி. நாகராசன்

இரண்டாம் உலகப் போரின்போது பல நாடுகளைச் சேர்ந்த போர் வீரர்கள் ஒரு நகரத்தில் கூடியிருந்தனர். அவர்களில் ஓர் இந்தியனும், ஒரு அமெரிக்கனும், ஒரு சீனக்காரனும், ஓர் ஆங்கிலேயனும் ஓட்டலுக்குத் தேத்தண்ணீர் அருந்தச் சென்றார்கள். அந்த ஓட்டலில் ஈக்கள் மலிந்திருந்தன. இவர்கள் நால்வருக்கும் கொடுக்கப்பட்ட தேநீர்க் கோப்பைகள் ஒவ்வொன்றிலும் ஓர் ஈ மிதந்து கொண்டிருந்தது. ஈயும் தேநீரில் ஒரு பாகம் என மதித்து, சீனக்காரன் அதை ரசித்துச் சாப்பிட்டுவிட்டான்! பிறருக்குத் தொல்லை யளிக்காமல் நடப்பதும், இன்னல்களைப் பொறுத்துக் கொள்வதும் இந்தியரது பண்பாடு அல்லவா? ஆகையால் இந்தியன் தேநீரில் கிடந்த ஈயை எடுத்தெறிந்துவிட்டு அதைக் குடித்தான். ஆத்திர புத்தி கொண்ட அமெரிக்கன் ஓட்டல்காரனை வைதுவிட்டு ஈ கிடந்த தேநீரை உள்ளே எடுத்துச் சென்று நல்ல தேநீராகக் கொண்டு வரும்படி கட்டளையிட்டான். கதிரவன் மறையாத சாம்ராஜ்யத்தை நிலைநாட்டிய நாட்டினனான ஆங்கிலேயனோ தனக்குக் கொடுக்கப்பட்ட தேநீர்க் கோப்பையைத் தன்னிடத்திலேயே வைத்துக்கொண்டு உள்ளிருந்து வேறு தேநீர் கொண்டு வரச் சொன்னான். தேநீர்க்கோப்பையை உள்ளே கொண்டு போகச் சொன்னால் ஓட்டல்காரன் எங்கே அதிலிருக்கும் ஈயை எடுத்துவிட்டு, அதே கோப்பையைக் கொண்டு வந்துவிடுவானோ என்று அவனுக்குச் சந்தேகம்!

இது எப்போதோ படித்த விகடத் துணுக்கு. சீனர்கள் எதை வேண்டுமானாலும் உண்ண வல்லவர்கள் என்ற கருத்து நிலவுகிறது. ஆனால் இது தவறு. உண்மையில் சீனர்களில் நூற்றிற்குத் தொண்ணூறு பேர் சுத்த சைவர்கள், பார்க்கப் போனால் நம்மைவிட இவர்கள் இன்னும் தீவிரமான சைவர்கள்! ஏனெனில் இவர்கள் நம் நாட்டுச் சைவர்களைப் போல் பாலையும், பால் பொருள்களையும் கூட உண்பதில்லை. ஆகையால் இவர்கள் விலங்கு சம்பந்தமான எந்த உணவையும் உட்கொள்வதில்லை. சைவ உணவினால் உடல் நலம் எவ்வாறு பாதிக்கப்படுகிறது என்பதைப்பற்றிய சோதனைகளுக்கு இந்தியாவைவிடச் சீனமே ஏற்ற நாடு. தாமே அறியாது சீனத்து மக்கள் பல நூற்றாண்டுகளாக இச் சோதனையில் ஈடுபட்டு வந்திருக்கிறார்கள். விஞ்ஞானச் சோதனைகளில் எலிகளுக்குக் குறிப்பிட்ட உணவு வகைகளை மட்டும் ஊட்டிச் சில தலைமுறைகளில் அவற்றில் நேரும் மாறுதல்களை ஆராய்கிறார்கள். ஆனால் சீன நாட்டிலோ உணவு வகைகளால் கோடிக்கணக்கான மக்கள் பல தலைமுறைகளாக எவ்வாறு பாதிக்கப்படுகிறார்கள் என அறிய வாய்ப்புள்ளது. உடல் நலத்தைத் தவிரப் பொருளாதார, அரசியல் அமைப்புக்களும் உணவு முறையை எவ்வாறு பாதிக்கின்றன என அறியவும் இங்கு வசதி உள்ளது. சீன உணவு முறையை ஆராய்வது இன்னொரு வகையிலும் முக்கியமானது. தமிழர்களது உணவு சீன உணவையே பெரிதும்










உணவு விகிதங்கள்.

ஒத்துள்ளது. ஆகையால் அங்கு நடைபெறும் ஆராய்ச்சி முடிவுகள் நமக்கும் உதவும்.

சீனக் கிராமவாசியின் உணவும், தமிழனது உணவும், தொழில் வளர்ச்சி பெருகி மக்களது வாழ்க்கைத் தரம் உச்சநிலை அடைந்துள்ள அமெரிக்காவிலுள்ள ஒரு சாதாரண மனிதனின் உணவும் படத்தில் காட்டப்பட்டுள்ளன. சீன உணவிற்கும் நமது உணவிற்கும் உள்ள பொருத்தத்தை இப்படம் காட்டுவதோடு வேறொரு முக்கியமான உண்மையையும் அறிவுறுத்துகிறது. அமெரிக்கரது உணவில் இறைச்சியும், முட்டையும் 21% உள்ளன. நமது உணவிலும், சீன உணவிலும் இவை முறையே 3%-ம்; 4%-ம் மட்டுமே உள்ளன. அமெரிக்க உணவில் 9% வரை உள்ள பாலும், பால் பொருள்களும் நமது உணவிலும், சீன உணவிலும் படத்தில் காட்டமுடியாத அளவு குறைவு! அமெரிக்க உணவில் ஆண்டிற்கு ஆண்டு அபிவிருத்தி நிகழ்கிறது. ஆனால் நம் நாட்டிலும், சீனத்திலும் பல நூற்றாண்டுகளாக மாறுதல் எதுவும் இல்லை. நெடுங்காலமாக இவ்வகை உணவை உட்கொள்ளும் மக்களது உடல் வளர்ச்சியிலும், உழைக்கும் திறனிலும் பரம்பரையாக வரும் நிலையான மாறுதல்கள் இருந்தே தீரவேண்டும். இந்த மாறுதல்கள் எத்தகையவை என ஆராய்வதன் அவசியம் இதுதான்.

சீன உணவையும், நமது உணவையும் ஆராய்ந்தால் அவற்றில் இரு உடற்சத்துக்கள் குறைவாக இருக்கக் காண்கிறோம். இவை கால்ஷியம் என்ற உலோகச் சத்தும், புரோடீன் என்ற புரதச் சத்துமாகும். சைவ உணவை உட்கொள்ளும் ஒருவன் தனக்குத் தேவையான கால்ஷியத்தை அநேகமாகப் பாலிலிருந்தே பெற்றாகவேண்டும். இதிற் சிறு பகுதியைக் காய்கறிகளிலிருந்து பெறலாம். ஆகையால் நமது உணவில் கால்ஷியச் சத்து போதிய அளவு இருக்கவே இடமில்லை. ஆனால் உடலின் அபிவிருத்திக்கும், எலும்பு வளர்ச்சிக்கும் இவ்வுலோகம் இன்றியமையாத பொருளாகும்.

புரோடீனைப் பொறுத்தமட்டில் சைவ உணவில் இச்சத்து தானியங்கள், பயறுகள் போன்ற தாவரப் பொருள்களிலிருந்தே பெறப்படுகிறது. அமெரிக்க உணவில் கிடைக்கும் புரோடீனில் அரைப் பங்கு தாவரங்களிலிருந்தும், அரைப் பங்கு விலங்குகளிலிருந்தும் பெறப்படுகிறது. ஆனால் சைவ உணவிலோ 95% வரை தாவரப் புரோடீனே ஆகும். தாவரப் புரோடீன்களைவிட விலங்குப் புரோடீனே எளிதில் ஜீரணமாகிறது என்றும் தாவரப் புரோடீன்களில் ஜீரணமாகும் பகுதியிலும் உணவுச் சத்து குறைவு என்றும் மேனாட்டு ஊட்ட நூல் (Nutrition) நிபுணர்கள் கூறுகிறார்கள். ஆகையால் ஒருவன் தனக்குவேண்டிய புரோடீன் தேவையைப் பூர்த்தி செய்ய விலங்குப் புரோடீனை உட்கொள்வதைவிடத் தாவரப் புரோடீனை அதிகமான அளவு உட்கொண்டால் தான் முடியும் என்றாகிறது. ஆனால் மேனாட்டினர் கண்டறிந்த இம்முடிவுகள் மாறுதலின்றியே சீனருக்கும், நமக்கும் பொருந்தும் என்று கூறுவதெங்ஙனம்?

புரோடீன் சத்தைப் பற்றிய இன்னொரு முக்கியமான உண்மையை விஞ்ஞானம் அண்மையில் தான் கண்டறிந்துள்ளது. ஆனால் இதைச் சீனர்கள் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே அனுபவத்தாற் கண்டறிந்துவிட்டார்கள். சீனத்திலுள்ள ஆராய்ச்சிச் சாலை ஒன்றிலுள்ள விலங்குகளுக்குச் சோளம், சோபா அவரை, கோதுமை ஆகிய மூன்று உணவுகளையும் தனித்தனியே ஊட்டி வளர்த்தார்கள். வேறு சில விலங்குகளுக்கு இம்மூன்றையும் கலந்து அளித்தார்கள். இரண்டு வாரங்களுக்குப் பின் பார்த்தால் கலப்புணவை உண்ட விலங்குகள் தனி உணவு வகைகளை உண்ட விலங்குகளைப் போல் சுமார் மும்மடங்கு வளர்ச்சி பெற்றிருந்தன. இச் சோதனை கலப்புப் புரோடீனின் தேவையை விளக்கும். நமது நாட்டிலும் சீனத்திலும் புரோடீன் சத்து நிறைந்த பல பொருள்களைக் கலந்து உண்ணும் வழக்கம் உள்ளது. ஆகையால் மேனாட்டினர் மானிட உடலின் தேவையெனக்கண்டறிந்துள்ள புரோடீன் சத்தை நாம் இவ்வகையில் பெறக்கூடும். ஆகையால் மேனாட்டுச் சோதனை முடிவுகளை இங்குப் பயனுக்கும் போது இத்தகைய சில எதிர்பாராத உண்மைகளும் இருக்கலாம் என்பதை மறந்து விடுவதால் தவறான முடிவுகளுக்கு வர நேருகிறது.

ஆனால் விலங்குப் புரோடீன் சத்தே இல்லாத உணவினால் உடல் வளர்ச்சி பரம்பரையாகவே பாதிக்கப்படலாம் என்பதற்கும் சான்றுகள் உள்ளன. அமெரிக்காவிலுள்ள கனெக்டிகட் விவசாயச் சோதனைச்

சாலையில் சுமார் 40 ஆண்டுகளாக உள்ள எலிப் பரம்பரைகள் உள்ளன. உணவுச் சத்து அபிவிருத்திகளால் மட்டும் 15 தலை முறைகளுக்குள் இவற்றின் எடை இரு மடங்காவது கண்டார்கள். நமது நாட்டிலும் தமிழர்களுக்கும், மற்றவர்களுக்கும் உள்ள உணவு வேறுபாட்டினால் வளர்ச்சி எவ்வாறு பாதிக்கப்படுகிறது என்பதைப் படம் தெளிவாக்கும். ஆகையால் சத்துள்ள உணவை உட்கொள்ளும் மேனாட்டார் தமது மூதாதையரை விட உயரமாகவும், பருமனாகவும் வளர்கிறார்கள் என்றே நம்பலாம். கால்ஷியம் சத்துக் குறைவான உணவைப் பல நூற்றாண்டுகளாக உட்கொண்டு வரும் தமிழரும், சீனரும் அளவிற் சிறியவர்களாக இருப்பதற்கு அவர்களது உணவு வழக்கங்களே காரணமாக இருக்கலாம். குறைவான கால்ஷியம் ஊட்டத்திற்கு ஏற்றவாறு இவர்களின் உடல் அளவிற் சரிப்படுத்திக்கொண்டுவிட்டதுபோலும்.

ஆனால் இதில் ஒரு முக்கியமான உண்மையை நாம் மறந்துவிடலாகாது. தற்காலக் கருவி மருத்துவத்தில் புதுமுறைகளை வழக்கத்திற்குக் கொண்டு வந்தவரும், நோபெல் பரிசுபெற்றவருமான அலக்ஸிஸ் காரெல் என்பவர் "தற்கால இளைஞர்கள் நம்மைவிட உடல் நலம் மிக்கவர்களாகவும், அளவிற் பெரியவர்களாகவும் வளர்கிறார்கள் என்பது உண்மையே. ஆனால் இதனாலேயே நம்மைவிட இவர்கள் அதிகமான




உணவும், உடல் நிறையும்

உள்ள வளர்ச்சியும், உழைக்கும் திறனும், நோயை எதிர்க்கும் திறனும் கொண்டிருக்கிறார்கள் எனக் கூறமுடியாது. பார்க்கப் போனால் உண்மை இதற்கு நேர் எதிராக இருக்கும் என அஞ்சுகிறேன்" எனக் கூறுகிறார். "உடல் வளர்ச்சி அதிகமாகிக் கொண்டேபோவது விரும்பத் தக்கதா என்ற வினாவிற்கு விஞ்ஞானம் இனியேனும் விடை காண வேண்டும்" என்றும் இவர் கூறுகிறார். உடலின் அளவைப் பற்றிய இதே கருத்தை வேறு பல மருத்துவர்களும் வெளியிட்டிருக்கிறார்கள். சத்துக் குறைவான உணவை உண்டுவரும் சீனர்களும், தமிழரும் உழைக்கும் திறனிலோ, பண்பாட்டின் முன்னேற்றத்திலோ மற்ற நாட்டினரைவிடத் தாழ்ந்தவரல்லர். நமது சராசரி ஆயுள் குறைவாக இருக்கலாம். இங்கு நோய்கள் மலிந்திருக்கலாம். இவற்றிற்கு நாட்டின் பொருளாதார, அரசியல் அமைப்புக்களும், அறியாமையும் முக்கிய காரணங்களே ஒழிய இவை, உணவினால் விளைபவை அல்ல என்றே கூற வேண்டும்.

ஜனநெருக்கம் அதிகமாக உள்ள கீழ்நாடுகளில் வாழும் மக்களிற் பெரும்பான்மையோர் சைவர்களாக இருக்கக் காரணமில்லாமற் போகவில்லை. நாட்டிலுள்ள நிலப் பரப்பைச் சாகுபடி செய்து உணவுப் பொருள்களைப் பயிரிட்டு வாழ்வதால் அதே நிலத்தில் கால்நடைகளை வளர்த்து அவற்றின் பாலையும், இறைச்சியையும் உண்டு வாழ்வதைப்போல் ஏறக்குறைய இருபது மடங்கு மக்கள் வாழ இடமுண்டு. கால்நடை வளர்ப்பைவிட வேளாண்மைக்கு ஆகும் செலவு குறைவாக இருப்பதும் வாழ்க்கைத் தரம் குறைவான கீழ்நாடுகளில் முக்கியமானது.

மானிட வரலாற்றில் உணவு முறைகளில் நிகழும் மாறுதல்கள் ஒரு மக்கள் இனம் அடைந்துள்ள பண்பாட்டிற்கு ஓர் அளவுகோலாக இருந்துள்ளது. ஆதி மனிதன் கனியையும், கிழங்கையும், சிறு விலங்குகளையும், பறவைகளையும் பச்சை பச்சையாக உண்டு வாழ்ந்தான். அக்காலத்தில் அவன் அநேகமாகச் சைவனாகவே இருந்தான் எனலாம். இதன் பின்னரே அவன் வேட்டையாடவும், மீன் பிடிக்கவும் கற்றான். இந்த மாறுதலால் அவன் சைவ உணவை உட்கொள்வது குறைந்தது. இதன் ஆப்ரிக்காவிலுள்ள புதர் மனிதரும், இலங்கையிலுள்ள வெட்டர்களும், அமெரிக்கச்

சிவப்பிந்தியரில் சிலரும், வேறு சில ஆதி குடிகளும் இன்றும் ஆதி மனிதனது உணவு முறையைக் கையாளுகிறார்கள். சமூக அமைப்பு ஆரம்ப நிலையில் இருந்த காலத்தில் தைரியமும், மனத் துணிவும், அச்சமின்மையும் இன்றியமையாத குணங்களாக இருந்தன. இப்பண்புகளை வளர்க்க அசைவ உணவு தேவையாக இருந்திருக்கலாம். ஆனால் சமூக அமைப்புப் பெருமுன்னேற்றமடைந்துள்ள இந்நாளில் மனிதத் தன்மையும், பரந்த அன்புமே வளர்க்க வேண்டிய பண்புகளாகும். அன்பு வழியைப் போதித்த உலக மதங்கள் அனைத்தும் சைவ உணவை வற்புறுத்தியதில் அர்த்தமில்லாமல் இல்லை. போர் என்னும் கொலைத் தொழிலின் கொடுமை உச்சநிலை அடைந்துவிட்ட இந்நாளில் உலகநாகரிகம் உருப்பட வேண்டுமானால் கொல்லாமை மனிதப் பண்பாட்டின் உயரிய குறிக்கோள்களுள் ஒன்று என்ற உணர்ச்சி எங்கெங்கும் பரவ வேண்டும். கீழ் நாடுகள் பழங்காலத்தில் வகுத்த அறநெறி மேனாடுகளுக்குப் பல வகைகளில் வழிகாட்ட முடியும். வள்ளுவர் முதல் காந்திவரை நம்நாட்டுப் பெரியோர் வகுத்த வாழ்க்கை முறை உலகம் உய்ய உதவும். ஆகையால் உண்மையின் ஒரு பகுதியை மட்டும் உணர்ந்து எல்லாம் தெரிந்ததுபோல் மேனாட்டு விஞ்ஞானம் நமக்கு யோசனை கூறவரும்போது இதை நாம் நினைவுகூர வேண்டும்.

நமது நாட்டின் பால் உற்பத்திபெருக வேண்டும் என்பதையோ, நமது உணவின் தரம் உயரவேண்டும் என்பதையோ யாரும் மறுக்கவில்லை. "உலக மக்களின் உணவு முறைகளில் உள்ள குறைகள் மனித வர்க்கத்தின் முன்னுள்ள பெரும் பிரச்னைகளுள் ஒன்று. இதைத் தீர்க்கும் வகை உலகத்தின் எதிர்காலத்தையேமுடிவுசெய்ய வல்லது" என ஆங்கில ஊட்ட நூல் நிபுணர் ஒருவர் கூறினார். உடனடியான தேவைகளுள்ஒன்றான ஊட்டநூலாராய்ச்சி பழமையில் உள்ள நன்மையை உணர்ந்து, அதன் குற்றங் குறைகளை நீக்கி, நாம் முன்னேற வழிகாட்டவேண்டும். உணவு முறைகளில் புரட்சிகரமான மாறுதல்களைச் செய்வது "தலைவலி போய், திருகுவலியான" கதையாகவே முடியும். ●

# என்னுடையது?

**விஸ்வம்**

நல்ல மா. இலை மறைத்துக் குலுங்கும் காய்கள். நிறை கர்ப்பிணியையொத்திருந்தது மரம். கிளி கொஞ்சும் காட்சி!

அவளும் நிறை கர்ப்பிணி. மரத்தைக் காணும் போதெல்லாம் நாக்கில் நீர் சுரந்தது. பறித்துத் தின்ன ஆவல் துடித்தது. ஆனால் பிறர் பொருளாயிற்றே! மேலும் அதற்குரியவர் மூர்க்கராயிற்றே. ஆசை அடங்கியிருக்க வேண்டியதாயிற்று.

மாணிக்கம் பங்களா மிகப் பெரியது. மா, பலா, தென்னை, வாழை நிறைந்த தோட்டத்துள் கட்டப்பட்டது. முன்னுக்குப் பின் கூப்பீடு தூரம்.

கொல்லைப்புற மதிலுக்குப்பின் விறகு வெட்டி வேலன் குடிசை—மதிலை ஒரே சுவராகக்கொண்டு போடப்பட்ட சிற்றுக் குடிசை. மாணிக்கத்தின் மாமரங்களுள் ஒன்று மதிலை எட்டிப்பார்த்துக் கொண்டிருந்தது.

வேலன் மகள் மரகதம் பிரசவத்திற்கு வந்திருந்தாள். அவள் அடிக்கடி மாங்காய்களை ஆவலோடு பார்ப்பதை வேலன் கவனித்தான். கடையிலிருந்து நான்கு காய்கள் வாங்கிக்கொண்டு வந்து கொடுத்தான். இரண்டைப் பச்சடி செய்து, மீதியை ஊறுகாய்போட்டுத் தின்றார்கள். தின்றும் திருப்தியில்லை. தலைக்கு மேல் குலுங்கும் காயின் சுவையைக் கற்பனை செய்ததால் தின்றகாய்கள் கைத்தன.

இரவெல்லாம் சிறு தூறல். பொழுது விடிந்து கொஞ்சம் பலத்த காற்று. தொப்பெனக் குடிசையின்மேல் என்னவோ விழுந்தன. வேறென்ன? மாங்காய்கள்தான். பத்து நாட்களாக மரகதம் பார்த்துப் பார்த்துப் பெருமூச்சுவிட்ட மா அழுதது. மரகதமே சென்று பார்த்தாள். வீட்டின் முன் இரு காய்கள் விழுந்து கிடந்தன. மழை நீர் அதற்குப் பளபளப்பைக் கொடுத்து அதன் ஆகர்ஷணசக்தியைப் பன் மடங்கு அதிகரித்திருந்தது. மரகதத்தால் ஆசையை அடக்கமுடியவில்லை. பறித்தால்தான் பாவம்! தானாகவிழுந்ததுதானே! எடுத்துத் தின்றால் என்ன?

புடவைத் தலைப்பைத் தலையில் போட்டுக் கொண்டு இறங்கினாள். குனியமுடியாமல் குனிந்து எடுத்தாள். தின்று ருசித்தே விட்டது போன்ற ஒரு திருப்தி. நன்றாக நிமிரக்கூடவில்லை. "ஏய்" என்ற குரல் மதில்புறமிருந்து கேட்டது. மாணிக்கத்தின் மகன் பாலன் முகம் மதிலின் மேல் ஊன்றப் பட்டிருந்தது.

"ஏய்! என்ன காயைத் திருடறே?" என்று அதட்டிய வண்ணம் தாவிக் குதித்து மரகதம் சமாளித்துக்கொள்வதற்குள் அவள் கையிலிருந்த காய்களைப் பறித்துக்கொண்டான் பாலன். மரகதத்திற்கு அவமானத்தோடு அதிர்ச்சி! வேகமாக உள்ளே செல்ல முயன்றவள் வழுக்கி விழுந்தாள். பாலன் கடகடவெனச் சிரித்தான். தன் வீரத்தைத் தானே மெச்சிக்கொள்வதைப் போல் தலையை உதறி நிமிர்ந்து மாரை விறைத்துக் கொண்டு சென்றான்.

மரகதம் எழுந்திருக்க முடியாமல் எழுந்து உள்ளே சென்றாள்.

வேலன் வந்தான் கையில் இரு மாங்காய்களுடன்—விறகு வாடிக்கைக்காரர் வீட்டில் உதிர்ந்த காய்கள். கேட்டு வாங்கிக்கொண்டு வந்திருந்தான். தன் அருமை மகளைச் சந்தோஷப்படுத்த எண்ணி அழைத்தான். மரகதத்தின் ஈனக்குரல் தான் கேட்டது. மூலையில் படுத்திருந்தாள். முக்கலும் முனகலும் அவள் நிலையை உணர்த்தின. வேலன் மனைவி தண்ணீருடன் பிறகே வந்தாள்

மரகதத்தின் உடல்நிலை கண்டு உதவிக்கு யாரையோ அழைத்துவர வேலனை அனுப்பினாள்

ஆர்ப்பாட்டத்தோடும் ஆளோடும் வந்தான் பாலன். "திருடின காயையெல்லாம் மரியாதையோடு கொடுத்துவிடு" என்று கர்ஜித்தான். வேலன் மனைவிக்கு ஒன்றும் புரியவில்லை.

"காயா?"

"ஐயோபாவம். தெரியாது." கடகடவெனச் சிரித்த பாலன் அவளை நெட்டிக்கொண்டு உள்ளே சென்றான். இரு மாங்காய்கள் மாடத்தில் இருந்தன. வெடுக்கென எடுத்துக் கொண்டான். அதோடுவிட்டானா. ஆளை விட்டுக் குடிசை பூராவும் தேட்டை போட்டான். காய் ஏது? வெறிச் சிரிப்புடன் வெளியே சென்றுவிட்டான்.

வேலனும் மருத்துவச்சியும் வந்தனர். கூடவே வந்தது காற்றும். சாமானியக் காற்றா? எங்கும் அலறல். காற்று வளர்ந்து சூறாவளியாகிச் சூறையிடத் தொடங்கிற்று. காற்றின் அலறலில், அதோடு பேயாடும் மரங்களின் அலறலில், மரக

தத்தின் பிரசவவேதனையலறல் யார் காதில் விழும்?

வெளியே தலை நீட்ட முடியவில்லை. சுழல் காற்று ஆட்சி செய்தது. மரங்களும் மக்களும் உயிருக்குப் போராடினர். வேரோடு விழுந்தன பல மரங்கள். நடுவில் முறிந்தன பல மரங்கள். தலை திருகி விழுந்தன மற்றவை. மாடமாளிகைகள் தவிடு பொடியாயின. மாணிக்கத்தின் வீட்டு மாமரமும் சாய்ந்தது வேலன் குடிசைப்புறம். ஆனால் குடிசையை அழிக்கவில்லை. குடை பிடித்தது போல் காத்தது.

பீதியின் இடையே பிரசவித்தாள் மரகதம். மருந்தில்லை மாயமில்லை. ஏழைகளுக்கு இறைவனே கதி!

"ஸ் ஸ்......டர் ...ர்......டப்ப்......" மாணிக்கத்தின் வீட்டைப் பொடியாக்கிக்கொண்டிருந்தன அவன் வளர்த்த மரங்கள். வீட்டில் ஒதுங்க இடமில்லை. எந்த இடமும் பத்திரமானதாயில்லை. மாணிக்கத்தின் மண்டையில் பலத்த அடி. அவன் மனைவியின் கையில் மட்டை விழுந்து ஊமைக்காயம்......இன்னும் என்னென்னவோ!

குழந்தை அழுகிறது. சுழல்காற்று ஊதுகிறது. கதவுகள் அடித்துக்கொள்கின்றன. வேலா என்ற குரல் ஈனமாகக் கேட்டது. சொட்டச் சொட்ட நனைந்துகொண்டு மாணிக்கத்தின் மனைவி வந்து நின்றாள்.

"வேலா ஆபத்து, வாயேன்" என்றாள். அவள் வேதனையை அவள் நடுக்கமே அறிவித்தது. அவள் பின் விரைந்தான் வேலன்.

வேலன் தக்க சமயத்தில் வந்திராவிட்டால் பாலன் உயிரோடு புதைந்து போயிருப்பான். இடிந்து வீழுந்த செங்கல்களுக்கு அடியிலிருந்து வேலன் தீரத்தால் பாலன் உயிரோடு மீட்கப்பட்டான். மாணிக்கத்தின் மண்டைகட்டப்பட்டது.

காற்று கொஞ்சம் கொஞ்சமாய் நின்றது. பேய்க்கூத்துக்குப்பின் ஒரு அமைதி நிலவியது. பேச்சுக் குரல்கள் கேட்கலாயின,

வேலன் வீடு திரும்பினான்.

இரவு கழிந்தது.

ஊரில் இடியாத வீடு இல்லை. உடையாத மரம் இல்லை. கூரை குச்சுகள் இருந்த இடம் தெரியவில்லை—வேலன் குச்சுத் தவிர. அதை எந்தச் சக்தி காப்பாற்றிற்றோ! புதுப் பிறவியின் ஆயுள் சக்தியோ?

மாலை பாலன் வந்தான் வேலன் வீட்டிற்கு. கூட ஆள் தலையில் ஒரு கூடைமாங்காய்.

எதற்காக? தான் முதல்நாள் செய்த பாவத்திற்குப் பரிகாரமா? தன்னைக் காப்பாற்றிய வேலனுக்குக் கைம்மாறு?

குழந்தையின் அழுகை ஒலித்தது. தினம் தினம் எத்தனை மாறுதல்கள் பிரபஞ்சத்தில். நேற்றிருந்த பல இன்று இல்லை. இவ்வுயிர் நேற்று முன் இல்லை! சுழன்றுழலும்மாயையில் "என்னுடையது! உன்னுடையது!" என்ன அஞ்ஞானம்!

பாலன் இதை உணர்ந்தானா? அவன் இனந்தான் உணருமா?




மூன்ருவது ஸ்தூபியின் காட்சி. இதில் இருந்த அஸ்தியே தான் லண்டனுக்கு எடுத்துச் செல்லப்பட்டது.

# ஸாஞ்சி யாத்திரை

கே. ஸ்ரீ.

கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ் என்று சொன்ன மாத்திரத்திலேயே வடக்கே டில்லி முதலான இடங்களில் வசிக்கும் மதராஸிகளின் வயிற்றில் ஏதோ சங்கடம் உண்டாவது வழக்கம். இதற்குக் காரணம் இந்த ரயிலில் ஏறி இரண்டு நாட்கள் உட்கார்ந்து "கடாகா கடாகா" என்று பிரயாணம் செய்து கடைசியில் டில்லியையோ மதராஸையோ அடையும் பொழுது பிரயாணியை கூடையில் தான் வாரி வைக்க வேண்டும். ஆயிரம் மைல்கள் இடைவிடாது பிரயாணம் செய்வது சாமான்யம் அல்ல. அதிலும் நீட்டிய காலை மடக்காமல், (மடக்கிய கால்களை நீட்ட இடமில்லாமல்) பிரயாணம் செய்வது எல்லையற்ற பொறுமையுள்ள மதராஸிகளால் தான் முடியும். மற்ற இடங்களை எடுத்துக் கொள்ளுங்கள். டில்லிக்கும் பம்பாய்க்கும் இடையே நான்கு மெயில்களும் எக்ஸ்பிரஸ்களும், இதைத் தவிர, பல சில்லறைப் பாஸஞ்சர்களும் ஓடுகின்றன. அதேபோல் டில்லிக்கும் கல்கத்தாவுக்கும் இடையே ஓடும் வண்டிகளுக்குக் கணக்கே கிடையாது. ஆனால் டில்லிக்கும் மதராஸுக்கும் இடையே "ஒண்ணே ஒண்ணு, கண்ணே கண்ணு" என்று "ஜி. டி. எக்ஸ்பிரஸ்" மட்டும் தான் ஓடுகிறது.

கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸில் வண்டிக்கு ஒரு பிரயாணி இல்லாமல் ஓடிய காலம் ஒன்றுகூட உண்டு. அது அந்தக் காலம். அது டில்லியில் உள்ள மதராஸிகளை விரல் விட்டு எண்ணிய காலம். இந்தக் காலம் எப்படி என்பதைச் சொல்ல ஓர் உதாரணம் சொல்கிறேன், என் நண்பர் ஒருவர் சமீபத்தில் மதராஸுக்குச் சென்றார். அவர் வட இந்தியர். தமிழ் பேசத்தெரியாது. அவருக்குச் சென்னையைப்பற்றி அளந்து சென்னையில் பார்க்கவேண்டியதைத் விவரித்த மற்றொரு தமிழர் இறுதியில் சொன்னார். "பயப்படாமல் போங்கள். தமிழ் தெரியாது என்று கவலைப்படவேண்டாம். ஆங்கிலத்தில் ஜமாய்த்துவிடலாம். அங்கும் மதராஸிகள் இருக்கிறார்கள்." இதிலிருந்து தெரிகிறதல்லவா டில்லியில் எவ்வளவு மதராஸிகள் இருக்கிறார்கள் என்று.

ஏனய்யா, இதற்கு நிவர்த்தி இல்லையா என்று நீங்கள் கேட்கலாம். உண்டு. மன்னன் சத்தியமூர்த்தி போன்றவர்கள் மத்திய



முதல் ஸ்தூபியின் தோற்றம்
சைத்திய கூடத்தின் தூண்கள் முன்னால் காணப்படுகின்றன.

சென்ற மாத இறுதியில் ஸாஞ்சியில் புத்தமதத்தினர் கலமகாநாடு நடைபெற்றதுடன் அங்கே புத்த மதத்தினருக்கு மிகவும் விசேஷமான ஸாரி புத்தா, மொகல்லான இருவருடைய அஸ்திகள் புனர் அடக்கமும் நடைபெற்றது.

கிராண்ட் டிரங்கு டில்லியைவிட்டுப் புறப்படும் என் பெட்டியில் இருந்த மதராஸிகள் என்னைக் குசலப்பிரச்னம் செய்ய ஆரம்பித்தார்கள். "ஏது அதற்குள் சென்னைக்கு இன்னொரு நடை?" என்றார் ஒருவர். "சென்னைக்குச் செல்லவில்லை, ஸார். ஸாஞ்சிக்குப் போய்க் கொண்டிருக்கிறேன்" என்றேன். "ஸாஞ்சியா? அங்கே என்ன விசேஷம்!" என்று மற்றொரு நண்பர் வினவினர்.

"ஓகோ ஸாஞ்சி தானே! நீங்கள் கேட்டதில்லையா? 'புஷ்பேஷு ஜாதி, புருஷேஷு விஷ்ணு, நாரீஷு ரம்பா, நகரேஷு ஸாஞ்சி" என்றார் முதலில் கேட்ட நண்பர்.

"ஓய் ஓய், நிறுத்துமய்யா உம் வியாக்கியானத்தை. 'நகரேஷு ஸாஞ்சி இல்லை ஓய். அது 'நகரேஷு' காஞ்சி! நம் காஞ்சீபுரம் இல்லையா அது தான் காஞ்சி" என்று சொன்னார் சந்தேகம் நீங்கியவர்.

"நீங்கள் சொல்வதும் சரிதான். அவர் சொல்வதும் சரிதான். ஸாஞ்சியும் காஞ்சியைப் போல் மற்றொரு விதத்தில் பெயர் பெற்றது" என்றேன்.

ஸாஞ்சி போபால் ஸமஸ்தானத்திலிருந்து 43 மைல்கள் கிழக்கே இருக்கிறது. அது ஒரு குக்கிராமம். ஸாஞ்சி புத்த மதத்தினருக்கு மிகவும் விசேஷ ஸ்தலம். எப்படி என்று பின்னால் சொல்கிறேன்.

ஸாஞ்சி குன்று 500 அடி உயரம் உள்ளது. குன்றின் உச்சியை அடைய, படிக்கட்டுகள் கட்டியிருக்கிறார்கள். உச்சியில் நம் ஊரில் ரேஷன் பேய் உலாவாத, பஞ்சம் தாண்டவமாடாத காலத்தில் நெல்லைச் சுற்றி, சேர் கட்

சட்டசபையில் அங்கத்தினர்களாக இருந்தவரை கிராண்ட் டிரங்கு மணிக்கணக்கில் தாமதமாக வரும்படி செய்யவேண்டும் என்று வாதாடினார்கள். (அப்பொழுதெல்லாம் இந்த வண்டி நாள் கணக்கில் தாமதித்து வருவது வழக்கம்) அப்பொழுது இன்னொரு வண்டிக்கு அவசியம் இல்லாமல் இருந்தது. இரண்டாவது யுத்தத்திற்குப் பிறகே மதராஸிகள் டில்லிக்கு அதிகமாக வந்து குவிந்தார்கள். இது விஷயமாகச் சமீப காலத்தில் பார்லிமெண்டில் கேள்விகள் கேட்கப்பட்டன. ஆனால் கனம் சந்தானம் சுலபமாகச் செய்யக்கூடியதைக் கோடாலி கொண்டு பிளக்கவேண்டிய பிரச்னையாகச் செய்துவிட்டார். "ஒரு கிராண்டிரங்க் வண்டிக்கு மிஞ்சிய ஜனங்கள் பிரயாணம் செய்கிறார்கள். ஆனால் இரண்டு வண்டிகளுக்கு பிரயாணிகள் இல்லை. ஆகவே இன்னொரு வண்டி போடமுடியாது" என்று கணித மேதை ராமானுஜத்தைப்போல் புதிர் போட்டுச் சென்றுவிட்டார். மனவாடு ரயில்வே மந்திரியே இப்படிச் சொல்லிக் கை விரித்துவிட்டபிறகு அரவாடு லால்பகதூர் சாஸ்திரியா நமக்குக் கண்ணீர்விடப்போகிறார்?

இரண்டு நாட்கள் இடுப்பு ஒடிய, கிராண்ட் டிரங்கில் பிரயாணம் செய்வதற்குப் பழி தீர்த்துக் கொள்ளவே ஒரு இரவு மட்டும் பிரயாணம் செய்து போபாலை அடைய விரும்பினேன். போபாலில் என்ன விசேஷம் என்று நீங்கள் கேட்கலாம். ஆம், விசேஷம் இருக்கத்தான் இருந்தது.

டுவார்களே அதைப் போல் ஸ்தூபங்கள் கட்டியிருக்கிறார்கள்.

கிட்டத்தட்ட ஸ்தூபங்கள் ஒன்றைப் பார்த்தாற்போல் மற்றொன்றுஇருக்கிறது. ஸ்தூபம் அரை உருண்டை வடிவத்தில் காரையால் கட்டப்பட்டு, காரையில் பாராங்கல் துண்டுகள் அதற்குள் செலுத்தப்பட்டிருக்கின்றன. முக்கியமாகப் பெரிய ஸ்தூபத்திற்குச் சுற்றுப்புறத்தில் பிராகாரம் போன்ற நடைவழியும் வெளியே கைப்பிடி சுவரும் இருக்கின்றன.



முதலாவது ஸ்தூபத்தின் அருகிலுள்ள சித்திர வாயில்

ஸ்தூபத்திற்கு நான்கு திக்கிலும் நான்கு வாசற்படிகள் இருக்கின்றன. இவை தோரணம் நம் ஊரில் கட்டுவார்களே அதைப் போல இருக்கிறது. இவை மிகவும் அற்புதமான வேலைப்பாடுகள் அமைந்த கல் சிற்பங்கள். இவைகளில் புத்தரின் வாழ்க்கையிலிருந்து காட்சிகள் தத்ரூபமாகச் சிற்பிகளால் வெட்டப்பட்டிருக்கின்றன. ஒரு காட்சியில் புத்தர் தம் சத்திய வாழ்வை நிரூபிக்கத் தண்ணீரின் மேல் நடக்கிறார். புத்தரின் முந்திய வாழ்க்கைகளை மற்றொரு சிற்பம் சித்திரிக்கிறது.

புத்தரின் வாழ்க்கை, முக்தி சம்பந்தப்பட்ட இடங்கள் முக்கியமானவை புத்தகயாவும், ஸாரநாத்தும். முதலில் சொல்லிய இடம் பீஹார் மாகாணத்தில் இருக்கிறது. மற்றொன்று ஒரிஸ்ஸா மாகாணத்தில் உள்ளது. ஆனால் ஸாஞ்சி சம்பந்தப்பட்ட வரை புத்தர் இங்கு வந்ததுகூடக் கிடையாது. ஸாஞ்சியில் புத்தரின் பிரதம சிஷ்யர்களான ஸாரி புத்தர், மகா மொகல்லான இருவர்களுடைய அஸ்திகள் அடங்கிய சிறு பெட்டிகள் அடக்கம் செய்யப்பட்டன.

புத்தருக்கு எவ்வளவோ சீடர்கள் இருந்திருப்பார்களே அவர்களுள் இந்த இருவருக்கு மாத்திரம் என்ன முக்கியத்துவம் என்ற கேள்வி எழலாம். இவ்விருவரும் பிராம்மண குலத்தில் பிறந்தவர்கள். பூர்வாச்ரமத்தில் இவர்களுக்குப் பெயர் உபதிஸ்ஸா, கொலிதா என்பது. இவ்விருவரும் புத்தர் கடைசி காலத்திலே விரும்பி வசித்த சொந்த வாசஸ்தலமான ராஜகிருஹத்தில் பிறந்து ஒரே ஆசிரியரிடம் வித்தை பயின்றார்கள். ஒரு சமயம் ஒரு நாடகம் பார்த்த தன் பலனாக இருவரும் துறவறம்பூணத் தீர்மானித்தார்கள். இவ்விருவரும் பல குருக்களிடம் சென்று ஞான மார்க்கத்தை அடைய விரும்பினார்கள். ஆனால் முடிவில் ஏமாற்றமே அடைந்தார்கள். கடைசியில் அவர்கள் புத்தரின் ஒரு சீடரான அஞ்ஞஜியிடம் புத்தரின் போதனைகளைப் பயின்று பிறகு புத்தரையே அடைந்தார்கள். மொகல்லான புத்தரிடம் பிக்ஷு நிலை அடைந்து நிஷ்டையிலிருக்குங்கால் அவருக்கு மிகவும் தூக்கம் தூக்கமாக வந்ததாம். அப்பொழுது புத்தர் அவர் முன் தோன்றி, தைரியத்தைக் கைவிடாதே என்றாராம். அதன் பலனாக மொகல்லான "ஆராஹத்" என்ற மகா பக்குவநிலையை அடைந்தாராம். பிறகு ஸாரி புத்தாவும் பரம பக்குவமடைந்தார். அவர் தான் தர்மத்தைப்பற்றிப் புத்தரைப்போலவே கொஞ்சம்கூட வித்தியாசம் தெரியாமல் உபன்யாசம் செய்யவல்லவர். மொகல்லான ஸித்தியோகத்தில் பரிபக்குவம் அடைந்தவர். அவருக்குக் கூடுவிட்டுக் கூடுபாயும் சக்தியும், அபாரமாக விஷ ஜந்துக்களையும் கொடிய மிருகங்களையும் கட்டுப்படுத்தும் சக்தியும் உண்டு.

இரு சீடர்களும் புத்த பகவானால் தம் பிரதம சீடர்களாக அங்கீகரிக்கப்பட்டு அவர் நிர்வாண நிலையை அடையச் சில மாதங்களுக்கு முன்னரே தேக வியோகம் அடைந்



புது விஹாரத்தின் தோற்றம். இங்கேதான் கூட்டம் நடை பெறுகிறது.

தார்கள். ஸாரிபுத்தா சமாதி அடையுமுன்னர் தம் தாயாரையும் பிக்ஷுணியாக்கிவிட்டுப் பிறகு நிர்வாண நிலையை அடைந்தார். மொகல்லானா நிஷ்டையிலிருக்கும்பொழுது கொள்ளைக்காரர்களால் தாக்கப்பட்டு, நிஷ்டை கலைந்தவுடன் தாம் படுகாயமடைந்ததை உணர்ந்தார். உடனே தம் ஸித்தி மூலம் புத்தரின்முன் தோன்றி உலகத்திலிருந்து வெளிப்படவேண்டி விடை பெற்றுக் கொண்டார். புத்தர் ஸாரிபுத்தாவைப்பற்றிச் சொல்லுங்கால் "பிக்ஷுக்களே! ஸாரிபுத்தா தாயைப் போன்றவர்" என்றார். "மொகல்லானாவோ ஒரு பால் கொடுத்து வளர்க்கும் தாயைப் போன்றவர்" என்றார்.

இப்படிப்பட்ட புத்தரின் சிஷ்யர்களின் அஸ்திகள் அடக்கம் செய்யப்பட்டதால் ஸாஞ்சிக்கு மகத்துவம் உண்டாயிற்று. இதைத் தவிர யுத்தத்தால் மானிட சமூகத்துக்கு நன்மை கிடையாது என்பதை உணர்ந்து புத்த பகவானின் பொன்மொழிகளைச் சிரமேற்கொண்டு அம் மதத்தைத் தழுவி அதைப் பரிபாலிக்க முற்பட்ட சாம்ராட் அசோகன் ஸாஞ்சியில் ஒரு கம்பம் நாட்டி, அதில் தான் முதன் முதலாகத் தான் புத்த மதத்தைப் பரப்புவதில் சிரத்தை காட்டுவதாக உலகத்தாருக்குத் தெரிவித்ததுடன் புத்த மதத்தைப் பிளவு படுத்தத் துணியும் நபரையும் சரி, சங்கங்களையும் சரி, வேரோடு பிடுங்கிவிடுவதாகவும் பிரகடனம் செய்தான். அவன் காலத்தில் ஸாஞ்சியில் புத்தமடம் செழித்து நடந்ததுடன் ஆசிய நாடுகளிலிருந்து பல வித்வான்கள் இங்கு வித்தையில் பல கிளைகளில் ஆராய்ச்சி நடத்தினார்கள்.

மற்றொரு விசேஷமும் ஸாஞ்சியைப் பற்றிச் சொல்வதுண்டு. அசோக மன்னனின் ராணி திச்யரக்ஷை அசோகன் போதி விருக்ஷத்தின் மேல் அன்பும் ஆசையும் வைத்திருப்பதைக் கண்டு பொருமினாளாம். அவள் அசூயையும் சாபங்களும் போதி விருக்ஷத்தைக் கருகச் செய்தன. அது கண்டு அசோகனும், மனம் தளர்ந்து நோய்வாய்ப்பட்டான். இச்யரக்ஷை இதனால் அதிர்ச்சி அடைந்து அசோகனிடம் தான் எவ்வளவு தூரம் அந்த விருக்ஷம் வாடுவதற்குக் காரணம் என்பதைச் சொல்லி, சாபத்தைத் தீர்க்க அசோகனுடன் புறப்பட்டு விருக்ஷத்தை அடைந்தாள். இந்தச் சம்பவத்தை ஸாஞ்சியில் கல்லோவியமாகத் தில் பிரமாதமாகத் தீட்டியிருக்கிறார்கள்.

இவ்வளவு மகத்துவம் பெற்றது ஸாஞ்சி. ஸ்தூபங்கள் காரைகளால் கட்டப்பட்டவை என்று சொன்னேன் அல்லவா! அவைகளில் மூன்றும் நம்பர் ஸ்தூபம் காலக்கிரமத்தில் க்ஷீணமடைந்து இடிய ஆரம்பித்தது. சுமார் 100 வருஷங்களுக்கு முன் பிரபல சிற்ப சாஸ்திர நிபுணர் மேஜர் அலெக்ஸாண்டர் கன்னிங்ஹாம் அதைப் புதுப்பித்து ஜீர்ணோத்தாரணம் செய்யத் திட்டமிட்டார். அப்பொழுது ஸ்தூபத்தின் குறுக்கே ஒரு உத்திரம் போன்ற சட்டம் செலுத்தப்பட்டது. அச்சமயம் ஸ்தூபத்தின் நடுவிலிருந்து இரு பேழைகள் கண்டெடுக்கப்பட்டன. அவைகளின் உள்ளே அஸ்தி சின்னங்கள் இருந்ததுடன் அவை ஸாரிபுத்தா மொகல்லானாவின் எலும்புகள் என்ற குறிப்பும் இருந்தது. சுமார் 2500 வருஷங்களுக்கு முன் புத்தரின் பிரதம சீடர்களின் சின்னங்கள் என்பதால் அவைகளுக்குப் பிரமாத மதிப்பு உண்டு என்பதை உணர்ந்த கன்னிங்ஹாம் அவைகளை உடனே லண்டனிலுள்ள விக்டோரியா, ஆல்பர்ட் கண்காட்சிச் சாலைகளுக்கு அனுப்பி வைத்தார்.

இந்தச் சின்னங்களைப் பற்றிச் சாதாரணமாக யாரும் கவலைப்பட்டிருக்க மாட்டார்கள்.

ஆனால் 60 வருஷங்களுக்கு முன் ஸ்தாபிதமான மகா போதி சங்கம் புத்தரின் பொன் மொழிகளைப் பரிபாலிக்கவும் அவருடைய வாழ்நாளில் பிரபலமடைந்த இடங்களைப் புனர்நிர்மாணம் செய்யவும் முற்பட்டது. அந்த வேலையில் ஈடுபட்ட சங்கம் ஸாரநாத், புத்த கயா முதலிய இடங்களில் உள்ள புத்த விஹாரங்களை (கோயில்களைப்) புதுப்பித்தது. அப்பொழுது முதல் இச்சங்கம் புத்தரின் சீடர்களின் சின்னங்களைத் திரும்பப் பெற முயற்சி செய்தது. இந்தியா சுதந்திரம் பெற்றவுடன் பிரிட்டிஷ் அரசாங்கம் இச்சின்னங்களைத் திருப்பிக் கொடுத்தார்கள். அவைகளை இலங்கை, பர்மா, கம்போடியா, ஸிக்கிம், நேபாளம் முதலிய இடங்களுக்கு அனுப்பி புத்த மதத்தினர் அவைகளுக்கு மரியாதை செலுத்த ஏற்பாடு செய்தனர்.

இப்பொழுது மகாபோதி சங்கம் வைர விழாவைக் கொண்டாடும் சமயம் அவைகளை மறுபடியும் பிரதிஷ்டை செய்வதென்று தீர்மானித்தார்கள். அவை ஸாஞ்சியில் இருந்தபடியால் மறுபடியும் ஸாஞ்சிக்கே அனுப்ப முடிவு செய்தார்கள்.

பழையபடி ஸ்தூபத்தில் சின்னங்களைப் புதைத்தால் பக்தகோடிகள் அவைகளைத் தரிசிக்கமுடியாதென்று அவைகளுக்குப் பழையதும், புதியதும் சிற்பமூலம் கொண்ட ஒரு விஹாரம் சிருஷ்டி செய்யத் தீர்மானித்தார்கள். இதற்குப்போபால்நவாப் ரூ. 25 000 கொடுத்தார். போபால் சமஸ்தான சிற்பி ஸ்ரீ ஸ்வாமி ராவ் திட்டம் வகுத்து, தம் மேற்பார்வையில் புது விஹாரத்தை முடித்து வைத்தார்.

சின்னங்கள் சென்ற நவம்பர் 9-ஆம் தேதி கல்கத்தாவிலிருந்து ஸாஞ்சிக்கு ஸ்பெஷல் ரயில்மூலம் வந்தன. அவைகளுடன் பல பிரபல புத்தபிக்ஷுக்களும் பக்தர்களும் சதா புத்தமத கோஷங்களை எழுப்பிக்கொண்ட வண்ணம் வந்து சேர்ந்தனர். சின்னங்களை ஸ்ரீ சியாமபிரஸாத் முகர்ஜியும் டாக்டர் ராதா கிருஷ்ணனும் வரவேற்றுப் பெற்றுக்கொண்டார்கள்.

ஸாஞ்சி சாதாரணமான ஒரு குக்கிராமம். ஸாரிபுத்தர மொகல்லானாவின் அஸ்திப் பேழைகள் அவ்விடத்தைவிட்டு அகன்ற பிறகு அதற்கு மத சம்பந்தமான முக்கியத்துவம் நீங்கி, சரித்திர சின்னங்களுக்காகவே முக்கியத்துவம் இருந்தது. இப்படிப்பட்ட சிறிய இடத்தில் சுமார் 50,000 பேர்களுக்கு மேல் புழங்கி, தங்கி விழாவை அனுபவிக்க ஏற்பாடுகள் செய்த பெருமை போபால் சர்க்கார் அதிகாரிகளைச் சார்ந்தது. பொட்டலான இடத்தை ஒரு சிறிய பட்டணமாக்கி அதில் சகல நவீன சௌகரியங்களும் செய்து கொடுத்திருந்தார்கள்.



பர்ம பிரதமர் 'யூ நூ' விழாத் துவக்கத்தில் பேசுகிறார்.

சென்ற நவம்பர் 28-ஆம் தேதியிலிருந்தே 'ஜே ஜே' என்று இலங்கை, பர்மா, கம்போடியா, நேபாளம் முதலிய இடங்களிலிருந்து பிரதிநிதிகள் அங்கே கூடிவிட்டார்கள். 29 ஆம் தேதி ஸ்பெஷல் ரயிலில் அஸ்தி அடங்கிய பேழைகள் வந்ததும் சங்கங்கள் முழங்க, தாரைகள் ஊத, புத்த பிக்ஷுக்கள் "ஸாது ஸாது" என்று கோஷம் செய்ய, பேழைகளை டாக்டர் சியாம பிரஸாத் முகர்ஜியும் டாக்டர் ராதாகிருஷ்ணனும் எடுத்து ஊர்வலமாகச் சென்றார்கள். ஞாயிறன்று, நவம்பர் 30-ஆம் தேதி, ஸாஞ்சியில் பெரிய மகோத்ஸவ நாள். எங்கும் ஜனத்திரள். ஜனங்கள் சாரி சாரியாக மலை மேல் சென்று கொண்டிருந்தார்கள்.

சரியாக இரண்டரை மணிக்கு அஸ்திப் பேழைகளைத் தாற்காலிக இடத்திலிருந்து உயரே எடுத்துச் சென்றார்கள். இலங்கைக் கொடிகள் கம்பீரமாக பறக்க, அந்தந்த தேச புத்த பக்தர்கள் வாசனைத் திரவியங்கள் கொண்ட ஸ்தம்பங்களைத் தாங்கிச் செல்ல டாக்டர் முகர்ஜி, பண்டித நேரு, டாக்டர்ராதா கிருஷ்ணன் மற்ற ராஜ தூதர்கள் புடைசூழ மலை ஏற ஆரம்பித்தார்கள்.

மலை உச்சியில் கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. விஹாரத்தின் முன்புறம் கண்ணை அள்ளும் முறையில் ஜோடிக்கப்பட்டிருந்தது. எதிரே உள்ள மலைச்சரிவில் ஜனங்கள் ஈ மொய்ப்பதுபோல் மொய்த்துக் கொண்டிருந்தார்கள்.

அஸ்திப் பேழைகள் ஜனங்கள் தரிசனத்திற்காக மேடைமீது வைக்கப்பட்டன. பிறகு



ஸ்ரீ நேரு, அஸ்தி அடங்கிய சின்னத்தை புதிய விஹாரத்திற்கு எடுத்துச் செல்லுகிறார்

டாக்டர் முகர்ஜி வரவேற்புப் பிரசங்கம் செய்தார். மற்றத் தேசப் பிரதிநிதிகள் சிறிய பிரசங்கங்கள் செய்த பிறகு பண்டித நேருவும் பேசினார்.

நாம் எதற்காக இங்கே கூடியிருக்கிறோம் என்று சிந்தித்தீர்களா? என்று ஜனங்களைக் கேள்வி கேட்டுத் திகைக்க வைத்துவிட்டு, பண்டிதர் சொன்னார்; சுமார் 2,500 வருஷங்களுக்குமுன் தோன்றிய மகாபுருஷர். கௌதமபுத்தர். அவர் கொள்கைகளை உலகத்தில் பரப்பினார் வாள் நாகரிகத்தில் நம்பிக்கையிழந்த அசோகர், புத்தருக்குப் பின் பத்து நூற்றாண்டுகள்தான் நம் சரித்திரத்திலேயே பெருமை வாய்ந்த சகாப்தம். நம் நாட்டுக்குப் பெருமை தேடித்தந்த இம்மகா புருஷர்களின் சின்னங்கள் நம் நாடு திரும்பிவரும் நாள் நன்னாள் அல்லவா? என்றார் நேருஜி.

அஸ்திக கதிரவனின் பொன் கிரணங்கள் பேழையை ஆசீர்வதிக்க, நேருஜி பேழையைப் புனர்பிரதிஷ்டை செய்தார். வெளியில் புத்த பிக்ஷுக்களும் பக்தர்களும் "புத்தம்சரணம் கச்சாமி, தர்மம் சரணம் கச்சாமி, சங்கம் சரணம் கச்சாமி'' என்று கோஷித்தனர்.

ஸாஞ்சி புத்தமதம் திரும்பவும் தழைக்க அஸ்திவாரம் கோலுகிறதா என்ற கேள்வி இப்பொழுது எழுந்திருக்கிறது. பண்டிதநேரு சொன்னதுபோல் புத்தரின் உபதேசம்வாழ்க்கைக்கு வழிகாட்டியே அல்லாது குறுகிய மதம் அல்ல. அவைகளை எம்மதத்தினரும்பின்பற்றவேண்டும். அன்று கூடிய 50,000 ஜனங்களில் 49,000 சொச்சம் ஹிந்துக்கள். புத்தரும் ஹிந்துமத அவதாரம் என்று கருதுபவர்கள். ஆகவே புத்த மதத்தினரோ அல்லது மகாபோதி சங்கமோ குறுகிய புத்தியுடன் நோக்காமல் புத்தமதப் பெருமையைப் பரப்பமுற்பட்டால், புத்தரின் உண்மைகளும்,உபதேசங்களும் இந்தியாவில் மட்டும் அல்ல, ஆசியா பூராவுமே ஒலிக்கும்.

புத்தரும் அவர் மதமும் ஆசிய நாடுகளைப் பிணைக்கும் சங்கிலி. அது நாளுக்குநாள் பலப்பட்டு ஒரு ஸாஞ்சி மட்டும் அல்ல, பல ஸாஞ்சிகள் பிரபலமாவதை நம் நாட்டு மன்னர்கள் மிகவும் விரும்புவார்கள்.

வாழ்க ஸாஞ்சி! வாழ்க புத்தர்!



# SCISSORS




5½ அணுவுக்கு 10
உள்ளூர் வரி
சரிப்படுத்தலுக்
குட்பட்டது.




ஸிஸர்ஸ்

சிகரெட்டுகள்

மூன்று தலைமுறைகளாக

பிரசித்தி பெற்றவை

# கதையும் கற்பனையும்



ஆர். சுப்பிரமணியன்

மழை பலமாக வரும்போல இருந்தது. சாயங்காலம் அடிவானத்தில் சிறு புள்ளிபோல இருந்த கறுப்பு மேகம் மளமளவென்று அடுப்புப் புகைபோல வானமெங்கும் பரவி மூடிக்கொண்டு விட்டது. மழைவருவதற்கு அறிகுறியாக, 'சிலுசிலு'வென்று குளிர்ந்த காற்று அடிக்க ஆரம்பித்துவிட்டது. நண்பர்களும் நானும் ஊரைச் சுற்றிப் பார்க்க வந்தவர்கள். கையில் குடை ஒன்றும் யாரும் கொண்டுவரவில்லை. மழை பிடித்துக்கொண்டால் ராத்திரி ரயிலில் ஊருக்குப் போய்ச்சேருவதில் சிரமம் அதிகம், அதனால்சாப்பிட்ட சிரமம்கூட, தீருவதற்குள்ளாக ஓட்டமும் நடையுமாய் ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தோம். டிக்கெட் வாங்கிக்கொண்டு பிளாட்பாரத்துக்கு வருவதற்கும் மழை பிடித்துக்கொள்வதற்கும் சரியாக இருந்தது.

நாங்கள் நாலுபேரும் பிரயாணிகள் தங்கும் அறைக்குள் போய் உட்கார்ந்துகொண்டோம். மழைச்சாரல் அடிக்காமல் ஜன்னல் கதவுகளைச் சாத்திவிட்டேன். கடிகாரத்தைப் பார்த்தேன். மணி ஏழரை. ரயில் பதினொன்றரை மணிக்கு. தூங்கமுடியாது. தூங்கினாலும் எழுந்திருக்க முடியாது.

"சீட்டுக்கட்டுக்கூட இல்லையே?" என்றார் சாமா.

"இருந்துதான் என்ன பிரயோஜனம்? ஒரு கை குறைவாக இருக்கிறதே?'' என்றான் கிருஷ்ணன். அதற்குமேல் அவனால் பேச முடியாமல் தாம்பூலம் வாயை நிறைத்துக்கொண்டிருந்தது. நாலுபேரில் நான் கணக்கில் சேர்த்தி இல்லை. எனக்குச் சீட்டுகளை விசிறிமாதிரி அடுக்கிக்கொள்ளக்கூடத் தெரியாது.

திடீரென்று ராமசாமி நாயுடு பேப்பரிலிருந்து ஒரு செய்தியைப் படித்துவிட்டு எங்களைப் பார்த்துச் சொன்னார்; "கேட்டீர்களா அதிசயத்தை? நான்கு வயதுக் குழந்தை வேதசாஸ்திரங்களைத் தலைகீழ்ப்பாடமாகச் சொல்கிறதாம். பெரிய வித்வான்கள்கூட அந்தமாதிரி சொல்வதற்கு இருபது வருஷங்களாவது படித்திருக்கவேண்டும் என்று ஒப்புக்கொள்கிறார்களாம்!"

"என்ன அதிசயம்? பூர்வஜன்ம ஞாபகமாக இருக்கக்கூடாதா?'' என்றார் மல்லப்பமுதலியார்.

நான் புருவத்தை நெறித்து அவரைப் பார்த்தேன். "அப்படிக்கூட ஒரு ஞாபகம் இருக்கும் என்று சொல்கிறீர்களா?'' என்றேன்.

"ஏன் இருக்கக் கூடாதா? என் அனுபவத்திலேயே ஒரு சம்பவம் இருக்கிறதே?'' என்றார்.

"அதென்ன?'' என்று நான் காதைத் தீட்டிக்கொண்டேன். மற்றவர்களும் நிமிர்ந்து உட்கார்ந்தார்கள். ரயில் வர நாலு மணி நேரம் ஆகுமல்லவா?

"மூன்று வருஷங்களுக்கு முன்னால் நடந்த சம்பவம். இன்றைக்கும் அதை நினைத்துக்கொண்டால் எனக்கு உண்டாகும் உணர்ச்சியை என்னாலேயே எடுத்துச் சொல்ல முடிவதில்லை. அதற்கு மேல் எனக்கு உண்டாகும் படபடப்பு அடங்குவதற்கு வெகு நேரமாகிறது. ஆனால் நினைவில் இருப்பதைச் சொல்லிவிடுகிறதே நல்லது. அதனால் ஒருவேளை அந்த உணர்ச்சிப் பெருக்கு குறைந்துபோனாலும் போகலாம். அல்லது நீங்கள் எனக்கு ஆறுதல் உண்டாகும்படி ஏதாவது சொன்னாலும் சொல்லலாம். அதனால் அதை இங்கே சொல்கிறேன்.

உலகத்தில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பழக்கம் உண்டு. கொடுத்து வைத்தவர்கள், புண்ணியசாலிகள் நல்ல பழக்கங்களை ஏற்படுத்திக் கொள்கிறார்கள். வேறு சிலர் கெட்ட பழக்கங்

களை ஏற்படுத்திக் கொள்கிறார்கள், ஆனால் கெட்ட பழக்கத்தை விட்டுவிடுவது முடியாது. அது ஒன்று தான் அங்கே வித்தியாசம். அதை விட உயிரையே விட்டுவிடலாம் போல இருக்கும். கிருஷ்ணனால் வெற்றிலை போடுவதை நிறுத்த முடியாது. சிலர் பொடி போடுவார்கள். சிலபேர் புகைக்கு நடுவில் உட்கார்ந்து கொண்டிருப்பார்கள். எனக்கும் அப்படி ஒரு கெட்ட பழக்கம் இருந்தது. அதுதான் குடிப்பது.

சின்ன வயசில் நான் தேயிலைத் தோட்டத்து மானேஜரின் காரியதரிசியாக இருந்தேன். அவர் இங்கிலீஷ் துரை. குடிக்காமல் அவரால் எழுத முடியாது. குடிக்காமல் பேச முடியாது; படிக்கவும் முடியாது. தண்ணீருக்குப் பதிலாக அவர் மது அருந்தி வந்தார்.

அவர் எஜமானன். நான் அடுத்தபடியில் இருப்பவனல்லவா? எனக்கு அந்த அளவு கட்டுபடியாகாது. காப்பிக்குப் பதிலாக மது அருந்துவேன்: அவ்வளவுதான், ஆனால் குடிக்காமல் என்னால் இருக்கமுடியவில்லை. வெள்ளைக்காரன் ஊரை விட்டுப்போனான். என் மானேஜரும் என்னைவிட்டுப் போய்விட்டார். ஆனால் அந்தப் பழக்கம் என்னைவிட்டுப் போக மறுத்துவிட்டது.

சுதந்தரம் கிடைத்தது. நம்முடைய ஜனங்களே அரசாட்சி செய்ய ஆரம்பித்தார்கள். மது விலக்கை அமுலுக்குக் கொண்டுவந்தார்கள். ஆனால் என்னால் மதுவை விலக்க முடியவில்லை. குடிப்பது குற்றமாயிற்று. ஆனால் அது எனக்குக் குற்றமாகப் படவில்லை. உங்களுக்குச் சாப்பாடு எவ்வளவு அவசியமோ அவ்வளவுக்குக் குடி எனக்கு அத்யாவசியமாக இருந்தது. அதை என்னால் துறக்க முடியவில்லை. அந்த முயற்சியில்கூட நான் இறங்கவில்லை.

அப்படியானால் உங்களுக்கு எப்படிக் குடிக்க முடிகிறது? எங்கிருந்து கிடைத்தது? என்று கேட்பீர்கள். கடலூரிலிருந்து பாண்டிச்சேரிக்குப் போவேன். போய் மெய் மறந்து இருந்துவிட்டு வருவேன். உங்களிடம் மறைக்கவேண்டியதில்லை. நீங்கள் போலீசுக்காரர்கள் அல்லவே! கடலூரிலேயே சரக்குகளை கடத்திக்கொண்டு வருவார்கள். நான் அவர்கள் வாடிக்கைக்காரன். குறிப்பிட்ட இடத்துக்கு வரச்சொல்லி, தகவல் கிடைக்கும். அங்கே போவேன். கிடைத்த அளவு எடுத்துக்கொண்டு திரும்புவேன். அப்படி ஒரு தடவை போகவேண்டி நேர்ந்தபோது தான் அந்த அதிசயமான சம்பவம் நிகழ்ந்தது.

நல்ல மழைக்காலம். இரவு நேரம் அதிகம். ஆறு மணிக்கே பாதி இருட்டிவிடும். ஒருதடவை எனக்குத் தகவல் கிடைத்தது. 18, வெங்கடேச முதலியார் தெரு என்பதுதான் விலாசம். நான் வசிப்பது கடலூரில் அல்ல. அதற்குப் பக்கத்தில் உள்ள ஒரு கிராமத்தில். கடலூர் எனக்குப் புதியதல்ல. ஆனால் எல்லா இடங்களையும் எனக்குத் தெரியாது. குறிப்பாக இந்தத் தெரு எனக்குப் புதியது. அதற்குமுன் நான் கேள்விப்பட்டதுகூட இல்லை. ஆனாலும் என் ஆர்வம் என்னை உந்தித் தள்ளியது, என் ஊரிலேயே என் சினேகிதர் ஒருவர் என்னோடு கடலூருக்கு வேறு காரியமாக வந்தார். அவரை நாங்கள் தங்கியிருக்கும் இடத்தில் விட்டுவிட்டுக் கொஞ்சம் நேரத்தில் வந்துவிடுவதாகக் குறிப்பிட்ட இடத்திற்குப் போனேன்.

சாயங்கால வேளைகளில் மது அருந்துவதை என்னால் நிறுத்தமுடியாது. என்ன காரியமானாலும் சரி, எப்பேர்ப்பட்ட வேலையானாலும் சரி, ஒரு அவுன்ஸ் சோடாவில் கலந்து சாப்பிட்டால் தான் எனக்கு மற்ற வேலைகள் ஓடும். அதற்காக எப்போதும் கைப்பெட்டியில் கொஞ்சம் வைத்திருப்பேன். இந்தச் சிறிய அளவு மது என்னை வழக்கமாக நிலை தவறச் செய்வதில்லை.

அன்று எனக்கு என்னவோ போலிருந்தது. வழக்கத்துக்குக் கொஞ்சம் அதிகமாகவே அருந்திவிட்டேன். வெளியே கிளம்பும் போது மனசில் அளவில்லாத குதூகலம் நிரம்பி இருந்தது இருந்தாலும் நிலை தவறவில்லை என்று தான் சொல்லவேண்டும். என் சிநேகிதருக்கு இது தெரியாது என்பதில்லை. ஆனாலும் அவர் என்னைத் தடுக்கவில்லை. "நேரத்தில் திரும்பிவிடுங்கள்" என்று மட்டும் எச்சரித்தார்.

மணி ஆறரை இருக்கலாம். குறிப்பிட்ட தெருவை நான் அடைந்துவிட்டேன். தெருவில் காலடி வைக்கும் போதே என்னை என்னவோ செய்தது. ஏதோ ஒரு ஞாபகம் — எப்போதோ அந்த இடத்துக்கு வந்தது போல ஒரு நினைப்பு— என்னை அழுத்தியது.

சே! என்ன அசட்டுத்தனம்? ஊரே புதியது. இந்த இடத்தைப்பற்றிஇதற்கு முன் கேள்விப்பட்டதுகூட இல்லை. பிறர் வழிகாட்டி இங்கே வந்திருக்கிறோம். அப்படி இருக்க இதற்கு முன் பழக்கப்பட்ட இடமாக இது எப்படி இருக்க முடியும்?

இருந்தும் என்னால் அதை அந்த நினைப்பை உதறித்தள்ள முடியவில்லை. தெருவில் ஒவ்வொரு அடி எடுத்துவைக்கும். போதும் அதே இடத்திற்கு ஆயிரக்கணக்கான தடவைகள் வந்திருப்பது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று. அந்தப் பழைய கருங்கல் பாலம், தெரு நடுவில் பாதிக்கு மேல் பாழடைந்த பிள்ளையார்கோவில்—அவைகளை நான் இதற்குமுன் பல தடவைகள் பார்த்திருக்கிறேன். அவைகளுடன்பழகி இருக்கிறேன்.

அந்த உணர்வு அத்துடன் நிற்கவில்லை, மேலும் ஒரு படி பெருகியது. இந்த இடத்தில் அப்போது—நான் இப்போது தெளிவாக உணர்ந்து சொல்ல முடியாத காலத்தில் ஒரு தென்னை மரம் இருந்தது. அதை இப்போது காணவில்லை. தெரு

முனையில் தேர்முட்டிக்குப் பக்கத்தில் ஒரு சில்லறைக்கடை இருந்தது. இப்போது அங்கே ஒரு காப்பி கிளப் வந்துவிட்டது. இவைகள் உண்மைதானு என்பதை ஊர்ஜிதம் செய்துகொள்ளக்கூடிய அளவுக்கு என் மனுேதிடம் இடம்கொடுக்கவில்லை. பயங்கரமான இந்த உள்ளுணர்வுக்கு இடம் கொடுக்கவும் என்னுல் முடியவில்லை.

பதினுறு, பதினேழு, பதினெட்டு. பதினெட்டு! இதுதான் நான் நுழையவேண்டிய வீடு. ஓங்கி யாரோ என் மண்டையில் அடித்ததுபோல இருந்தது. அந்த வீடு என் வீடு! எப்படி இருக்கமுடியும்? முடியாதுதான். ஆனுலும் என்னுல் மறுக்க முடியவில்லை. அது என் வீடு! இதே வாசற்படிகளை நான் கணக்கற்ற தடவைகள் மிதித்திருக்கிறேன். இதன்மேல் உட்கார்ந்து நிர்மலமான ஆகாயத்தைப் பார்த்து, குருட்டு யோசனைகள் செய்துகொண்டு எத்தனையோ இரவுகளைக் கழித்தும் இருக்கிறேன். ஆனுல் எப்போது?

என் உடல் குப் என்று வியர்த்தது. கதவை லேசாகத் தள்ளினேன். திறந்திருந்ததால் அது திறந்துகொண்டது. முன் ஹாலுக்கு முன்னுல் ஒரு இருண்ட வராந்தா. நான் அதில்தான் நின்று கொண்டிருந்தேன்.

ஹாலில் விளக்கு பிரகாசமாக எரிந்தது. என்னையறியாமல் ஓர் உணர்வு என்னை அந்த ஹாலில் உள்ள பொருள்களைப் பார்க்கத் தூண்டியது. நடுவில் இருந்த அந்தப் பெரிய படம்! என் மூச்சே நின்றுவிடும்போல இருந்தது. அது என் மனைவியின் படம்.

புகை அடங்கி, கனல் கனிந்து, எரிய ஆரம்பிப்பதுபோல் என் குழப்பம் தெளிய ஆரம்பித்தது. என்னுல் என் நிலையைப் புரிந்துகொள்ள முடிந்தது. இவை என் முந்தைய ஜன்மத்து நினைவுகள்! போன ஜன்மத்தில் நான் இங்கேதான் இருந்தேன். இந்தப் படத்தில் இருப்பவள்தான் என் மனைவி. அவளைப்போன்ற ஒரு அழகியை நான் இந்த ஜன்மத்தில்கூடப் பார்த்தது கிடையாது. அதுதான் எங்கள் வாழ்வைக் குட்டிச்சுவராக அடிப்பதற்கும் காரணமாக இருந்தது. எனக்கு அவள்மேல் சந்தேகம் தோன்ற ஆரம்பித்தது. அனுவசியமாக அதுவளர ஆரம்பித்தது. என் சிநேகிதன் ஒருவன்—அவனை இப்போது என்னுல் நினைவுபடுத்திக்கொள்ள முடியவில்லை—அவளோடு நெருங்கிப் பழக ஆரம்பித்தான். அவள் அதை விரும்பவில்லை. ஆனுல் என்னை அவளால் திருப்திப்படுத்த முடியவில்லை.

கடைசியில்—கடைசியில் இப்போது நன்ருக ஞாபகம் வருகிறது. ஒருநாள் என் மனதைத் திடப்படுத்திக்கொண்டேன், இரவு அவளுக்கு விஷம் வைத்துக் கொன்றுவிட்டேன். அவள் குற்றமற்றவள் என்று தெரிய எனக்கு அதிகம் நாட்கள் ஆகவில்லை. ஆனுல் அதற்குள் நியாயஸ்தலம் என் வாழ்வுக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டது.

அப்புறம்.........அப்புறம் என்ன? அப்புறம் நடந்தது எதுவும் ஞாபகம் இல்லை. கடலில் மூழ்கி எழுந்த மாதிரி இருக்கிறது. புகை மண்டலத்துக்குள்ளிருந்து மூச்சுத்திணற வெளியே வந்து விழுந்தமாதிரி இருக்கிறது. நான் இந்த ஜன்மத்தில் மல்லப்ப முதலியாராக இருக்கிறேன். அவ்வளவுதான் ஞாபகம் இருக்கிறது. என் உடல் ஜில் என்று வியர்த்தது. கால்கள் பூமியில் பதியத் தயங்கின. கீழே விழுந்து விடுவேனே என்ற பயம் உண்டாயிற்று.

சட்டென்று என் தலைக்கு மேல் விளக்கு எரிந்தது. வாயிற்படி அருகில் ஒரு பெண்மணி வந்து நின்ருள். இவள்—ஒரு வேளை என் பேத்தியாக இருக்கக்கூடும். அப்படியே அவள் பாட்டியை உரித்து வைத்திருந்தாள்: கண்களில் இருந்த மருட்சி எனக்கு அவளை ஞாபகப் படுத்தின.

"யாரது?"

"18ம் நம்பர் வீடு இதுதானே?"



"ஆமாம், அவர் வீட்டில் இல்லையே?"

"யார்?"

"ஸப் இன்ஸ்பெக்டரைத்தானே தேடி வந்தீர்கள்?"

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. ஸப் இன்ஸ்பெக்டராவது? சட்டென்று என் மனதில் ஒரு சந்தேகம் உண்டாயிற்று.

"அம்மணி! இந்தத்தெருவின் பெயர் என்ன?"

"வெங்கடசாமி முதலியார் தெரு," "வெங்கடேச முதலியார் தெரு இல்லையா?" சட்டென்று படி இறங்கி நடக்க ஆரம்பித்தேன். வேகமாக நடந்தேன். யாரோ துரத்துவது போன்ற உணர்ச்சி. ஏதோ ஒரு பந்தத்திருந்து தப்பிவிட வேண்டுமென்ற விவரிக்க முடியாத ஆவேசம். ஓட ஆரம்பித்தேன். என்னை மறந்தேன். சுற்றி உள்ளவைகளையும் மறந்தேன். நினைவிழந்த நிலை. எனக்கு ஒன்றுமே ஞாபகம் இல்லை.

"நல்ல சம்பவம்! அதிசயமாக இருக்கிறதே!" என்றார் ராமசாமி நாயுடு. நாங்கள் ஒரு பெருமூச்சுவிட்டோம்.

"அதுதான் இல்லை. அதற்குப் பிறகுதான் அதிசயமெல்லாம் இருக்கிறது" என்றார் மல்லப்ப முதலியார். எங்களுக்கு மூச்சே இல்லை.

"மறுநாள் நான் விழித்துக்கொண்டபோது நன்றாக விடிந்துவிட்டது. காப்பி தலைமாட்டில் ஆறிக்கொண்டிருந்தது.

"ஆமாம், ராத்திரி ஏன் அப்படி நான் கூப்பிடக் கூப்பிட, தலைதெறிக்கிறமாதிரி இங்கே ஓடி வந்தீர்கள்?" என்று கேட்டார்.

"நீங்கள் எங்கே அதைப் பார்த்தீர்கள்?" என்று கேட்டேன்.

"ஏன்" சினிமா விட்ட பிறகு இரண்டுபேரும் ஒன்றாகத்தானே வந்தோம். உங்களுக்குத்தான் தூக்கக் கலக்கம். அதனால் நான் கொஞ்சதூரம் உங்களைப்பிடித்து அழைத்துக்கொண்டு கூட வந்தேனே?" என்றார்.

"சினிமாக் கொட்டகையாவது?"

"நாசமாய்ப் போச்சு! ராத்திரி எந்த உலகத்தில் இருந்தீர்கள்?" என்று கேட்டார்.

ஒரு விநோதமான சந்தேகம் வந்தது. "நான் தூங்கிவிட்டேன் என்று நினைக்கிறேன். சினிமாக் கதையைக் கொஞ்சம் சொல்லுங்கள். விளையாடாதீர்கள்!"

அவர் சொன்னார்: "ஒரு கதாநாயகன். அவனுக்கு ஒரு அழகான மனைவி. எப்படியோ மனதில் சந்தேகம் வந்து புகுந்துகொள்கிறது. அவனுக்கு ஒரு சிநேகிதன் வேறு கிடைக்கிறான். அவன் அவளுடன் நெருங்கிப் பழகுகிறான். விபரீதம் வளர்கிறது. ஆவேசத்தில் விஷம் வைத்துக்கொன்றுவிடுகிறான். தூக்குக் கயிறு வந்து கழுத்தைச் சுற்றிக் கொள்கிறது. தம்பதிகள் இரண்டுபேரும் மேகத்துக்கு மேலே கலர் பூசின ஒரு இடத்தில் சந்தித்துப் பாடுகிறார்கள்."

எனக்குத் தலை கிறுகிறுத்தது. மயக்கம் வரும்போல இருந்தது. நேற்றுச் சாயங்காலம் நான் எங்கே இருந்தேன்? ஒருவேளை நான் அனுபவித்த அந்த அனுபவம்—என் பூர்வஜன்ம நினைவுகள் அவ்வளவும் பிரமையோ? இருக்கமுடியாது. பின் சினிமாக்கதையும் என் நினைவுகளும் அவ்வளவு தூரம் ஒத்துக்கொள்வானேன்? நடந்ததுதான் என்ன? சிநேகிதருடன் சினிமாவுக்குப் போனதாக அவர் சொல்கிறார். நான் மட்டும் அந்தத் தெருவுக்குப் போனதாக என் நினைப்பு. எது சரி? நான் எங்கே இருந்தேன்? ஒருவேளை எல்லாம் பிரமையோ? நான் சினிமாக் கொட்டகையிலேயே அரைமயக்கத்தில் கிடந்தேனோ? என்ன விநோதமான அனுபவம்?

எனக்கு இன்றுவரை அதற்குவிடை தெரியவில்லை. அதுவே அந்த அனுபவத்தின் மர்மத்தை மேலும் அதிகப்படுத்துகிறது. ஆனால் அந்த அனுபவத்தை—அடிப்படைகூட இல்லாத அந்த அநுபவத்தை—மறக்கமுடியவில்லை.

ஆனால் ஒன்று நிகழ்ந்தது. மலையத்தனை பாவத்தில் கடுகத்தனை புண்ணியம் என்று சொல்வார்கள். அதைப்போல அன்று முதல் மதுவைக்



கண்டாலே எனக்கு விஷத்தைக் காண்பதுபோல ஆயிற்று. அதைப் பார்க்கும்போதே எடுத்துரைக்க முடியாத பயங்கர நினைவுகள் வந்து சூழ்ந்துகொண்டன. நான் குடிப்பதையே விட்டுவிட்டேன்;"

நாங்களெல்லோரும் ஒரு பெருமூச்சுவிட்டோம். அதன் எதிரொலியேபோல தூரத்தில் கைகாட்டியின் அருகில் ரயில் பெருமூச்சு விட்டுக்கொண்டு வரும் சப்தம் கேட்டது.

நாங்கள் ஊரிலிருந்து வந்து நான்கு வாரங்கள் ஆகி இருக்கலாம். ஆனால் என் மனதில் மட்டும் இந்த ஆச்சரியகரமான நிகழ்ச்சி எதிரொலி செய்துகொண்டிருந்தது. அதை என்னால் மறக்க முடியவில்லை.

சமீபத்தில் ஒருநாள் மல்லப்ப முதலியாரை சந்தையில் பார்த்தேன். அவரைப் பார்த்ததும் எனக்கு அன்று அவர் சொன்னது ஞாபகத்துக்கு வந்தது. இன்னதென்று விவரிக்க முடியாத உணர்ச்சி என்னுள் பாய்ந்தது. என் உடல் புல்லரித்தது. பேச்சுக்கு நடுவில் என் மனதில் பொங்கி வெடித்துக்கொண்டிருந்த அந்த உணர்வு வெளியிடப்பட்டது.

"முதலியாரே! அன்று இரவு ஸ்டேஷனில் நீங்கள் சொன்னீர்களே? அந்தச் சம்பவத்தை என்னால் மறக்கவே முடியவில்லை" என்று சொன்னேன்.

அவர் விழுந்து விழுந்து சிரித்தார். "நல்ல ஆளையா நீர்! ஏதோ அன்றைக்கு நாலு மணி நேரம் ரயில் வருகிற வரைக்கும் பொழுதுபோக வேண்டுமென்பதற்காக ஏதோ ஒரு கதை சொன்னால் அதை யெல்லாம் மனசில் வைத்துக்கொண்டு என்னையே கலாட்டா செய்கிறீர்களே?" என்றார்.

நான் நிதானமாக ஒரு பெருமூச்சுவிட்டேன். என்னை வேறு என்ன செய்யச்சொல்லுகிறீர்கள்?



# நடமாடுங் கோயில்

ரா. ஸ்ரீ. தேசிகன்

புனிதமான மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாள். வைகறையாமத்தில் வெளியே புறப்பட்டேன். சூழ் வனப்பைப் பருகிக்கொண்டே சிந்தையில் ஆழ்ந்தேன். பல கவிகள் வரைந்த சொல்லோவியங்கள் என் மனத்திரை மீது பாய்ந்தன. கடும் பனி என்மீது பெய்து கொண்டிருந்ததை நான் உணரவில்லை. சித்திரத்தில் அலர்ந்ததுபோல எல்லாம் தோன்றின. காலை இளங் காற்றில் பழுத்த நெற்கதிர்கள் சல சலவென ஒலித்தன. தெய்வகானம் அதில் பிறக்கக் கண்டேன். ஓர் அமானுஷ்ய மான தோற்றம் என் முன் விரிந்தது. காலைக் காட்சிகளை நுகர்ந்தவண்ணம் பருத்தியூர் புத்தான்றக்கரைமீது பனி பெய்ததையும் பாராது படுத்திருந்தபடியால், தொண்டை சற்றுக் கரகரத்தது. ஜல தோஷமும் பிடித்துவிட்டது. வீடுவந்து சேர்ந்ததும் என் அறையில் படுக்கையை விரித்துப் படுத்தேன். யாரோ கதவைத் தட்டும் அரவம் கேட்டது. யார் என்றேன்?

"நான்தான் சுந்தரம்" என்றார் என் நண்பர்.

"ஆகா வாருங்கள்" என்று கதவைத் திறந்தேன்,

உள்ளே நுழைந்ததும் 'என்ன தொண்டை கட்டியிருக்கிறதே' என்றார்.

"இல்லை, பனியில் வெகுநேரம் உட்கார்ந்து விட்டேன்."

"இன்னும் இயற்கைக் காட்சியை அனுபவிக்கும் பைத்தியம் போகவில்லையா?" என்று சற்றுக் கிண்டலாகப் பேசினார்.

உங்களுக்குப் புத்தகப் பைத்தியந் தெளியும்போது எனக்கும் இயற்கைமீதுள்ள பைத்தியம் தெளியுமென்றேன். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விஷயத்தில் பைத்தியம் பிடிக்கும் போலிருக்கிறதே என்றார்.

'ஆமாம், அதற்கென்ன தடை. பெண்களின் முறுவலில் ஆழ்ந்து பலர் தம் சிந்தையைப் பறிகொடுத்துவிடுகின்றனர். பணப் பித்து சிலரை ஆட்டிவைக்கிறது. சிற்பம், ஓவியம், இசை, நாடகம் என்று வேறு சிலர் தங்கள் நாட்களைக் கழிக்கின்றனர். மற்றுஞ் சிலர் ஆடி ஆடி அகங்கரைந்து ஆண்டவன் ஆயிரம் நாமம் பிதற்றி மெய்ம்மறந்து திரிகின்றனர். எல்லாம் பைத்தியந்தான். ஆனால் எந்தப் பைத்தியம் உயர்ந்த பைத்தியம் என்றுதான் நாம் யோசிக்கவேண்டும்.'

பேசின பேச்சில் என் தொண்டையும் தெளிவடைந்துவிட்டது.

தேசிகருக்கு ஜலதோஷம் என்று பத்திரிகைகளில் போடச் சொல்லலாமென்று நினைக்கிறேன் என்றார்.

"எனக்கு மந்திரி பதவிவந்தால், அப்பொழுது என் ஜலதோஷத்திற்கு மகிமை யிருக்கும்' என்றேன்.

'சரியான போடு போட்டீர்களே!

ஆமாம்; உண்மைதான். மந்திரி தம் உடையைத் துவைத்துக் கட்டுகிறார்—என்ன சாப்பிடுகிறார் என்றால் அந்தப் புனிதமான

தரிசனம் படத்தோடு பத்திரிகையில் வரும். சாப்பிடுவதும், உடை உடுத்துவதும். அதைத் துவைப்பதும் அபூர்வமான காரியம், அமானுஷ்யமானவையல்லவா? கடுந் துயரில் ஆழ்ந்து தத்தளிக்கும் ஏழை மக்களின் இன்னல்கள் வெளி வருகின்றனவா?' என்றார்.

'துயரங்களென்ன? உண்மையான நற்செய்திகளும், உயர் தியாகங்களும் அன்பில் மலர்ந்த புனிதமான நற்செயல்களும் வெளி வருகிறதில்லை.

உலகத்தில் எங்கேயாவது ஒரு மூலையில் கலகமிருந்தால், அதுவரும். நிர்மலமான ஆகாயத்தை யாராவது பார்க்கிறார்களா?' என்று வினவினேன்.

'இல்லை' என்றார்.

'மேகம் வந்தால்?'

'அப்பொழுது அதைநோக்குகின்றோம்' என்று சொன்னார்.

'நல்லது மறைந்து நிற்கும்: கெடுதல்தான் அம்பலத்திற்கு வரும்' என்றேன்.

இந்த வெள்ளச் சேதத்திற்காக ஆயிரம் கொடுத்தார் அவர்; அதற்காக இரண்டாயிரம் கொடுத்தார் என்றெல்லாம் பத்திரிகைகளில் வெளிவருகின்றனவே என்றார் என் நண்பர்.

'நல்லது ஒரு சமயத்திலும், ஒருபொழுதிலும் விளம்பரத்தை நாடாது' இப்படி வருகிறதெல்லாம் உண்மையான தியாகத்தில் பிறந்தன என்று நினைக்கின்றீர்களா?'

'இப்படி அளிப்பதை என்னென்று கருதுவது?'

'ஆடம்பரந்தான்'

'அப்படியானால் மௌனந்தான் உண்மையான நிலையா?' என்றார்.

'ஆமாம், அது உண்மையான மௌனமாயிருக்கவேண்டும். ஒருவர் மௌனமே விளம்பரத்திற்கும் பொருளாகிவிட்டால், அதுவும் அநாகரிகந்தான். எந்த விதமான விளம்பரமும் அநாகரிகத்தின் சின்னந்தான்' என்றேன்.

'பழுத்த ஞானியான சாக்கிரடீஸ் தமக்கு ஒன்றுந்தெரியாது என்று சொன்னாரே அதைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்' என்று வினவினார்.

'ஒன்றும் கூறுவதற்கில்லை. இப்படி மொழிவதுகூட வினயமென்று கருதுவதற்கில்லை. இதொரு விதமான அகந்தையாக இருக்கலாம்!'

'பெருஞ்செல்வத்தில் பிறந்து வளர்ந்தாலும், எளிய வாழ்க்கை அவர் நடத்துகிறார் என்றெல்லாம் சொல்லிக் கொள்ளுகிறார்களே, அதைப்பற்றி உங்கள் அபிப்ராயம் என்ன' என்றார்.

'அந்த எளிய வாழ்க்கைகூட அகந்தையை மறைக்கும் ஒரு கள்ளப் போர்வையாயிருக்கும். ஒன்றுஞ் சொல்வதற்கில்லை, நான் பிறரை அறியமுடியாது; நம்மை நாமே அறிந்தோமா? அதுவும் இல்லை; நமக்கு ஒன்றுந்தெரியாது என்றதுதான் உண்மை. நம்மைப் படைத்த ஒருவனுக்குத்தான் நம்மைப்பற்றித் தெரியும். அதுதான் உண்மை. நாம் யாரை ஒரு மகான் என்று கருதுகிறோமோ, அவன் கண்ணிற்கு ஒரு பாதகஞ் செய்தவனாகப்படும்; நாம் ஒன்றுக்கும் உதவாதவன் என்று கழித்துவிட்ட ஒருவனை அவன் கொண்டாடுவான் என்று நான் பேச்சை முடிப்பதற்குள் மேளச்சத்தம் கேட்டது. இன்...இன்றைக்கு உற்சவமோ என்றேன்.

'இல்லை; கோயில் கைங்கரியம் செய்த கோமளத்தம்மாளுக்கு ஏகல். கோயில் மரியாதை நடக்கின்றது' என்றார். மேளமும் தாளமும் விண்ணைப் பிளந்தன. வேத ஒலி கேட்டது. திருவாய்மொழி ஓதிக்கொண்டு சில அந்தணர் வந்தனர், சாமரம் குடை பரிவட்டம் எல்லாம் காட்சி அளித்தன.

'இதற்கென்ன சொல்லுகிறீர்கள்' என்று என் நண்பர் கேட்டார்.

'ஒன்றுஞ் சொல்லுவதற்கில்லை; கோயில் கைங்கரியம் செய்தால் மட்டும் முக்தி கிடைத்துவிடாது. கண்ணுக்குத் தெரியாது, ஆடம்பரமற்ற உலகச் சேவைதான் ஆண்டவன் சேவையென்று கருதிச்செய்கிற உத்தமனுக்குத்தான் முக்தி கிடைக்கும்' என்றேன்.

'இதே கருத்தைத்தான் என் தகப்பனார் கூறுவார். அதற்கு உதாரணமாக ஒரு கதை

யும் சொல்லுவார். இது பரம்பரையாக வந்த கதையாம்' என்றார்.

'அதைச் சொல்லுங்களேன் கேட்கிறேன் என்றேன்' என் நண்பர் கதையைத் தொடங்கினார்.

"ஏழை மக்களுக்குக் கோடைக்காலத்தைத் தாங்கமுடியும், மழைக் காலத்தைத் தாங்க முடியாதன்றோ? மழை பெய்தால் அவர்கள் என்ன செய்வார்கள். தெருவையே படுக்கையாய்க் கொள்ளுகிற அவர்கள் என்ன செய்வார்கள்? அவர்களுக்குச் சில குடிசைகள் அமைந்திருந்தாலும், மழையில் தரையெல்லாம் குளமாய்ப் போய்விடும். கூரையெல்லாம் அள்ளு கந்தலாய்த் தொங்கும். குளமெடுத்து ஆறாய்க் குடிசையில் தண்ணீர் ஓடினால் அவர்கள் என்ன செய்வார்கள்? குழந்தைகளுக்கோ குறைவில்லை. கை சூம்பி, சில குழந்தைகள் விளையாடும்; கால் சூம்பி, சில குழந்தைகள் கீழே கிடக்கும். எலும்பெல்லாம் தெரிய மற்றுஞ் சில குழந்தைகள் அசைவற்றுத் தூங்கும். புழுதியில் புரண்டு கிடக்கும் புழுதிதான் அக் குழந்தைகள் பூணும் ஆபரணமாகும்.

வீராயி புருஷன் இறந்துபோய் நான்கு மாதங்கள் தேய்ந்துவிட்டன. அவளுக்கொரு பிள்ளைதான். தாய்ப்பால் அந்தக் குழந்தைக்கு இல்லாமற் போயிற்று. பால் இல்லாமல் தவிப்பாள். சில வீடுகள் மெழுகிக் கோலமிட்டு வயிறு வளர்த்தாள். தான் உறையும் குடிசைக்கு வாடகை கட்டிவிட்டால். மாதத்தில் பாதி நாளைக்குத்தான் அவள் உழைத்துச் சம்பாதிக்கிற பணம் காணும், என்னசெய்வாள்? பயிரிடுங் காலங்களில் வயல்களில் களைபிடுங்குவாள். அறுவடைக் காலங்களில் அறுவடைக் கூலியும் இவளுக்குப் பயன்படும். இப்படிக் காலத்தைத் தள்ளிவந்தாள், காலத்தை இவள் தள்ளுகின்றாளா? அல்லது காலம் இவளைத் தள்ளுகின்றதா? ஒன்றும் விளங்கவில்லை:

ஒருநாள் குழந்தைக்குப் பால் இல்லை. அது அழுதுகொண்டே இருந்தது. என்ன சமாதானம் செய்தும் பலிக்கவில்லை. நகிலை வாயில்வைத்துச் சப்பும்; அங்கே என்ன இருக்கிறது பாவம். வாயை எடுத்துவிட்டு அலறும்; மீண்டும் வாயை வைத்துப்பார்த்து ஏமாந்து போய்விடும்.

எத்தனையோ கோயில் கைங்கரியம் செய்கின்ற வேம்பு அம்மாளைப் பார்க்கப் புறப்பட்டாள்.

அன்றுதான் பெருமாளுக்குக் தங்கக் கவசம் சாத்தப் போகின்றார்கள். வேம்பு அம்மாள் திரியாத ஊர்கள் கிடையாது. அவள் பாலியத்திலே நூல் இழந்த ஸ்திரீ, கைங்கரியத்தைத் தவிர வேறு எதிலும் அவள் உள்ளம் நாடினதில்லை, கவசம் ஒப்பிலி அப்பனுக்கு இல்லையாம். கவசம் சாத்துவதற்கு முன்பு பெருமாளுக்குத் திருமஞ்சனஞ் செய்யவேண்டுமே! குடங்குடமாகப் பால் வந்து சாய்ந்துகொண்டேயிருந்தது. கும்பகோணம், குடவாசல், பாபநாசம் தஞ்சாவூர் முதலிய இடங்களிலிருந்து வேண்டிய சாமான்கள் வந்தன. கட்டுக் கட்டாய் வெற்றிலையை ஒருவர் தருவதாக ஒப்புக்கொண்டார். தாறுதாறாக வாழைப் பழங்கள் குவிந்தன; தேங்காய் மூட்டை மூட்டையாகச் சேர்ந்தன, தயிர்க்குடங்களுக்கோ குறைவில்லை, பன்னீர்ச்சொம்புகள் கணக்கற்றிருந்தன. கலவைச் சந்தனம் ஓர் ஆள் உயரத்திற்குச் சேர்ந்துவிட்டது.

'எல்லாம் ஒப்பிலி அப்பன் கிருபைதான்' என்று வேம்பு அம்மாள் ஒவ்வொரு பொருளையும் பார்த்து அகமகிழ்ந்தாள். உவகை பொங்கிப் பொங்கி எழுந்தது. ஆனந்தத்தில் கண்ணீர் வடித்தாள்.

'அப்பனே, எல்லாம் உன் கிருபைதான். உன் காரியத்தை நீ நடத்திக்கொள்ளுகிறாய் நாங்கள் யார்? உன் அங்கங்கள்தானே' என்றெல்லாம் சிந்தித்தாள். நீண்ட சிந்தனைப் பாதையில் அவள் மனஞ் சென்றுகொண்டிருந்தது. அந்தச் சமயத்தில் வீராயி ஓலங் கேட்டது. இன்பச் சிந்தைத் தொடர்பு சட்டென்று அறுந்தது. அப்படி அறவே நற் சிந்தையின் இன்பநாதமும் அக்கணமே மாய்ந்தது.

"அம்மா, குழந்தைக்குச் சொட்டுப்பால் கொடுங்களேன்" என்றாள் வீராயி.

பால் இல்லையே அம்மா. வீராயி என்றாள். பாலிருக்கிறதே ஏன் பால் இல்லை என்று சொல்லுகிறாய் என்று அவள் மனச்சாட்சி இடித்துக் கேட்டது.

என்னிடத்தில் பாலில்லை. பகவானுக்கென்று எடுத்துவைத்த பால் எனதாகுமோ

என்று தன் மனதிற்குச் சமாதானம் அளித்தாள்.

பாற்குடங்கள் வீராயியின் கண் பார்வைக்கு வந்தன. பால் ஏன் இல்லையென்று சொல்லுகிறாய்? அதோ குடம் குடமாய் வைத்திருக்கிறதே. அதில் கொஞ்சம் கொடுத்தால் குழந்தையின் பசி தீருமே!

'பெருமாளுக்கு வைத்திருக்கிறேன். அதை என்னமா உனக்குத் தருகிறது'

'அவர்தானே நம்மைப் படைத்தார் அவர் குழந்தைதானே இந்தக் குழந்தையும்!'

'வேதாந்தமா பேசுகிறாய் போ. வெளியிலேபோ' என்று கதவைச் சாத்திக் கொண்டு உள்ளே நுழைந்து விட்டாள்.

அந்தக் குழந்தைக்குப் பால் கொடுத்தால் தான்என்ன என்று எண்ணம் வந்தது. அது சட்டென மறைந்துவிட்டது. அவரவர் கர்மாவை அனுபவிக்க வேண்டும். எந்தக் கர்மாவைச் செய்தாளோ அந்த வீராயி என்று மனத்தைச் சமாதானம் செய்து கொண்டாள். மீண்டும் பகவானைப் பற்றிய நினைவு தான். நயனங்களில் உவகைக் கண்ணீர் ஊற்றெடுக்கத் தொடங்கியது.

வீராயி மெல்லத் தள்ளாடிக் கொண்டு ராமு ஐயர் வீட்டை அடைந்தாள். அப்பொழுது தான் அவர் காப்பி அருந்த உட்கார்ந்தார். பாலில் இன்னும் கஷாயத்தை விடவில்லை. வீராயி கதவைத் தட்டினாள்.

'யார் என்றார்' அவர்.

'தெரியாதா சாமி, நான் தான் வீராயி'

வீராயியா? என்று கதவைத் திறந்து கொண்டு வந்தார்.

குழந்தையின் நிலைமையைப் பார்த்த உடனே அவருடைய மனம் கசிந்துவிட்டது. 'என்ன வேணும் வீராயி, பால் தரலாமா?'

'அதற்குத் தான் வந்தேன். ஐயா' என்றாள்.

பாலைத் தந்து உடனே அனுப்பிவிட்டுத் கதவைச் சாத்திக்கொண்டார். சிந்தையில் ஆழ்ந்து விட்டார். வீராயி அவரை வாயார வாழ்த்தி விட்டுப் போனாள்.

ராமுஐயர் எம். ஏ. பட்டம் பெற்றவர். ஏழைகளின் துயரைக் கண்டு அவர் மனம் வாடிப்போய்விடும். தாம்மட்டும் அரிய இலக்கிய விருந்தை நுகர்வது; ஏழைமக்கள் அஞ்ஞான இருட்டில் தவிப்பதா? என்றெண்ணம் அடிக்கடிவரும், உடலுக்கு உணவு எப்படித் தேவையோ, அப்படியே மனத்திற்கும் உணவு தேவையன்றோ? ஏழைகள் உணவின்றித் தவிக்குங்கால் நாம்மட்டும் சிலோபி, பதிர்ப்பேணியையும் எப்படிச் சாப்பிடமுடியும்; அவர்கள் அறியாமைச் சகதியில் சிக்கி உழலும்போது, ஷேக்ஸ்ப்பியர், காளிதாஸன், கம்பன் இவர்களுடைய இலக்கிய விருந்துகளைச் சுவைத்து இன்புற முடியுமோ? என்றெல்லாம் எண்ணமிட்டார். ஆழ்ந்தசிந்தனைச் சுழலில் சிக்கிய அவருக்குக் காப்பியைப் பற்றிய நினைவும் மறைந்தே போயிற்று. அலைக்கு மேல் அலைகளாய் மோதிக்கொண்டு வந்தன. அவ்வெண்ண அலைகள் மீது மிதந்து சென்றார்.

அவருக்குத் தாய் தகப்பனில்லை. வேறு நெருங்கின உறவு யாருமில்லை. தக்க வரன்கள் பல இடங்களிலிருந்து வந்தன. ஆனால் மணம் புரிய அவர் மனம் இடந்தரவில்லை. பிள்ளை குட்டிகள் வேண்டாமா? என ஒருவர் கேட்டால், 'உலகத்திலுள்ள குழந்தைகள் போதாதா' என்று பதிலளிப்பார். ஏழை மக்களுக்குத் தம் ஊரில் ஒரு பள்ளிக்கூடம் நிறுவினார். அதில் ஜாதி மதங்கள் பாராது எல்லோரையும் சேர்த்துக் கொண்டார். அல்லும் பகலும் அதில் உழைத்தார். பிறகு பஞ்சாயத்துப் பள்ளிக்கூடம் தம் ஊரில் ஏற்பட்ட உடனே அதை விட்டுவிட்டு வேறு கைங்கர்யத்தில் இறங்கினார். குஷ்டரோகிகளுக்குச் சேவைசெய்ய இச்சை உள்ளவர் வரலாம் என்ற பிரசுரத்தைப் பார்த்தார். அவர்களுக்காக ஏற்படுத்தப்பட்ட இடத்திற்குப் போய் வேலை செய்யத் தொடங்கினார். அவர்களோடு சேர்ந்து தம் காலத்தைக் கழித்தபடியால், அந்தநோய் அவரைப் பிடிக்கத் தொடங்கிற்று. அவர்களுடைய துயர்களையும் இன்னல்களையும் சேர்ந்து அனுபவிக்கும்படியான பாக்கியம் கிடைக்கப்பெற்றேனே என்று அகம் மகிழ்வார். பிறர் துயரைத் துடைப்பதே தம் கைங்கரியமாக வைத்துக்கொண்டு தம் காலத்தை இன்பமாய்க் கழித்தார். ஒருநாள் படுத்த படுக்கையில் உயிர் துறந்தார். அவரை அங்கே உள்ளவர் அடக்கஞ் செய்துவிட்டனர். அவர் இருந்த இடம் தெரியாமல் போயிற்று. ஆனால் அவர் இறந்துபோகும்போது, ஒரு சோதிப் பிழம்பு விண்ணை நோக்கிப் போய்க்கொண்டிருந்தது.

* * *

வேம்பு அம்மா கைங்கரியம் செய்யாதகோயில் இல்லை. அவள் புகழ் எங்கும் பரவிற்று. அவளுக்கென்ன, உத்தமி. கலியுகத்தில் இத்தனை பக்தி யாருக்கு இருக்கிறது என்று எல்லோரும் வியப்பார்கள். அவள் ஆசாரியன் திருவடி அடைந்ததும் அடியார்கள் கூட்டம் கும்பகோணம் சக்கரப்படித்துறைக்குத் திரண்டு விட்டது.

சந்தனக்கட்டைகளை அடுக்கித் தகனஞ் செய்தனர். கணக்கில்லாத மரியாதைகள் அவளுக்கு நடந்தன, அவள் இறக்கும் பொழுதிலும் ஒரு சோதிப் பிழம்பு மேல் நோக்கிக் கிளம்பி எங்கேயோ மறைந்துவிட்டது. என்றைக்கு உலக மறியாமல், ராமு மாண்டாரோ, அன்றைக்கே வேம்பு அம்மாளும் இறந்து போனுள்.

* * *

இரண்டு சோதிப் பிழப்புகளும் விண்ணில் சஞ்சரித்தன.

ஒரு பிழம்பு மற்ருெரு பிழம்பைப் பார்த்துக் கேட்டது.

"ஏண்டா. ராமுமாதிரியாயிருக்கிறதே! ராமு தானே?"

"ஆமாம்," வேம்புப் பாட்டி.

"எங்கே போகின்ருய்? ராமு"

"எங்கே போகிறேன் என்று எனக்குத் தெரியாது; நீங்கள் எங்கே போகின்றீர்கள்?

"வைகுந்தம் போகின்றேன்" நீயும் என்னுேடு வருகின்ருயா, நீயும் வைகுந்தம் போகிருயா?"

"அதுவும் எனக்குத் தெரியாது." ஏதோ ஒரு சக்தி என்னை இழுத்துச்செல்லுகின்றது. அதைத் தான் நான் உணர்கின்றேன்."

"நீ கோயில் கைங்கரியம் ஏதாவது செய்திருக்கிருயோ?"

"இல்லை எனக்கு அவகாசம் இல்லை"

"பின்பு என்னசெய்தாய்?"

'ஏழை மக்களிடையே என் வாழ்நாளைக் கழித்தேன். குஷ்டரோகிகளின் இன்னல்களைக் கண்டு மனம் நைந்தேன். அவர்களுக்காக உழைத்தேன்.'

'எதற்காக உழைத்தாய்?'

'உழைப்புக்காகவே உழைத்தேன்.'

'பரமபதம் வேண்டாமா?

'பரமபத இச்சையும் ஒரு வியாபாரமாகுமே, செய்த வேலைக்கு அது கூலியா?'

"என்னமோ புரியாமல் பேசுகின்ருனே, இந்தக் கர்ம வியாதிக்காரனுக்கா மோக்ஷம் கிடைக்கப் போகிறது" என்று எண்ணிற்று வேம்பு அம்மாவின் ஆவி,

நான் கோவிலுக்கு என் வாழ்க்கை முழுவதும் அர்ப்பணம் செய்துவிட்டேன். பரமபதத்திற்குப் போகிறேன். என்று விரைவாய் அந்த ஆவி நீள் வானத்தில் பாய்ந்தது.

ஆனல் ஆவலாய் விரைந்து போனவளுக்கு பிரம வாசல் சாத்திக் கிடந்தது.

வேம்பு அம்மா ஆவி அதைத் தட்டிற்று.

'யார்?' என்ற குரல் எழுந்தது.

நான் தான் வேம்பு அம்மா. தங்கள் அடியாள்.

'உன்னை எனக்குத் தெரியவில்லையே எதற்காக வந்தாய்?'

'மோட்சம் அடைய'

"என்னைத் தெரிந்து கொண்டாயா?

"அன்று மழையிலே வீராயி உருவம் எடுத்து வந்தேனே, என்னை அடித்துத் துரத்திவிட்டாயே, என் குழந்தைகளுக்குச் செய்கிற சேவை எனக்குச் செய்கிற சேவையாகும். என் குழந்தைகளைப் புறக்கணித்தால் என்னைப் புறக்கணித்ததாகும். நிலை நின்ற என்கோயிலுக்குத் திருப்பணி செய்தாய். நடமாடும் என்உருவத்தை மறந்தாய்" இதைக் கேட்டதும், வேம்பு அம்மாவின் ஆவி திகைத்து நின்றது, கண்ணீர் விடவும் ஆரம்பித்தது.

'ஏன் அழுகின்ருய் வேம்பு? உன் தியாகத்தை நான் அறியாமலில்லை. நடமாடும் கோயிலுக்குச் செய். என் வாயிற்கதவுதானே திறக்கும்' என்ற குரல் கேட்டது.

வேம்பு அம்மாவின் ஆவி திரும்பிவிட்டது. ராமுவின் ஆவி போய்க்கொண்டிருந்தது. வைகுந்த நீள் வாசல் திறந்து கிடந்தது. எங்கும் தங்கத் தோரணங்கள் தொங்கின. பூர்ண கும்பங்கள் பொலிந்தன. கற்பக மலரின் மணம் எங்கும் வீசிற்று. அடியார்கள் அங்கேவந்து ராமுவை வரவேற்றனர். தேவ துந்துபிகள் முழங்கின. சாம கானம் கேட்டது. ராமுவின் ஆவி திகைத்து நின்றது.

"ஏன் நிற்கிருய் திகைத்து? நீதான் என்னுடைய உண்மையான பக்தன்" என்ற குரல் பிறந்தது.

வருஷந்தோறும் வேம்பு அம்மாளுக்கு இங்கே பூமியில் திருவிழா நடக்கும். அவள் சிலையில்லாத கோயில் கிடையாது, ராமு இருந்த இடம் தெரியவில்லை; ஆனல் அமரநாட்டில் அவன் நித்திய ஸூரிகளோடு வீற்றிருக்கிருன். இருந்தால் என்ன? அவன் மனம் இன்னல் நிறைந்த மண்ணை நாடுகின்றது. என்று கதையை முடித்து இதற்கென்ன சொல்லுகிறீர்கள் என்று என் நண்பர் என்னைக் கேட்டார்.

"சொல்லுவதற்கென்ன இருக்கிறது? நமக்கென்ன தெரியும்? அவன் அறிவன்."

செம்மண் கோலமிட்டிருந்த வாசலுக்கு எதிரே வாடகை மோட்டார் வந்து நின்றது. உடனே அந்தச் சூழ்நிலையிலே பரபரப்பு. அக்கம் பக்க வீடுகளின் வாசலிலும் சலசலப்பு. பிரசன்ன வதனமுடன் ரங்கநாதன் மோட்டாரிலிருந்து இறங்கினான். வண்டியின் கதவைத் திறந்தபடியே நின்று, இளம் புது மனைவியும் இறங்க வழி செய்தான். மென் முறுவலும் மருட்சியும் தவழும் முகத்தினளாக அவள் இறங்கினாள். முதிர்ந்த சுமங்கலியான ஒரு அம்மாள் ஆலத்தி சுற்றிக் கொட்ட, தம்பதிகள் வலது காலை வீட்டு வாசற்படியிலே இருத்தி ஏறி வீட்டுள்ளே நடந்து வர, பல குரல்கள் கலகலக்க, மருமகள் மனைபுகும் ஆனந்தக் காட்சி கண்டு சீதம்மாள் அகமும் முகமும் மலர்ந்தாள். "வாம்மா" என்று அழைத்து, தம்பதிகளின் நமஸ்காரத்தைப் ஏற்றுக்கொள்ளும் பொழுது, மன நிறைவினால் ஆசிமொழி புகல இயலவில்லை! சற்றுச் சமாளித்துக் கொண்டதும், அருகிலிருந்தவர்களைப் பார்த்து, "வந்துவிட்டாள், எங்கள் தங்கம்!" என்று பெருமையாகச் சொன்னாள்.



# போன பின்னும்

"விந்தியா"

"அவள் பேர் முத்து, அம்மா! முத்துலக்ஷ்மி! என்று உற்சாகமாகக் கூறிவிட்டு, தலைகவிழ முயற்சித்த மனைவியைப் பார்த்துச் சிரித்தான் ரங்கநாதன்.

சீதம்மாள் கனிவாகச் சிரித்தாள். "எனக்கு அவள் தங்கம்தான்! எங்கள் நாளிலே முத்துக்கும் வைரக்கல்லுக்கும் மதிப்புக் கிடையாது, தங்கந்தான் உயர்த்தி! உனக்கு அவள் முத்துவாகவே இருக்கட்டும், நீ இந்தநாள் பிள்ளை! எனக்கு அவள் தங்கம், லக்ஷ்மி!" என்று சொல்லி முடித்த அன்னையை ரங்கநாதன் உற்றுப் பார்த்துவிட்டு, உடனே தன் பார்வையை மாற்றிக்கொண்டான். தாய் பேசியதன் உட்கருத்து அவனுக்கு விளங்கியது! இங்கிதமும் இனிமையும் இழையும் ஒரு சிறுபேச்சு மூலம், மன நிறைவை வெளிப்படுத்திவிட்டாள், அருமை அம்மா! ரங்கநாதன் அகங் குழைந்தான்.



முத்துலக்ஷ்மிக்கு, திருமணத்தின்பொழுது, அவள் பெற்றோர் தங்க நகைகளைத்தான் போட்டார்கள். ஒட்டியாணமும், வங்கி நாகொத்தும் வளையலும் சங்கிலியும் கொடுத்துச் சீர் செய்தார்கள். "பளிச்சென்று முகத்திற்குச் சோபிதமாக வைரத்தோடும், மூக்குத்தியும் வேண்டாமோ? மற்ற நகைகளைப் போட்டுக்கொண்டாலும் போட்டுக்கொள்ளாவிட்டாலும் ஒன்றுதான்! சீர் ரொம்ப சீராக இருக்கு போ!" என்று சீதம்மாளிடம் பலபேர் அபிப்பிராயம் கூறினர்.

"சீர் விஷயமெல்லாம் நான் ஒன்றும் சொல்லவேமாட்டேனம்மா! அவர்களோ கல்லுக் கல்லாகத் தங்க நகை போட்டாச்சு. ஒன்றுமில்லாமல் செய்யவில்லை. பரம்பரையாக வந்த நல்ல நகைகள்தான் சீர் செய்து இருக்கிறார்கள்! அனாவசியமாகச் சொல்லக்கூடாது. நான் வாங்கிப் போடுகிறேன் தோடும் மூக்குத்தியும் அவசியம் என்று

தோன்றினால்!'' என்று சீதம்மாள் சமாதானங் கூறினாள்.

"நன்றாயிருக்குபோ உன் நடுக்கம்!'' என்று ஏச்சு வந்தது உடனே. சீதம்மாள் கலங்கவில்லை. இப்பொழுது, மருமகள் மனைபுகும்பொழுதும், தன்னுடைய குறையற்ற மனதையே வெளியிட்டுப் பேசிவிட்டாள் அல்லவா?

ஊராருக்கும் சீதம்மாவுக்கும் இணைவு எப்போதுமே சரியில்லை. ஊர், ஒரு சின்னஞ்சிறு கிராமம்! எந்தச் சிறு விஷயமும், பல விளக்கங்களுடன் அமர்க்களப்படும். சிற்சில காரணங்களினால் ரங்கநாதனின் திருமணம் நடக்கக் காலம் தவக்கமாயிற்று. தவிர்க்கமுடியாத அந்தத் தடைகளை எல்லாம்பற்றித் தமுக்கடிக்க விரும்பாதவளாய்ச் சீதம்மாள், வாய்பூட்டுப் போட்டுக்கொண்டாள்.



"நடக்கிறபோது நடக்கட்டுமேயம்மா! இப்போதுதான் பிள்ளையும் கிராமத்தோடு வந்திருக்கிறான். கொஞ்சநாளைக்கு என் கைச் சாப்பாடு சாப்பிடட்டுமே!'' என்று சொல்லிச் சிரித்துப் பூசி விடுவாள், ஊராருக்கேற்றபடி சள சளவென்று பேசி, பிறர் விஷயங்களையும் சொந்த விஷயங்களையும் அலசிவிடும் வழக்கமே சீதம்மாவுக்குக் கிடையாது. அது அவள் இயல்பு?

ஆனால் பிறரோ கூசாமல் அவளை விமரிசனம் செய்தனர். "நாட்டுப்பெண் வந்தால் பிள்ளையிடம் உரிமை பறிபோய் விடுமாம்! ஒரே பிள்ளையாச்சு! மருமகளை எப்படிச் சந்தோஷமாக வரவேற்பாள்! இப்போதே கவலையாம். அவள் வந்தபிறகு? ......'' என்று கற்பனையைப் பலவாறு வளர்த்தி விளம்பினர். முத்துலக்ஷ்மியைத் "தங்கம்'' என்று அருமை பெருமையுடன் ஏற்றபொழுது அவர்களுடைய விமரிசனம் விசை பிசகியது. பேச்சு திசை திரும்பிவிட்டது. "பார்த்தாயா, புது நாட்டுப் பெண்மேல் கரிசனம் வழிகிறது! சம்பந்திகளுக்கும் பரிகிருள்! நம் பேச்சு எடுபடவில்லை! அப்புறம்தானே தெரியும். இடங்கொடுத்து அவதிப்படும்பொழுது!'' என்றுதான் சவால்விடுத்தனர்!

இன்ப இல்லறம் என்பதை உள்ளது உள்ளபடி உணரும் பேறு ரங்கநாதனுக்குக் கிட்டியது. தாயும் தாரமும் தனக்கு இன்ப வாழ்வு தருவதை ஏற்றுக்கொண்டவாறே, கடவுளை நன்றியோடு போற்றினான். தன்னைப் பெற்றவளும் தான் ஏற்றவளும் கொண்டுள்ள ஒற்றுமையைப் பெருமையுடன் ரசித்தான், ஆஹா, தினந்தோறும்

வீட்டிலே எத்தகைய ஆனந்தக் காட்சிகளைக் கண்டான்!

"நான் சமைக்கிறேனே, அம்மா!" என்பாள், அவன் மனைவி.

"நன்றாருக்கு! சுற்றுவேலை எட்டாள் வேலை! நீ அதைச் செய்துவிடுகிறாயே! ஏற்றி இறக்கிச் சமைக்க எனக்குக் கஷ்டமா?" என்று சொல்வாள் அவன் தாய்.

"இன்றைக்கு மட்டுமாவது சமைக்கிறேன்!" என்று கொஞ்சுவதுபோலக் கேட்பாள் லக்ஷ்மி.

"உன் மாதிரி சிறிசுகளின் மடி எனக்குப் போதாது, தெரியுமா? குழந்தை பிறந்த பிறகு தான் உன்மடி எனக்கு உதவும்!" என்று சொல்லி விடுவாள் சீதம்மாள்.

குழந்தை என்னும் சொல்லினாலோ, அல்லது மாமியின் அன்புக் கட்டளையினாலோ, லக்ஷ்மி யின் முகம் நாணிக் கவிழ்ந்துவிடும். அவளுடைய கண்களிலே சிரிப்புக் கொழிக்கும். இதழ்களிலே இன்பம் சுழிக்கும்.

'லக்ஷ்மி!' என்னும் அன்பழைப்புச் சொல்லிலே நிலவ, பரிவும் ஆசையும் செயலிலே பரவ, சீதம் மாள் எப்பொழுதும் போலச் சுறுசுறுப்பாக வீட் டைவளைய வந்தாள். எளிய பணிகளையும், ரங்க நாதனுக்குத் தேவையான சிசுருஷைகளையும் மாற் றுப்பெண்ணுக்குக் கொடுத்துவிட்டாள். இளந் தம்பதிகளின், மனப்போக்குக்கு இழையப் பழ கினாள்.

உலக வழக்கத்திற்கு மாறாக, அதிகாரஞ் செய் யாமல் அன்பு செய்யும் மாமியாரைப் பெற்று விட்டதிலே, முத்துலக்ஷ்மிக்கும் பெருமை, பெரு மித உவகை. அவளை யொத்த வயதினர், உனக் கென்ன? மாமியார் மாமியாராய் லட்சணமாய் இருக்காமல் தாங்குகிறார்!" என்று கூறும் பொழுது அவள் கொண்ட மகிழ்ச்சிக்கு ஈடே யில்லை. மாமிக்குகந்த வேலைகளைச் செய்து உதவு தலிலும், கணவனின் ஆசைக்குகந்த பணிகளைச் செய்து மகிழ்வதிலும், பலவித தையல் வேலைகள் செய்வதிலும் அவள் மன நிறைவுற்றாள்.

*  *  *

சீதம்மாள் பாட்டியானாள். முதலில் பேரன் பிறந்தான். பிறகு பேத்தி பிறந்தாள். ஆனால் சீதம்மாள் பாட்டியாகி முடங்கவில்லை. தெருத்திண்ணையிலே பேரன் பேத்தியைக் கொஞ் சிக் கொண்டு குந்தியிருக்கவில்லை. கருத்துங் கவ னமும் கொண்டு தாய்மை எய்திய லக்ஷ்மியை யும் குழந்தைகளையும் அணைத்தபடியே வீட்டு நிர்வாகம் செய்து வந்தாள், அந்த ரீதியிலே தான் அவள் அன்பு சென்றது, 'நான் சமைக் கிறேன், அம்மா! எத்தனை நாள் நீங்களே செய் வேள்! இனி என் மடி உதவுமே" என்று முத்து லக்ஷ்மி சிரித்துக் கெஞ்சுவாள். சிரிக்காமலும் கெஞ்சுவாள். சற்றுப் பிடிவாதமாகவே கேட் பாள்.

"வேண்டாம், லக்ஷ்மி! இந்த நாளிலே என் னென்னமோ வியாதிகள்; இரண்டு குழந்தைகள் பிறந்ததும் உடம்பு கெட்டுவிடுகிறதே! நான் சும்மா இருப்பானேன்? நீ எல்லாம் செய்வா னேன்? எனக்குத் திடங்குன்றிப் போனால், இருக்கவே இருக்கிறதே! உனக்குத்தான் விழுப்பு வேலை மோழி கிடக்கிறதே போதாதா?" என்று தன் வழக்கமான பதிலை அளிப்பாள், சீதம்மாள்.

"நீங்களே தினமும் சமைத்துப் பரிமாறி எல் லாம் செய்தால் எனக்கு வெட்கமாய் யிருக்கே, அம்மா!" என்று வாது செய்யத் தயங்கவில்லை முத்துலக்ஷ்மி.

"சுற்றுவேலை, மடிவேலை, சகலமும் உன்னண் டை விட்டுவிட்டு வெட்டியாய் உட்கார எனக்கும் வெட்கம்தான், தெரிந்ததா?" என்று சிரித்த படியே பிரதிவாதம் செய்வாள் சீதம்மாள்.

அன்புப் பெருக்கினாலே அன்னையும் மனைவியும் செய்யும் இத்தகைய வாக்கு வாதங்களைக் கண்டு ரங்கநாதன் மனசு குளிர்ந்தது. குழந்தைகளின் சிறு குறும்புகளும், இவர்களின் அன்புத் தர்க்கங் களும் சேர்ந்து, இல்லத்தின் கலகலப்புப் பெரு கியது.

அன்று லக்ஷ்மியின் சமையல். பக்குவம் சொல் லக்கூடச் சீதம்மாள் அகத்தில் இல்லை. உறவினர் ஒருவர் வீட்டிலே பிரசவ சமயம் உதவி செய்யச் சீதம்மாள் வெளியூர் போய்விட்டாள். கதை களிலே எல்லாம், ஒரு அத்தையம்மாள் சமயத் திற்கு உதவியாக அல்லது ஊறாக வருவது உண்டு அல்லவா? அப்படியே ரங்கநாதனின் தாயாரும், அத்தை உறவில் போகும்படியா யிற்று. அவன்கூடத் தன் தாயாரிடம் வேடிக்கை யாக அதைச் சொன்னான். சீதம்மாள் சிரித்து, "கதைகளைப் படித்துவிட்டுத் தான் நான் ஒரு அத்தை உறவு இருப்பது நினைவிற்கு வந்து கூப் பிடுகிறார்கள் போலும்! போய்விட்டு வருகிறேன் —விரைவில் வருகிறேன்!" என்று விடைபெற் றுச் சென்றாள். லக்ஷ்மி தன்னுடைய சமையல் திறமையைக் காட்டும்படியாயிற்று.

உணவைச் சுவையாகச் சமைத்தாள். பணிக்கா கப் படைத்தாள். உற்சாகமாக எல்லாம் கவ னித்தாள். "பலே ஜோராய் அமைந்துவிட்டதே உன் சமையல்!" என்று பாராட்டினான் ரங்க நாதன். சிரித்துவிட்டு மென்று விழுங்கினாள் லக்ஷ்மி.

"ஏன், வேடிக்கை செய்கிறதாக நினைக்கிறாயா என்ன? நிஜமாகவே ஜோர்தான் போ!" என்று ரங்கநாதன் மீண்டும் சொன்னான்.

"நான் இனிமேல் என்ன செய்யப்போகிறேன் தெரியுமோ?" என்று கேட்டாள் லக்ஷ்மி!

"என்ன?"

"சொல்லட்டுமா? இனிமேல் அம்மாவைச் சமைக்க விடமாட்டேன். நானே மடிகட்டிக் கொள்வேன்; எத்தனை நாளைக்குத்தான் நானும் சின்னவள்? இரண்டு குழந்தையாச்சு. இன்னும் மாமியார் சமைத்துப்போட நான் உட்கார்ந்து சாப்பிடுவதா? சாப்பிட்டாலும் சாப்பாடு உடம்பிலே ஒட்டாது போலிருக்கு எனக்கு?" என்று சொன்னாள் லக்ஷ்மி! அனலிலிட்ட வெற்றுப் பாத்திரம் போல முகம் சிவந்து கிடந்தது!

ரங்கநாதனுக்குச் சிரிப்பு வந்தது. "ஓடிக்கொண்டே சாப்பிட உனக்கு ஆசையானால், இத்தனை வருஷம் ஓடிச் சாப்பிட்ட அம்மா நின்று கொண்டாவது சாப்பிடணும் என்று ஆசைப்பட மாட்டாளா? ஓரேயடியாய் உட்கார்ந்து சாப்பிடுவாளா?" என்று கேட்டான்.

"கேலி கிடக்கட்டுமே! கேளுங்கள்; உங்களுக்குத் தெரியாது, எத்தனைபேர் என்ன சொல்கிறார்கள்? மாமியாரைக் காரியம் வாங்குகிறேன் என்று பெரியவர்கள் சின்னவர்கள் எல்லாருக்கும் என்னைப்பற்றி ஏளனம்! என்னைமட்டுமா சொல்கிறார்கள்? அம்மாவையும்தான் அசடாக்குகிறார்கள்! எப்படியெப்படி இருக்கணுமோ அப்படி இருந்துவிட்டால் வம்பு ஏது? அதற்குச் சொல்கிறேன்!" என்று கம்பலையும் வீம்புமாக லக்ஷ்மி பேசிமுடித்தபோது ரங்கநாதன் சற்றுத் திகைத்தான். "மாமியாரும் நாட்டுப் பெண்ணும் ஒற்றுமையாய் இருப்பதை அவர்கள் பார்த்துப் பொறுமைப்படாமலிருக்க முடியவில்லை!" என்று அவன் சொன்னதை லக்ஷ்மி ஏற்கவில்லை.

"பொறுமையோ, வம்போ? அவர்கள் பேச்சிலும் நியாயம் இருக்கிறதே! பிறந்தகத்திலே சலுகையால் இருந்தால் பொருத்தம்! புக்ககத்திலே இப்படியா? இடத்திற்குத் தகுந்தாற்போல் இருந்தால்தானே எனக்கும் நன்றாயிருக்கும்? பட்டணவாசமாயிருந்தாலும், சினிமா டிராமா என்று வெளியில் பேடா கிளம்பினால், வீட்டுக்கவலைகள் வேண்டாமே என்று இருக்கலாம்! இங்கே எங்கே போக நான்? அக்கம்பக்கமும் என்னிடம் ஒரு தினுசாக இருந்தால் போகப்பிடிக்கிறதா?"

லக்ஷ்மியின் இந்த வினா ரங்கநாதனைச் சிந்தனை செய்யத் தூண்டியது. அவள் கேட்டதும் சரி. ஊருக்கு ஒத்து வாழவேணுமென்கிறாள். அவனுடைய தாயார்தான் தனிமனப் போக்குடையவள். முன்பும் இப்பொழுதும் நாலுபேரின் பேச்சுக்கு இலக்காகிவிட்டாள். லக்ஷ்மிக்கு, வீடும், வெளியுலகமும் மெச்ச வாழ்க்கை நடத்த ஆசை. அவளுடைய ஆசை, மாமியாரின் சேவை! இரண்டு குழந்தைகளின் அன்னை என்னும் நிலையில் இல்லத்திலே வேருன்றி, சூழ்நிலையிலே ஆர்வம் படரவிட்டிருக்கிறாள். கொடிக்குக் காய் பாரமில்லை. லக்ஷ்மிக்கும் பொறுப்பு ஏற்கக் கஷ்டமாயில்லை. ஆசையாகவே இருக்கிறது!

அன்னை ஊரிலிருந்து திரும்பப் போகும் செய்தி வந்துவிட்டதுமே. தன் மனைவியின் சங்கற்பம் நிறைவேறாது என்று ரங்கநாதன் ஊகித்தான். ஏனெனில் சீதம்மாள் அத்தகைய கடிதம் போட்டு ஆர்வத்தை அதிலே தீட்டியிருந்தாள். தாயின் ஆர்வக்கனலே உணவு சமைத்துவிடுமோ என்னும்படி கடிதம் தொனித்தது!

சீதம்மாள் வந்தாள். வந்ததும் வராததுமாக என்ன சொன்னாள்! "அம்மாடி! நம்ம விறகடுப்பிலே சமைப்போமா என்று தோன்றிவிட்டது எனக்கு! அங்கே விறகே கண்ணில் படவில்லை. கல்கரி அடுப்புத்தான்!" என்று அங்கலாய்த்துவிட்டு, மங்களகரமாகத் துலங்கும் கோலமிட்ட இரட்டை யடுப்பைப் பார்த்தாள். மண்ணடுப்பு, குழந்தைபோலத் தோற்றமளித்தது! அன்புடன் பார்த்து ஆறுதலடைந்தாள்!

"ஊரிலிருந்து வந்த அலுப்புத் தீரட்டுமே, அம்மா! இரண்டு நாள் நான் சமைக்கிறதைச் சாப்பிடுங்களேன்!" என்று லக்ஷ்மி, கிணற்றடியில் போய், குடத்தைப் பிடுங்க முயன்றாள்!

"எனக்கு என்ன அலுப்பு? அங்கே பொறுப்புக்கும் அலுப்புக்கும் ஒன்றுமில்லை. ஆள் அம்பு இருந்தது. நான் ஒரு பெரிய துணைக்கு இருந்தேன். நீதான் ஒண்டியாக ஒருமாதத்துக்குமேல் எல்லாம் சமாளித்திருக்கிறாய். உடம்பு இளைச்சுக்கிடக்கு. ஓய்வு உனக்குத்தான் அவசியம்!" என்று பதிலிறுத்த சீதம்மாள், கிணற்றடியில் மங்குமங்கு என்று நீர்இறைத்துக் குளித்துவிட்டுச் சமையல் செய்யத் தொடங்கிவிட்டாள். லக்ஷ்மியின் உடல் வாட்டம், மசக்கை நோய்த்துவக்கம் தான்! ஆனால் அவளுடைய முகவாட்டமும் அகவாட்டமும் எதனாலே..............? ரங்கநாதனுக்கு லக்ஷ்மியின் ஆசை தெரியும். அன்னையின் அக்கரையும் தெரியும். அன்னைக்கு ஓய்வு தர மனைவி விரும்புகிறாள். மனைவிக்குச் சிரமம் தர அன்னை விரும்பவில்லை. இந்த நிலைமை குடும்பத்திலே ஓங்கியிருக்கும் அன்பின் கொடிக்கம்பம் அன்றோ?

இப்படித்தான், பாவம், அவன் நினைப்பு! கம்பத்தின் உச்சிக்குக் கொடி பாய்வது நொடிதான்! ஆனால் கொடி இறக்கம் மெல்லமெல்லத்தானே?

லக்ஷ்மி, அன்றும் அதற்குப் பிறகும் வாது செய்வதை விட்டுவிட்டாள். மாமியாரின் இயல்பை உணர்ந்துகொண்டுவிட்டாள் என்றால் முகத்திலே ஏன் அமைதி இல்லை? கண்களின் குறுகுறுப்புக் குன்றிவிட்டது! அவள் கணவனைப் பார்த்த பார்வையிலே மலர்ச்சியே இல்லை? மசக்கை நோயின் கூறுமட்டும் அல்லவே இது? சில சமயம் கண்கள் நீர்திரை போடுகின்றன. முகம் கன்றிக் கிடக்கிறது சில சமயம். பேச்சிலே இன்பம் இல்லை, சிரிப்பிலே உவகை இல்லை!

சீதம்மாளின் பிறவி விசேஷம் அப்படி என்று தான் சொல்ல வேண்டும். அவளுடைய நல்ல தனம் எப்பொழுதுமே மதிப்புக் குறைந்துதான் இருந்தது. உரிய பாராட்டுப் பெறவில்லை. ரங்க நாதனுக்கும் தெரியும்!

ரங்கநாதனின் பிள்ளைக்கு அக்ஷர அப்பியாசம் நடந்தது. லக்ஷ்மியின் பிறந்தகத்தார் சீருடன் வந்து, நாலு நாள் இருந்து சென்றனர். லக்ஷ்மியை மகப்பேறுக்கு அனுப்பும்படி சொல்லிச் சென்றனர். மூன்றும் மகப்பேறு புகல் வீட்டிலே நடப்பது சம்பிரதாயம் என்று சீதம்மாள் சொன்னதற்கு அவர்கள் சந்தோஷப்படவில்லை! சம்பந்தி பிகு எதற்கு என்று கேட்டனர்! வீட்டிலே தாயும் தாரமும் அன்புத் தர்க்கங்கள் செய்துவந்த பொழுதெல்லாம் மகிழ்ந்து வந்தவன் ரங்கநாதன். அந்த அன்புப் பேச்சுக்கள் அடங்கிவிட்டதை நாளடைவிலே கண்டான். வறட்சியான, இன்பமற்ற பேச்சுக்கள் அவ்வப்பொழுது எழுவதைக் கண்டான். ஒருநாள் வயல்களிலிருந்து திரும்பி வந்தபோது யாரோ ஒரு பண்ணையாளைப்பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தான். "ஒரு பொய் சொல்லிவிட்டான் முதலில்! அது பல பொய்கள் சொல்லச் சொல்லிவிட்டது அவனை!" என்று முடித்தான், சிரித்து,

"அப்படித்தான் ஒவ்வொன்றும்! வெற்றிலை வெறுமனே வருகிறதே நமக்கு! அதனால் வீடு வீடாகப் போய், கட்டுக் கட்டாகக் கொடுக்கத் தோன்றுகிறது நமக்கு. ஆனால் பாக்கு வைக்காமல் வெற்றிலை தரக்கூடாது! பாக்குடன் கொடுக்கிறோம்! பாக்குக்கு என்ன விலை கொடுத்து வாங்குகிறோம், நமக்கு நினைவிருப்பதில்லை. ஒரு கமுகு மரத் தோப்பும் வேணும் அதற்கு?" என்று லக்ஷ்மி, சிரிப்பும் ஆவேசமும் இழையப் பதிலளித்தாள்!

அருகிருந்த சீதம்மாளும் சற்றுத் துணுக்குற்றுத் தான் போனாள்! "நாலு பேருக்கு வெற்றிலை பாக்குத் தருவது நல்ல காரியந்தானே லக்ஷ்மி?... எதற்கு நான் பேசவேண்டும்?...... ஒரு வார்த்தை நாலு வார்த்தைக்கு இழுக்கும்!" என்று கூறி விட்டுக் கையில் எண்ணெய்க் கிண்ணமுடன் கோயிலுக்குக் கிளம்பிவிட்டாள்.

"பேஷ், இப்படித்தான் சம்பாஷணைக் கோவை இருக்கவேண்டும்! ஒரு பொய், நாலு பொய்—என்று நான் சொன்னதற்கேற்றபடி இரண்டு பேரும் பேசினீர்களே!" என்று வெளிப்படச் சிரித்துக் கூறிவிட்டு, உட்புகையும் வருத்தமுடன் ரங்கநாதன் அப்பால் போனான்! லக்ஷ்மிக்கு என்ன கழிவிரக்கம் ஏற்பட்டதோ? மெல்லக் கணவனருகு வந்தாள். "வெற்றிலை பாக்குத் தருவது சுபகாரியம்தான். அதைத் தடைகூறும் எண்ணமில்லை எனக்கு. மற்ற விஷயங்கள் எத்தனை இல்லை இதுபோல? விறகு நமக்கு வெறுமனே வருகிறது; ஆனால் அதைக்கொண்டு வருகிறதற்கு வண்டி வாடகை இரண்டு ரூபாய்! கிழாத்து மாமிக்கு, பாவம் ஏழை என்று விறகு ஒருவண்டி கொண்டுபோய்ப் போட்டதே போன வாரம்? அதற்கு வாடகை மட்டுமாவது அந்தம்மாள் தரக்கூடாதா? நாம்தான் கொடுத்தோம்! இந்தச் செலவுகள்போல எத்தனையோ? நமக்குக்கூட இதிலெல்லாம் கவனம் இல்லை! பிறத்தியார் கவனித்து அங்கலாய்க்கிறார்கள்? எதிராளகத்து அம்மாள்தான் எத்தனை சூட்சுமம்? என்னைக் கேட்டாள், பதில் சொல்லத் தெரியவில்லை எனக்கு?" என்று லக்ஷ்மி மனதைத் திறந்துகொட்டிப் பேசிவிட்டாள்.

"அம்மாவுக்கு அக்கறையில்லாததா, எதிராளகத்து மாமிக்கு?" என்று ரங்கநாதன் முணுமுணுத்தான்.

"அதையும் மாமி சொல்லிக்கொண்டாள்! பிறகு உன் மாமியாருக்கு ஒரே பிள்ளை. பணக்குறியில்லாமல் பழக்கம். உனக்கு அப்படி முடியுமா? என்றும் என்னைக் கேட்கிறாளே!" என்று லக்ஷ்மி சொல்லிவிட்டு, மனப்பாரம் இறக்கிவிட்ட ஆறுதலுடன் அங்கிருந்து அகன்றாள்; சுமை ரங்கநாதன் மனதிலே ஏறியது. கொஞ்ச நாட்களுக்குள் மற்றொரு புதுமையான நிகழ்ச்சி வீட்டிலே! சீதம்மாள் சுரம் வந்து படுத்தாள்! தாய்க்கும் மன அதிர்ச்சியினால்தானோ உடல் நலிவு என்ற ஐயம் ரங்கநாதனைப் பற்றிக்கொண்டது.

லக்ஷ்மி சமையலறைப் பொறுப்பு ஏற்றாள். பொறுப்பு ஏற்று ஒழுங்குடன் சகலமும் தன் ஒருத்தியால் செய்ய இயலும் என்பதை மாமியாருக்கு உணர்த்தும் சமயம் இதுவே என்று நினைத்தாள்! கஷ்டமான பல அலுவல்களையும் இழுத்துப்போட்டுக்கொண்டு ஓடியாடிச் செய்தாள். வெயில் வீண்போகிறது என்று வடகம் இட்டாள், வற்றல் போட்டாள், மாடிக்கும் சமையற்கட்டுக்கும் கணக்கற்ற தடவைகள் ஏறி இறங்கினாள். அதன் பலன்? சீதம்மாள் சுரம் விட்டு எழும் சமயம், லக்ஷ்மிக்குக் கருச் சிதைவு! அதன் பலன்? சுரம்விட்ட உடம்புடனே சீதம்மாள் சமையலறைப் புகுந்தாள். லக்ஷ்மியின் உதவிகள் இல்லாமல் வேலைகளைச் செய்யும்படியாயிற்று.

இந்தச் சமயத்தில்தான் ரங்கநாதன் நிமிர்ந்து கொண்டு கவனித்தான். மறந்திருந்த கடமையை நினைவு கூர்ந்தான்.

"ஓய்வு எடுத்துக்கொள் அம்மா! நாட்டுப் பெண் வந்துவிட்டபிறகு ஏன் உனக்கு வேலை?" என்று ஒருநாளாவது வேடிக்கையாகக்கூட அவன் தன் தாயைக் கேட்டதுண்டா? இல்லையே? என்னதான் லக்ஷ்மி சொன்னாலும், பிள்ளையின் வாய்மொழி வரவில்லையே என்று தாயார் எண்ணியிருப்பாளோ? மனைவியின் மனக் குறை தீரவும், அன்னையின் வயதுக்கேற்ற, ஸ்தானத்திற்கேற்ற ஓய்வு கிடைக்கவும், அவனுடைய அன்புக்கட்டளை தான் தேவையாக இருந்ததோ? அதிகாரஞ்செய்

யும் மாமியையும், வேலை வாங்கும் மாமியையும் மருமகள் வெறுப்பாள் என்று, தாயார் ஓய்வு எடுப்பதை ஊக்காமல் மோனமாக இருந்தது ரங்கநாதனின் தவறுதானே?

அன்னையிடம் சொன்னான். "காய்ச்சல் என்று படுக்காதவள் நீ, படுத்துவிட்டாய், அம்மா! இனி ஓய்வு வேணும் உனக்கு. சிறுவயது முதல் உழைத்தவள். உனக்கு இதுநாள் வரை திடமிருக்கிறது. அவளுக்கும் வேலை பழகி உடல் வலிவு பெற வேண்டுமல்லவா?" என்று சொன்னான்.

"பிழைத்துக் கிடக்கட்டும் அப்படியே செய்தால் போச்சு!" என்று சீதம்மாள் சொல்லிவிட்டாள். தன் வாய்மொழி முன்னதாகவே வந்திருக்கக்கூடாதா என்று ரங்கநாதன் தன்னையே நொந்தான்!

சீதம்மாள் ஒதுங்கிக்கொண்டாள். லக்ஷ்மியின் உடல் தேறியதுமே, விலகிக்கொண்டுவிட்டாள். ஆனால் கொஞ்ச நாட்கள் கழித்து, மீண்டும் சமயலறைப் பொறுப்புக்காக வாதாடிப் பெற்றாள். "பித்துப் பிடித்தாற்போல் இருக்கு எனக்கு!" என்று காரணங் கூறினாள்!

லக்ஷ்மி நீர் தளும்பும் விழிகளுடன் மீண்டும் காட்சி யளித்தாள்!

"சரி, நீயே கவனி எல்லாம்!" என்று பின் வாங்கினாள் சீதம்மாள் மறுபடியும்! ஆனால் வாசலுக்கும் புழக்கடைக்குமாக ஆயிரம் உலாத்து உலாத்தினாள். அக்கம் பக்கம் போய்வந்தாலும் வம்புக்கு நிற்காமல் நொடியில் திரும்பிவிட்டாள். "எப்படியோ இருக்கு!" என்று சொல்லிக்கொண்டு வீட்டைச் சுற்றினாள். ரங்கநாதன் வியந்தான். காரியம் செய்யப் பழகணும் என்பார்களே.........அம்மா; ஓய்வாக இருக்க என்ன பாடுபடவேண்டியிருக்கிறதே!

இன்னொரு கண்ணராவி; குறிப்பில்லாமல் சுற்றிச் சுற்றி வந்ததினால் அங்கங்கு துணிபட்டது. எச்சில் பட்டது என்று விழுப்புப் பட்டுக்கொண்டு நாளுக்கு நாலுமுறைகள் ஸ்நானம் செய்தாள் சீதம்மாள். விறகுக் குவியலைச் சீர்படுத்தப் போய், கந்தல் கிழிசலைப்பட்டுக் கொண்டு வந்தாள். இப்படிப் பல தடவைகள் ஈரப்புடவை ஒன்று உலருமுன், மாற்றுப்புடவை ஈரமாகும். அதையே உடுத்துவாள். இதன் பலன் தானோ என்னவோ, மீண்டும் சுரம் வந்தது. அதற்குப் பிறகு அடிக்கடி சுரம் வரலாயிற்று. ஓய்விலே இருந்துங்கூட உடல் தளர்ந்தது! அவ்வப்பொழுது பக்ஷணம் பணியாரம், அப்பளம் ஊறுகாய் முதலிய வேலைகள் சீதம்மாளைச் சமையலறைக்கு அழைக்கும். வருவாள். சமையல் வேலையும் சில சமயம் உண்டு. ஆனால் சீதம்மாளின் சுறுசுறுப்பு ஓய்ந்துவிட்டது! லக்ஷ்மிக்கும், கருச்சிதைவு ஏற்பட்ட பிறகு வயிற்றில் என்ன கோளாறோ? அடிக்கடி வயிற்றில் வலியென்றாள்.

ஊரார் விமர்சனம் என்ன?

"உழைத்து ஓடான பிறகு ஓய்வு என்ன பலன்? அடிக்கடி படுக்கை போடுகிறாள்!" என்று சீதம்மாளைக் கடிந்தனர். "மாட்டுப்பெண் இத்தனை நாள் சுகுமாரியாக இருந்துவிட்டாள், இப்பொழுது தென்பும் திராணியும் வந்து குதிக்குமா? முதலிலேயே சீதம்மா மாமியாராய் லட்சணமாய் இருந்தால், இவளும் நாட்டுப் பெண்ணாய் லட்சணமாய் இருப்பாள்!" என்று முத்துலக்ஷ்மியைச் சொன்னார்கள்! அன்னையும் மனைவியும் உடல் நலம் குன்றியதனால் ஏற்பட்ட கவலையோடு, இத்தகைய பேச்சுகளும் சேர்ந்து, ரங்கநாதனுக்கு வருத்தமூட்டின. "அம்மாவின் நல்லதனம் நன்மை பயக்கவில்லை. வாஸ்தவம்!;, என்று அவனேகூட அலுத்தான்! ஏடுகள் பல உதிர்ந்து போன ஒரு அரும் பெரும் புத்தகத்தை வைத்துக்கொண்டு பெருமைப்படுவது எளிதா? குளிர்நாள் இரவு போன்று ஒரு ஒடுக்கமும் முடக்கமும் அந்தக் குடும்பத்திலே நிலவத் தொடங்கியது! நாளடைவிலே சீதம்மாள் நோயாளியாகவே தோற்றமளித்தாள். நோயை எதிர்க்கும் சக்தி அறவே இழந்துவிட்டாள் போலும்!

ஒருநாள் ஆங்கிலப் பத்திரிகை யொன்றைப் படித்துக் கொண்டிருந்தபோது ரங்கநாதனுக்குக் கசப்பான உண்மை புலனாயிற்று.

"பொறுப்பு என்பது பலம்! அதிகார பலம்! உரிமை!" இந்த வரியிலே தென்பட்ட உண்மை; அவன் இதயத்திலே வரிசூடி விட்டது!

"பொறுப்புப் போனதும் அம்மா பலமற்றுப் போய் விட்டாள் போலிருக்கு!" என்று முதலில் சோர்வுடன் சிரித்தவன், மறுகணம் பீதியினால் திகைத்தான்.

"உரிமையும் இழந்தனளோ?"

கவனித்தான்; ஊன்றிக் கவனித்தான். "ஆம்! ஆம்!"

பண்ணையாள் வருகிறான். தேங்காய் எத்தனை கொணரவேண்டியிருக்கும் என்று கேட்கிறான். சுமாராக ஒரு தொகைசொல்லுகிறாள் சீதம்மாள். ஆனால் அதை ஊர்ஜிதம் செய்வதோ, கூட்டிச் சொல்வதோ, குறைத்துச் சொல்வதோ யார்? லக்ஷ்மிதான். வீட்டிலே பண்டம்பாடியின் அவசியம் அவசியமின்மை எல்லாம் லக்ஷ்மிக்குத்தான் தெரிகிறது இப்பொழுது. "வந்தானா என்ன, சாம்பான்? எதற்கு வந்தான்?" என்று சீதம்மாள் கேட்கிறாள் ஒருநாள். முன்பெல்லாம் சாம்பன் வந்தால் யாருடன் பேசிவிட்டுப் போவான்? சீதம்மாளுடன்தான். இப்பொழுது? லக்ஷ்மியிடம் தகவல் கேட்டுக்கொண்டு, அவன் அலுவல் தீர்ந்ததும் ஓடுகிறான்!

ரங்கநாதனுக்குப் புதிர் புரிந்தது! அறிந்தோ, அறியாமலோ, "பொறுப்பு வேண்டும்" என்று மனைவியும் தாயாரும் ஆசைப்பட்டதன் பொருள் இதுதானே? ஆம்! 'பொறுப்பு'க்கு மறைவிலே 'பதவியா'? அம்மாவின் உயிரை ஒடுக்குவது இந்த ஓய்வுதான்! உள்ளத்தை ஒடுக்கி, உடலை ஒடுக்கி, உயிரையும் ஒடுக்கிவிட்ட ஓய்வுதான்!

"அம்மா நீயே பொறுப்புடன் இரு!" என்று அம்மாவிடம் நம்பும்படி சொல்லும் நிலைமை வரவேண்டுமென்று காத்திருந்தான் ரங்கநாதன். சற்று உடம்பு குணமானபின் சொன்னால்தானே நம்புவாள்?

ஆனால் அந்த நிலைமை வரவில்லை!

"அம்மா, உனக்கு நான் ஓய்வு பெறுமாறு சொன்ன வேளை நச்சு வேளையாகிவிட்டதே! எங்களிடமே ஏனைய பொறுப்புக்களையும் விட்டு விட்டு, நீ எங்களையும் பிரிந்து போனாயே!" என்று அவன் அழுது புலம்பிய நாள்தான் வந்தது!

அன்னையின் இறுதிக் கடன்கள் முடியுமுன்னே மற்றொரு மனக்கலக்கம் காத்திருந்தது அவனுக்கு! மீண்டும் கருச்சிதைவு லக்ஷ்மிக்கு. அதற்குப் பிறகு லக்ஷ்மிக்கு அடிக்கடி உடல்நலிவு, நோய். லக்ஷ்மியின் உடலிலே தெம்பு கூடவேயில்லை!

அவளுடைய உடம்பு தேற வேண்டுமென்று ஓய்வு கொடுக்க, அவளை வேட்டகம் அழைத்துப் போனான் ரங்கநாதன். மனைவியை அங்கு விட்டு விட்டு ஊர் மீண்டான்.

மீண்டவன் உடனே வேட்டகத்துக்கு ஒரு கடிதம் எழுதினான்!

"லக்ஷ்மி, உனக்கு நினைவிருக்கிறதா? என் தாய் இறந்த மறுநாள் புரோகிதர் என்ன சொன்னார்? "திவ்வியமான வேளை அது!" என்று சொன்னார்! நான் என்ன சொன்னேன் உடனே? "நல்ல வேளை அது!" என்று சொல்லும்படியாச்சா? என்று அழுதேன், பிரிவு தாங்காமல், இப்பொழுது மீண்டும் வேதனையுடன் அப்படியே கண்ணீர் சிந்துகிறேன். ஆனால், என் கை கூசாமல் வாத்தியார் சொன்னதையே சொல்லுகிறேன், என் அன்னை இறந்த வேளை திவ்யமான வேளை! அன்று ஒரு புண்ணிய நாள். ஆழ்ந்த அமைதியுடன், டாண் டாண் என்று கடியாரம் மணியடிக்கும் பொழுது, கடியாரத்தின் நாக்கு ஊசலாடும் பொழுது, அவள் தன் நாவிலே பகவான் திருநாமமுடன், நாடி ஒய்ந்தாள். நினைவிருக்கிறதா? நினைவு இருக்கும். மறந்திருந்தால் நினைவு படுத்திக் கொள்! உன் அன்னையிடமும் சொல்! போன பின்னும் என் அன்னையைப் பொல்லாங்கு தொடர்வதை நான் விரும்பமாட்டேன். உன் தாய் யாரிடமோ சொன்னாள் வீண் வார்த்தை! உன் உடல் நலக்குறைவுக்கு என் தாயின் பிரிவு தான் காரணம் என்று சொன்னாள் உன் தாய்! ஆனால் அந்தப் பேச்சிலே நஞ்சு இருந்ததம்மா, நஞ்சு!

"எந்த வேளையிலே அவள் மாமியார் தெற்கே போனாளோ தெரியவில்லை. இவளை நோக்காடு பிடுங்குகிறது!" என்று உன் தாயார் வம்பு பேச வேண்டாம்! என் தாயின் பொன்னான மனசை அறிந்த கடவுள் பொன்னுலகம் அருள்வதற்கு அவளைப் பொன்னான பொழுதிலே தான் அழைத்துக் கொண்டார்! மாமியாரின் உதவிகளையும் ஒத்துழைப்பையும் நீ என்றைக்கு ஏற்க மறுத்தாயோ அன்றே உன் உள்ளத்திலே நோய் புகுந்தது என்பதை நீ மறந்துவிடாதே! உன் அருமைத் தாயாருக்கும் புத்தி சொல், மறக்காதே!"



இவ்வாறு கடிதம் எழுதிவிட்டுத் தேம்பி அழுதான் ரங்கநாதன்.

அவள் பெற்ற மைந்தன், "அம்மா இறந்த வேளை சுபம் தான்!" என்று அழுத்தந்திருத்தமாகக் கூறும்படி விதி சதி செய்ததே, ஏன் அழக்கூடாது அவன்? அன்பு செய்த மாமியார் போனதனால் லக்ஷ்மி உடல் வாடிச் சோர்ந்தாள் என்ற புகழுரை அவனுடைய தாயார் போன பின்னும் எழவில்லையே. ஏன் அழமாட்டான் அவன்?

Edited & Published by N. R. Ramanujam & Printed by S. Rangaswami
at the Cauveri Colour Press, Besant Road, Kumbakonam.



# லலிதா

காலை வேளைக்குரிய லலிதா ராகத்தின் உருவகப்படத்தை மேலே காணலாம். மிகுந்த வேதனையுடன் காதலர்கள் பிரிவதையும் இரவும் பகலும் பிரிவதையும் சங்கேத பாஷையில் அது வெளியிடுகிறது.

பருவங்களுடனும் பகல் - இரவின் குறிப்பிட்ட நாழிகைகளுடனும் இசைந்து வருவது இந்திய ராகங்களின் தனிச் சிறப்பு. ஒவ்வொரு ராகமும் அந்தந்த வேளையின் ரஸம் அல்லது பாவத்தை வெளியிடும் சாதனமாகும்.

தினசரி இரவிலும் பகலிலும் அந்தந்த நாழிகைக்கு ஏற்ப ராகங்கள் உருவகப்படுத்தப்படுகின்றன. அகாலத்தில் பாடும் ராகங்களுக்கு ஜீவன் போய்விடுமாம்.

# தேனீர்

இரவு பகல் எந்த வேளையிலும், எந்த நிலையிலும் தேனீர் உற்சாகம் அளிக்கிறது.

